முகப்பு: கன்னியாகுமரியில் கடலில் அமைக்கப்பட்டுள்ள 133 அடி உயர திருவள்ளுவர் சிலை

நன்றி: செய்தி மற்றும் மக்கள் தொடர்புத்துறை, தமிழ்நாடு அரசு

ISBN 81-237-3484-0

முதற்பதிப்பு, 2001 (சக 1922)

Thirukkural (*Tamil*)

ரூ. **140.00**

வெளியீடு: இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
ஏ-5 கிரீன் பார்க், புதுதில்லி - 110 016

# உள்ளடக்கம்

## பொருட்பால்

## இன்பத்துப் பால்

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள்: 10-9-2000

# வாழ்த்துரை

மத்திய மனிதவள மேம்பாட்டுத்துறையின் சார்பில் இந்திய தேசிய புத்தக நிறுவனத்தின் (National Book Trust, India) மூலம் 'திருக்குறள் நூல்' நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் அவர்களின் உரையுடன் வெளிவருவது அறிந்து நிறைந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

அய்யன் திருவள்ளுவர் படைத்துள்ள திருக்குறள் நூல் ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட பழைமை உடையது; சாதி, மத, இன, மொழி போன்ற பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்டது. இஃது, உலக மானிட சமுதாயம் அனைத்திற்கும், எக்காலத்திற்கும் பொருந்தக்கூடிய பொதுவான சமுதாய நீதிகளையும், தனிமனித நல்லொழுக்க நெறிகளையும் எடுத்துரைக்கும் சிறப்புடைய, செம்மையான வாழ்வியல் நூல். இத்தகைய அறநூல் உலகில் வேறு எங்கும் எம்மொழியிலும் இல்லை என்றே சொல்லலாம். பெருமைக்குரிய இந்நூலை, இந்தியப் பேரரசின் மனிதவள மேம்பாட்டுத்துறை, தேசிய புத்தக நிறுவனத்தின் மூலம் வெளியிட மேற்கொண்டுள்ள முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன். திருக்குறள் நூலை இந்தியாவின் ஏனைய மொழிகளிலும், ஆங்கிலம் உள்ளிட்ட பல்வேறு உலக மொழிகளிலும் மத்திய அரசின் சார்பில் மொழிபெயர்த்து வெளியிடுவதற்கு இம்முயற்சி வழி வகுக்கும் என நம்புகிறேன்.

நூல் வெளியீட்டுப் பணிகள் சிறப்பாக நிறைவேற என் உளமார்ந்த நல்வாழ்த்துகள் உரித்தாகுக.

(மு. கருணாநிதி)

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் திருக்குறளுக்கு ஒரு தனிச்சிறப்பிடம் உண்டு. காலந்தோறும் தோன்றிய தமிழ் அறிஞர்கள் எல்லோரும் திருக்குறளைப் போற்றிப் பயின்றிருக்கிறார்கள். தகுந்த வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் திருக்குறளை மேற்கோள் காட்டித் தங்கள் கருத்துக்களுக்கு வலிமை சேர்த்திருக்கிறார்கள். மக்கள் மனத்திலேயும் திருக்குறளுக்கு ஓர் உயர்ந்த இடம் இருந்திருக்கிறது. இருபதாம் நூற்றாண்டில் அரசியல் இயக்கங்களும் அரசியல் தலைவர்களும் திருக்குறளில் ஈடுபாடு காட்டியிருக்கிறார்கள். தங்களுக்குரிய ஈடுபாட்டைப் பல்வேறு வகையில் புலப்படுத்தியிருக்கிறார்கள்.

திருக்குறள் என்ற நூல் சாதி சமய வட்டங்களுக்குள்ளோ, அரசியல் வட்டங்களுக்குள்ளோ அகப்பட்டுச் சுருங்கி விடாமல் மனித குலத்திற்குத் தேவையான ஒரு உயர்தனி இலக்கியமாக விளங்கி வருகிறது. திருக்குறள் எந்தவொரு தனிமனிதரையும் போற்றியதும் இல்லை, தூற்றியதும் இல்லை. எந்தவொரு சமயத்தையும் போற்றியதும் இல்லை, தூற்றியதும் இல்லை. தனிப்பட்ட விருப்புவெறுப்புகளுக்கு ஆட்பட்டு விடாமல் திருவள்ளுவப் பெருந்தகை ஓர் உயர்ந்த மனநிலையிலிருந்து மிகுந்த தெளிவோடு இந்த நூலைப் படைத்திருக்கிறார்.

திருவள்ளுவரும் திருக்குறளும் வேறல்ல. திருவள்ளுவரைப் பற்றிய வரலாற்றுச் செய்தி எதுவும் நமக்குத் திட்டவட்டமாகத் தெரியவில்லை. திருவள்ளுவரைப் பற்றி ஏராளமான கதைகள் செவிவழிச் செய்தியாக வழங்கி வருகின்றன. அந்தக் கதைகள் திருவள்ளுவரையும் திருக்குறளையும் பெருமைப் படுத்துகிற கதைகளாகவே அமைந்துள்ளன. அவை பற்றி விரிவாகத் தனியே ஆராய வேண்டும்.

சில நூற்றாண்டுகளுக்கு முன்பே திருக்குறளுக்குப் பத்து பழைய உரைகள் தோன்றி இருக்கின்றன. அந்த உரைகள் திருக்குறளை விளங்கிக் கொள்ள மிகவும் உதவியாக அமைந்துள்ளன. இருபதாம் நூற்றாண்டிலும் பல அறிஞர்கள் திருக்குறளுக்கு உரை எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதப்பட்ட உரைகளுள் நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் எழுதிய உரை இப்போது உங்கள் கைகளில் தவழுகிறது. இதற்கு முன்பே இந்த உரை பல பதிப்புகளாக வெளிவந்திருக்கிறது.

நாமக்கல் கவிஞர் அவர்கள் விரிவாக எழுதிய வேறு ஒரு உரையும் உண்டு. நீங்கள் காணுகின்ற இந்த உரை சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதப்பெற்ற ஒரு எளிய உரை. வள்ளுவர் வாய்மொழியை நன்றாக விளங்கிக்கொண்டு கவிஞர் அவர்கள் இன்றைய மொழிநடையில் எல்லோருக்கும் விளங்கும் வகையில் எளிமையாக இந்த உரையை வழங்கியிருக்கிறார். கருத்து விளக்கத்திற்காக இவர் சேர்த்துக்கொண்ட சொற்களையும் தொடர்களையும் ஆங்காங்கே பிறைக்கட்டில் தந்திருக்கிறார். திருக்குறளின் கருத்தை விளங்கிக் கொள்ள இந்த அணுகுமுறை மிகவும் உதவியாகவே இருக்கும்.

செய்யுள் எழுதுவதிலும் உரைநடை எழுதுவதிலும் மிகுந்த தெளிவும் திறமையும் பெற்ற கவிஞர் அவர்கள் திருக்குறளுக்கு இப்படி ஒரு உரையை வழங்கியிருப்பது அருமை அறிந்து போற்றத்தக்க ஒரு சிறந்த பணி.

மிகுந்த தமிழ்ப்பற்றும், நிறைந்த தமிழ் உணர்ச்சியும் வாய்க்கப்பெற்ற கவிஞர் அவர்கள் அரசவைக் கவிஞராக விளங்கியவர். ஏராளமாகத் திருக்குறளுக்கு உரைகள் எழுந்துள்ள இந்த இருபதாம் நூற்றாண்டில் இவருடைய உரைக்கும் ஒரு குறிப்பிடத்தக்க இடம் உண்டு என்பதில் ஐயமில்லை. எல்லோரும் படித்துப் பயன்பெற வேண்டிய உரை என்றே இதனைக் குறிப்பிடலாம். அறிஞர்களும் ஆர்வலர்களும் திருக்குறள்மீது ஈடுபாடு கொண்டவர்களும் இந்த உரைநூலை ஏற்றுப் போற்றுவார்கள் என்று நம்புகிறோம்.

முனைவர் பொன். கோதண்டராமன்
(பொற்கோ)
துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை
01-02-2001

# 1. கடவுள் வாழ்த்து

1. **அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
   **பகவன் முதற்றே உலகு.**

எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் முதலாக இருப்பது போல உலகத்திலுள்ள எல்லாவற்றிற்கும் இறைவன் முதலாக இருக்கிறான். உலகத்தைக் கொண்டு அதை உண்டாக்கினவரை எண்ண வேண்டும்.

2. **கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
   **நற்றாள் தொழாஅர் எனின்.**

படிப்பதன் பயன் அறிவு பெறுதல். அப்படியானால் நம் அறிவுக்கெல்லாம் எட்டாத ஒரு பொருள் இருப்பதை உணர்ந்து அதைப் போற்றாவிட்டால் படிப்பினால் என்ன பயன்?

3. **மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
   **நிலமிசை நீடுவாழ் வார்.**

அறிவுகளுக்கெல்லாம் எட்டாப் பொருளான இறைவன் எங்கே இருக்கிறான் என்றால், நம்முடைய மனத்தாமரையில் அதை உணர்ந்து வணங்கினால் உலகில் கவலையின்றி வாழலாம். வணங்குவது எப்படி என்றால்,

4. **வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு**
   **யாண்டும் இடும்பை இல.**

இறைவன் விருப்பு வெறுப்பு இல்லாதவன் என்பதை உணர்ந்து நாமும் விருப்பு வெறுப்பின்றி அவனை வணங்க வேண்டும். அப்படிச் செய்தால் எப்போதும் துன்பப்படாது இருக்கலாம்.

5. **இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
   **பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

எப்படியென்றால், இறைவன் அஞ்ஞானத்தால் உண்டாகிற நல்வினை தீவினையாகிய இரண்டுக்கும் அப்பாற்பட்டவன். அந்தப் பெருமையின் பொருளை உணர்ந்து விருப்பு வெறுப்பின்றி வணங்குகிறவர்களை இன்பதுன்பங்கள் என்ற இரண்டும் ஒன்றும் செய்ய முடியாது.

6. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

பஞ்சேந்திரிய ஆசைகள் அற்ற பகவானை உணர்வதற்கு நாம் பஞ்சேந்திரிய ஆசைகளைக் குறைத்து அதற்கிணங்க உண்மையாக நடந்து கொள்ள வேண்டும். அப்போது இனிதே வாழலாம்.

7. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

தனக்கு நிகரில்லாதவனாகிய பகவானைப் பணிந்தால்தான் நாம் ஓரளவேனும் ஆசைகள் குறைந்து மனக்கவலை இல்லாமல் இருக்கலாம். இல்லாவிட்டால் மனக் கவலைகளை மாற்றிக் கொள்ள முடியாது.

8. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

ஆசைகளே இன்றி, தர்ம சமுத்திரமாகிய பகவானை அடைக்கலம் புகுந்தால்தான் தர்மமார்க்கம் தெரியும். இல்லாவிட்டால் அதர்ம சமுத்திரம் போன்ற உலகத் துன்பங்களைக் கடக்க முடியாது.

9. கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

எல்லா நல்ல குணங்களும் வல்லமைகளும் உள்ளவனாகிய இறைவனை உணர்ந்து அவனை வணங்காத மனிதனுடைய மூளை, அம்மூளையின் குணமாகிய சிந்தனைச்சக்தி இல்லாதது என்றுதான் சொல்ல வேண்டும்.

10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

இறைவனை வணங்கி அவனைச் சரணடைகிறவர்களே பிறவித் துன்பம் என்ற கடலிலிருந்து கரையேறுவார்கள். மற்றவர்கள் அந்தப் பிறவித் துன்பக் கடலிலேயே கரையேற மாட்டாமல் தத்தளிக்க வேண்டியதுதான்.

# 2. வான்சிறப்பு

11. வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.

அமிர்தம் என்பது அதை உண்டவர்களை அழியாதிருக்கச் செய்வதுபோல உயிர்கள் இருந்து கொண்டேயிருக்கும்படி உலகத்தை அழிவின்றி வாழவைப்பது மழை. அதனால் மழை அமிர்தத்துக்கு ஒப்பானது.

12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

எப்படியென்றால், உணவினால் உயிர்வாழ வேண்டிய மனிதர்களுக்கு உணவை உற்பத்தி செய்வதும் அந்த உணவை உண்ணும்போது தாகம் தீர்க்கத் தானே ஓர் உணவாக உதவுவதும் மழைத் தண்ணீர்தான்.

13. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி.

இந்த உலகம் மிகப்பெரிய கடலால் சூழப்பட்டதாக இருந்தாலும், வானத்திலிருந்து மழை பெய்யாவிட்டால் கடலோரம் தவிர மற்ற உள்நாடுகளிலெல்லாம் உணவில்லாமல் உயிர்களைப் பசி வதைத்து விடும்.

14. ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்

ஏனென்றால் மழை வராவிட்டால் உழவர்கள் ஏர் உழுது உணவுப் பயிர்களை விளைவிக்க முடியாது.

15. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

பஞ்சத்தால் உலக மக்களைத் தவிக்கச் செய்வதும் அப்படித் தவிக்கின்றவர்களின் துன்பங்களை நீக்கித் துணை புரிந்து தூக்கி விடுவதும் எல்லாம் மழைதான்.

16. விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.

(மழையில்லாமல் ஏர் உழுது உணவைப் பயிர் செய்ய முடியாது என்றாலும் வேறு ஏதாவது இலை, காய் முதலியவற்றையாவது உண்டு

உயிர் வாழலாம் என்றாலும்) வானத்திலிருந்து மழைத்துளி விழாமல் புல்பூண்டுகூட முளைக்காது. (அப்படியிருக்க இலையும் காயும் எப்படிக் கிடைக்கும்?)

**17. நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின்.**

கடலில் இருக்கிற தண்ணீரை ஆவியாக்கி ஆகாயத்திற்குக் கொண்டுபோகிற மேகங்கள் ஒன்றாய் சேர்ந்து இடியிடித்து மழை பெய்யாமல் இருந்து விடுமானால் கடலும்கூடக் குறைந்து வறண்டுபோகும்.

**18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு**

(வானத்திலிருந்து மழை பொழிவதால்தான், வானத்தில் தெய்வங்கள் இருப்பதாக மக்கள் வானத்தை வணங்குகிறார்கள். அதனால்,) வானம் மழை பெய்யாமல் வறண்டு விட்டால் வானவர்கள் என்ற தேவதைகளுக்குச் சிறப்பான விழாக்களும் பூசைகளும் நடத்த மாட்டார்கள்.

**19. தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்**
**வானம் வழங்கா தெனின்.**

(வானவர்க்குப் பூசை செய்வது மட்டுமன்று,) மனிதனுக்கு மனிதன் உதவி செய்யும் தானதர்மங்களும், மனிதன் தனக்கே நன்மையென்று செய்கின்ற தவமும் உலகத்தில் மழையில்லா விட்டால் நடைபெறா.

**20. நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்**
**வான்இன்று அமையாது ஒழுக்கு.**

ஆகையினால் நீரில்லாமல் உலகத்தில் ஒரு காரியமும் நடக்காது. அந்த நீரும் (வாய்க்கால்களை வெட்டியும், மலைகளைக் குடைந்தும், அணைகள் போட்டும் இன்னும் பலவழிகளில்) யார் யார் எப்படி எப்படி முயன்றாலும், மழையில்லாவிட்டால் கிடைக்காது.

# 3. நீத்தார் பெருமை

21. **ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு.**

ஒழுக்கம் தவறாமல் ஆசாபாசங்களை நீக்கி வாழ்ந்து சென்ற மகான்களின் பெருமையைப் போற்றுவது நன்மை தரக்கூடியது. அதை முதலில் சொல்ல வேண்டும்.

22. **துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.**

முற்றும் துறந்த அம்மகான்களின் பெருமை அளவிட முடியாதது; அதைக் கணக்கெடுப்பது உலகத்தில் எவ்வளவு மனிதர்கள் பிறந்து இறந்தார்கள் என்பதைக் கணக்கெடுக்கப் புகுவதற்கு ஒப்பாகும்.

23. **இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு.**

பிறப்பு இறப்பு என்ற இரண்டின் தத்துவங்களை உணர்ந்து தர்ம வாழ்க்கை நடத்திய மகான்களின் பெருமையினால்தான் இந்த உலகம் ஞானஒளி பெற்றிருக்கிறது.

24. **உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.**

வைராக்கியம் என்ற அங்குசத்தால் ஐந்து இந்திரியங்களான மத யானைகளை அடக்கியாண்டு உலகத்துக்கு நன்மை உண்டாக்கக்கூடிய தெய்வீக சக்திக்கு இருப்பிடமானவர் அம்மகான்கள்.

25. **ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்**
**இந்திரனே சாலுங் கரி.**

(ஐந்து இந்திரியங்களையும் அடக்குவது ஆன்ம சக்தி தருவதற்கும் அல்லாமல் உலகத்திலேயே மேலான இன்பங்களை அடையவும் ஆற்றல் தரும்.) ஐந்து இந்திரியங்களையும் அடக்குவதால் அடையக்கூடிய ஆற்றலுக்கு இந்திரியங்களை அடக்கி யாகங்களைச் செய்து இந்திர பதவி அடைகின்ற தேவேந்திரன் கதையே சாட்சியாகும்.

**26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.**

*மற்றவர்கள் செய்ய முடியாத அபூர்வ காரியங்களைச் சாதிக்கக் கூடியவர்களே நீத்தார் எனப்பட்ட பெரியவர்கள். அப்படிச் செய்ய முடியாத துறவிகள் நீத்தாரல்லர். இங்கே சொல்ல வந்தது அந்தச் சிறிய துறவிகளைப் பற்றியன்று.*

**27. சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு.**

*சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து உணர்ச்சிகளையும் அவற்றைப் பற்றிய உண்மைகளையும் அறிந்து அவற்றை வசப்படுத்திய பெரியோரைத்தான் உலகத்தில் அறிவுடையோர் போற்றி வந்திருக்கிறார்கள்.*

**28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்.**

*அந்த மகான்கள், சொன்னது பலிக்கும் தவ வலிமை உடையவர்கள். அவர்கள் பெருமையை வேதங்கள் காட்டுகின்றன.*

**29. குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது.**

*(அவர்கள் சொன்னது பலிக்குமென்றால் அவர்கள் பிறரைச் சபித்துத் தீமை செய்ய மாட்டார்கள். தமது செல்வாக்கை நன்மைக்கே செலவிடுவார்கள்.) நீத்தார் எனப்படுவோர் நல்ல குணம் என்ற மலையின் உச்சியிலே இருப்பார்கள். அதனால் அவர்களுக்குக் கோபமே வராது. வந்தாலும் கணநேரம்கூடத் தங்காது.*

**30. அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்.**

*அவர்கள் சாந்தத்தின் நிலையமானவர்கள்; தர்மம் தவற மாட்டார்கள். எல்லாச் சீவராசிகளிடத்தும் அன்பையே மேற்கொண்டு நடப்பவர்கள்.*

# 4. அறன் வலியுறுத்தல்

31. ***சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு***
***ஆக்கம் எவனோ உயிர்க்கு.***

தர்ம ஒழுக்கத்தினால் மேன்மை வரும் என்பது நிச்சயம்; செல்வமும் வரலாம்; ஆதலால் தர்மத்தைக் காட்டிலும் மனிதனுக்கு வல்லமை தரக்கூடியது என்ன இருக்கிறது?

32. ***அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை***
***மறத்தலின் ஊங்கில்லை கேடு.***

தர்மங்களைச் செய்வது போல நன்மை தரக்கூடியதும் இல்லை; தர்மங்களைச் செய்யாமல் மறந்து விடுவது போலத் தீமை தரக்கூடியதும் இல்லை.

33. ***ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே***
***செல்லும்வா யெல்லாஞ் செயல்.***

அதனால் முடிந்தவரையிலும் தர்மகாரியங்களைச் சமயம் வாய்த்தபோதெல்லாம் மறக்காமல் செய்ய வேண்டும்.

34. ***மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்***
***ஆகுல நீர பிற.***

மனத்தில் குற்றமான நோக்கமில்லாமல் செய்கிற நல்ல காரியம்தான் அறம் என்பது. ஒரு சுயநல நோக்கத்தைக் கொண்டு எந்தத் தர்மம் செய்தாலும் அது வெறும் ஆடம்பரம் தான்; அறமாகாது.

35. ***அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்***
***இழுக்கா இயன்றது அறம்.***

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கையும் நீக்கிவிட்டுச் செய்கின்ற எல்லாக் காரியங்களும் அறங்களேயாகும்.

36. ***அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது***
***பொன்றுங்கால் பொன்றாத் துணை.***

(அறம் செய்வதை ஒத்திப் போடக் கூடாது.) பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டுவைக்க எண்ணக் கூடாது. உடனே செய்ய வேண்டும். அப்படிச் செய்ததன் பலன் உடல் இறந்த பிறகும் உயிருக்கு உதவி செய்யும் துணையாகும்.

**37. அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை.**

*பல்லக்கைச் சுமக்கிற மனிதனையும், பல்லக்கில் இருந்து சவாரி செய்கின்ற மனிதனையும் கவனித்து ஆலோசித்தால் அறம் செய்யாவிட்டால் என்ன துன்பம் என்பதையும், அறம் செய்தால் என்ன இன்பம் என்பதையும் யாரும் சொல்லாமலேயே அறிந்து கொள்ளலாம்.*

**38. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.**

*(பல்லக்கில் சவாரி செய்கின்ற சுகம் சொற்ப அறம் செய்ததால் வந்தது; மிகுந்த அறம் செய்கிறவர்கள் அதைவிட மேலான இன்பங்களை அடையலாம்.) சாகிற வரையிலும் தர்மங்களையே செய்கிறவர்கள் பிறவாதிருக்கிற பேரின்பத்தையும் பெறலாம்.*

**39. அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல.**

*(பேரின்பத்தைக் கருதாவிட்டாலும்,) அறங்களைச் செய்து அதனால் அடைகின்ற மகிழ்ச்சிதான் நல்ல இன்பம். அது புகழும் தரும். மற்ற இன்பங்கள் எல்லாம் அப்படிப்பட்ட நல்லவையல்ல. அவற்றால் புகழும் கிடைக்காது.*

**40. செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி.**

*(ஆகையினால்,) ஒருவன் தன் வாழ்நாளில் செய்ய வேண்டுமென்பது அறச்செயல்தான். செய்யாமல் விலக்கிவிட வேண்டும் என்பது பழி, பாவச் செயல்களேயாம்.*

# 5. இல்வாழ்க்கை

**41. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.**

மனைவி மக்களோடு வாழ்ந்து குடும்பம் நடத்துகிறவன் சமுதாயத்தில் உள்ள உறவினர், நண்பர்கள், எளியவர்கள் ஆகிய மூன்று இனத்தாருக்கும் நல்ல முறையில் உதவியாக இருப்பவன்.

**42. துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.**

(மேலும்,) துறவிகளுக்கும், பசித்திருக்கும் எவருக்கும், நிலைகெட்டுப் போனவர்களுக்கும் குடும்ப வாழ்க்கை நடத்துகிறவன்தான் உதவியாவான்.

**43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.**

(குடும்பியானவன் தன் கடமைகளை எந்த வரிசைக் கிரமத்தில் கவனிக்க வேண்டுமென்றால்,) மூதாதையர்களைப் பூசித்தல், தெய்வ வழிபாடு, விருந்தாக வந்திருப்பவர்கள், வீட்டில் உள்ளவர்கள் என்ற வரிசை முறையில் செய்வன செய்து விட்டுக் கடைசியாகத் தனக்கு வேண்டியதைக் கவனிப்பதுதான் சிறந்த முறை.

**44. பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.**

(அந்த முறையில் தினம்தினம் கவனிப்பது முடியாவிட்டாலும்) பழிபாவங்களுக்குப் பயந்து நடந்து கொண்டு உள்ளதில் பிறர்க்கும் பங்கு கொடுத்து உண்டு வாழ்க்கை நடத்தினால் போதும். அது இல்வாழ்க்கை முறைக்குக் குறைந்ததன்று.

**45. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.**

(சுருக்கமாகச் சொன்னால்,) எதைச் செய்தாலும் அன்போடும் தர்ம நியாயம் தவறாமலும் செய்தால் அதுதான் இல்வாழ்க்கையின் தன்மை. அதனால் தமக்கும் உலகத்துக்கும் நல்ல பயனுண்டாம்.

**46. அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன்.**

தர்மநெறி தவறாமல் மனைவி மக்களோடு இல்வாழ்க்கை நடத்தினால் ஒருவன் துறவறத்துக்குப் போய் அடையக்கூடிய நன்மை என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை.

**47. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.**

ஏனென்றால், சரியான முறையில் இல்வாழ்க்கை நடத்துகிற குடும்பி, மேலான வாழ்வு பெறத் தவநெறியில் முயற்சி செய்கிறவர்கள் எல்லாரிலும் சிறந்தவன்.

**48. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.**

(எப்படியென்றால்,) முறைப்படி நடந்து கொண்டு தர்ம நியாயம் தவறாமல் குடும்பம் நடத்துகிறவன் துறவுபூண்டு தவம் செய்கிறவர்களை விடப் பொறுப்பும் சகிப்புத் தன்மையும் உடையவன்.

**49. அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று.**

(ஆகையினால்,) மனிதனுக்குத் தர்மம் என்று சொல்லப் படுவதே குடும்ப வாழ்க்கைதான். ஆனாலும் மற்ற நெறியைக் கடைப்பிடிக்கும் துறவறத்தாரை அவமதிக்காதிருப்பது நல்லது.

**50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.**

(கடவுளை அடைய வேண்டுமென்றுதானே துறவறத்துக்குப் போகிறார்கள்? துறவறத்துக்குப் போகாமலே) உலகத்தில் வாழவேண்டிய முறைப்படி குடும்ப வாழ்க்கை நடத்துகிறவன் வேறு முயற்சி இல்லாமலும் வானத்தில் இருக்கிற தெய்வத்தோடு சேர்க்கப்படுவான்.

# 6. வாழ்க்கைத் துணைநலம்

51. **மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

குடித்தனத்துக்கு ஒத்த பெருமை உடையவளும், தன் கணவனுடைய வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்கிறவளுமான மனைவியே சரியான வாழ்க்கைத் துணைவி.

52. **மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல்.**

(குடும்பத்தின் பெருமைக்கு, மனைவிதான் காப்பாளி.) குடும்பத்துக்குப் பெருமையுண்டாக்கக்கூடிய நற்குணங்கள் மனைவியிடத்தில் இல்லாமற் போனால் வேறு என்ன சிறப்புகள் எவ்வளவு இருந்தாலும் பயனற்றவையாகும்.

53. **இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை.**

(மற்ற எது இல்லாவிட்டாலும்,) குடும்பத்துக்குப் பெருமை தரும் குணங்கள் மட்டும் மனைவியிடத்தில் இருந்தால் அந்த வீட்டில் இல்லாதது ஒன்றுமில்லை. அந்த நற்குணங்கள் மனைவியிடத்தில் இல்லாமல்போனால் அங்கே என்ன இருந்தாலும் ஒன்றும் இல்லாதது போன்றதுதான்.

54. **பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்.**

கற்பு என்ற மன உறுதியுள்ள பெண்ணைக் காட்டிலும் பெருமை தரக்கூடிய பொருள் உலகத்தில் வேறு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை என்க.

55. **தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை.**

(கற்புடைய மனைவியின் சிறப்பு என்னவெனில்,) கற்புடைய பெண் தெய்வத்தைக்கூடத் தொழமாட்டாள். அவள் கணவனையே தெய்வமாக வணங்கிச் சிறப்படைவாள். அப்படிப்பட்டவள் பெய் என்று சொன்னால் மழை பெய்யும்படியான தெய்வபலம் உள்ளவள்.

56. ***தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற***
***சொற்காத்துச் சோர்விலாள் பெண்.***

(அப்படிக் கணவனையே தெய்வமாக வணங்கா விட்டாலும் குறைந்த பட்சமாகத்) தன்னுடைய பெண் தன்மையைத் தானே காத்துக் கொள்ளக் கூடியவளாகவும், கணவனுடைய சுகசௌகரியங்களைக் கவனிப்பவ ளாகவும், திருமண ஒப்பந்த சத்தியத்தைக் காக்கக் கூடியவளாகவும் இருப்பதில் சோர்வு இல்லாதிருப்பவளே நல்ல மனைவி.

57. ***சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்***
***நிறைகாக்குங் காப்பே தலை.***

(அவள் தனக்குத்தானே காவல்.) பெண்களை வெளியே போகவிடாமல் வீட்டுக்குள்ளேயே சிறைவைத்துக் காக்கின்ற காவல் எதற்காம்? தங்களைத் தாங்களே காத்துக்கொள்கிற அவர்களுடைய கற்புணர்ச்சிதான் அவர்களுக்கு சிறந்த காவல்.

58. ***பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்***
***புத்தேளிர் வாழும் உலகு.***

பெண்களின் பெருஞ்சிறப்பாகிய கற்பு உள்ள பெண்களை மனைவியாக அடைந்தால், அப்படிப்பட்ட கணவன்மார்கள் தேவலோக இன்பத்தை இங்கேயே அடைவார்கள்.

59. ***புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்***
***ஏறுபோல் பீடு நடை.***

(மனைவி கற்புடையவளாக அமையாவிட்டால்,) பெண்களுக்குப் புகழ்தரும் கற்புக்குணம் இல்லாத பெண்ணை மனைவியாகக் கொண்டு விட்ட ஒருவனை அதற்காக யாரேனும் ஏளனம் செய்தால், அப்படி ஏளனம் செய்கிறவர்களுக்கு முன்னால் அவன் ஆண்பிள்ளைக்குரிய கம்பீரத்துடன் நிமிர்ந்து நடக்க முடியாமல் தலைகுனிய வேண்டியதுதான்.

60. ***மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்***
***நன்கலம் நன்மக்கட் பேறு.***

(ஆகையினால்,) குடும்பத்துக்கு எல்லா நன்மைகளையும் உண்டாக்கக் கூடிய மங்கலப் பொருள் மனையாளின் பெருமைதான். அந்தப் பெருமைக்கு அழகுதரும் ஆபரணங்கள் மக்களைப் பெறுவதுதான்.

# 7. மக்கட்பேறு

**61. பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற.**

நாம் அடைய வேண்டுமென்று விரும்புகிற செல்வங்களுக்குள் நல்லறிவுடைய குழந்தைகளைப் பெறுவதைக்காட்டிலும் சிறந்தது வேறு இருப்பதாக நமக்குத் தெரியவில்லை.

**62. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின்.**

(அறிவுடையவர்களாக இருப்பதன் பயனாக,) பழி பாவங்களுக்கு ஆளாகிவிடாத நல்லகுணமுடைய மக்களைப் பெற்ற தாய்தந்தையர் அவர்களுடைய அடுத்த ஏழுபிறப்புக்களிலும்கூடத் துன்பம் இல்லாதவர் களாக இருப்பார்கள்.

**63. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்**
**தம்தம் வினையான் வரும்.**

தம்முடைய மக்கள் தமக்குச் செல்வம். என்றாலும், செல்வத்தைப் போல மக்களும் பல நன்மைகளுக்கு உதவக்கூடிய நற்குண செய்கைகள் அமைந்தவர்களாகப் பிறப்பது மக்களைப் பெற்றவர்களுடைய வினைப் பயனைப் பொறுத்ததுதான்.

**64. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்.**

(மக்களுடைய குணங்களை அனுபவிப்பது பின்னாலிருக்க, அம்மக்கள் குழந்தைகளாக இருக்கும்போது,) நம் குழந்தைகள் அவர்களுடைய சின்னஞ்சிறு கைகளை விட்டுக் குழப்பிய சோறு அமிர்தத்தைவிட இனிமை தரும்.

**65. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்**
**சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.**

(மேலும்,) தாம் பெற்ற குழந்தைகளின் உடல் தம் உடலைத் தீண்டுவது உடலுக்கு இன்பமளிக்கும். தாம் பெற்ற குழந்தைகளின் பேச்சைக் கேட்பது காதுக்கு இன்பமளிக்கும்.

**66. குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்.**

(பேச்சை விட மழலைச் சொற்கள் அதிக இன்பம் அளிப்பவை.) தாம் பெற்ற குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்கக் கொடுத்து வைக்காதவர்கள்தாம் புல்லாங்குழல் ஓசையும் வீணையின் ஓசையும் இனிமையானவை என்று சொல்லுவார்கள்.

**67. தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்.**

(குழந்தைகளை வளர்ப்பதில்) தகப்பன் மகனுக்குச் செய்ய வேண்டிய நல்ல காரியம் என்னவென்றால், தன் மகன் கற்றவர் சபையில் முதல் வரிசையில் சிறப்புடையவனாக விளங்கும்படி (கல்வி கேள்வி அறிவுடையவனாக) செய்து வைக்க வேண்டும் என்பதுதான்.

**68. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது.**

தம்மைவிடத் தம்முடைய மக்கள் அறிவுடையவர் களாக விளங்குவது உலகத்திலுள்ள எல்லா மனிதருக்கும் இயற்கையாக இன்பம் தருவது.

**69. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்.**

(தன் மகன் அறிவுடையவனாக விளங்குகிறான் என்பதை விடத்) தன் மகன் மிக உயர்ந்த குணமுடைய நல்லவனாக இருக்கிறான் என்று ஊரார் புகழ்வதைக் கேட்கிறபோது ஒரு தாய், தன் மகனை அவள் பெற்றெடுத்தபோது அடைந்த மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி அடைவாள்.

**70. மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோற்றான் கொல்எனுஞ் சொல்.**

(தன்னைப் பெற்று வளர்த்து, கல்வியறிவூட்டிச் சிறப்படையச் செய்த பெற்றோருக்கு,) மகன் தந்தைக்குச் செய்ய வேண்டிய நன்றி என்ன வென்றால், இப்படிப்பட்ட அறிவும் நற்குணமும் உள்ள மகனைப் பெற்ற இவன் தந்தை என்ன தவம் செய்தானோ? என்று உலகத்தார் சொல்லும் புகழுரைதான்.

# 8. அன்புடைமை

71. அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

அன்பு என்பது மூடிவைக்க முடியாத உணர்ச்சி. ஒருவர் அன்புடையவர் என்பதை அவர் பிறருடைய துன்பத்தைக் கண்டு தம்மையறியாமல் கண்கலங்குவதே காட்டி விடும்.

72. அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

(அன்பு இல்லாதவர்களுக்கும் அன்பு உள்ளவர்களுக்கும் என்ன வேற்றுமை என்றால்) அன்பில்லாதவர்கள் எல்லாப் பொருள்களும் தமக்கே உரிமை, தாமே அனுபவிக்க வேண்டுமென்று எண்ணுவார்கள். அன்புடையவர்கள் தம் உடலையும் பிறருக்கு உதவியாகத் தந்து விடுவார்கள்.

73. அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.

(அன்புடைமைதான் மனிதனை மனிதனாக்குவது.) அரிய பிறவியாகிய மனிதப் பிறவிக்கு அன்போடு கூடிய வாழ்க்கைதான் அதன் எலும்போடு பிறந்த குணம்.

74. அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

(அன்புதான் மனித சமுதாயத்தின் அடிப்படை.) அன்புதான் ஒருவரையொருவர் விரும்புகின்ற ஆசையை உண்டாக்குவது. அந்த ஆசையினால்தான் நட்பு என்கின்ற உறவு தானாகவே உண்டாகிறது. அதனால்தான் சமுதாயம் அமைகிறது.

75. அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு.

(அன்புடையவர்கள்தாம் சிறப்படைய முடியும்.) உலகத்தை இன்பமாக அனுபவித்துப் புகழ் பெற்றவர்களுடைய சிறப்பெல்லாம் அவர்கள் அன்பைக் கடைப்பிடித்து நடந்து கொண்ட காரணத்தினால்தான்.

***76. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.***

(பிரியத்துக்காகத் தீய காரியங்களைச் செய்வது அன்பு ஆகாது) தர்மமான நல்ல காரியத்தை செய்வதுதான் அன்போடு சேர்ந்தது. ஒருவர் மேலுள்ள பிரியத்துக்காக இன்னொருவருக்குத் தீமையான காரியங்களைச் செய்வதையும் அன்பென்று சொல்லுகிறவர்கள் அறியாதவர்கள்.

***77. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.***

(அப்படிச் செய்தால்,) தர்மத்துக்கு ஒவ்வாத காரியத்தை அன்பென்று செய்தால், செய்கிறவர்களை அறக்கடவுள் வெயிலிற் சிக்கிய புழுவைப் போல துடிக்கச் செய்துவிடும்.

***78. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.***

(அன்புதான் வாழ்க்கைக்குச் செழிப்பு உண்டாக்குகிறது.) நெஞ்சத்தில் அன்பில்லாதவர்களுடைய வாழ்க்கை, நீர்ப்பசை இல்லாத கெட்டியான நிலத்தில் முளைத்துவிட்ட மரம் உயிரோடிருந்தாலும் வற்றிப்போய் செழிப்பில்லாமல் இருப்பதுபோல், வாழ்க்கை நடந்தாலும் இன்பம் இருக்காது.

***79. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு.***

உடலின் உள்ளே அமைய வேண்டிய அங்கமாகிய அன்பு இல்லாதவர்களுக்கு வெளியே காணப்படுகிற மற்ற அங்கங்கள் எவ்வளவு அழகாக அமைந்திருந்தாலும் அவற்றால் என்ன பயன்?

***80. அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.***

(ஆகையினால் அன்பிருக்கிற உடல்தான் உயிருள்ள உடல்.) அன்பு வழியில் நடந்து கொள்கிறவர்களுடைய உடல்தான் உயிருள்ளது; அன்பு இல்லாத உடல் வெறும் தோலால் மூடப்பட்ட எலும்புகள்தாம்.

# 9. விருந்தோம்பல்

***81. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி***
***வேளாண்மை செய்தற் பொருட்டு.***

வீடுவாசலோடு இருந்து கொண்டு பொருள்களைப் பாதுகாத்து மனைவி மக்களுடன் குடும்பம் நடத்துவதன் நோக்கமெல்லாம் வீட்டுக்கு வந்தவர்களை உபசரித்து உலகத்துக்கு உபகாரமாக இருப்பதற்காகத்தான்.

***82. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா***
***மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.***

(ஏதானாலும் பிறருக்கும் கொடுத்து உண்ண வேண்டும்.) சாகாமல் இருக்கச் செய்வதான தேவாமிர்தத்தை உண்பதானாலும் விருந்தாளி இல்லாமல் தானே உண்பது விரும்பத்தக்கதன்று.

***83. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை***
***பருவந்து பாழ்படுதல் இன்று.***

(விருந்தாளியை உபசரிப்பதால் யாரும் கெட்டுப்போக மாட்டார்கள்.) தினம்தினம் வருகிற விருந்தினர்களுக்கெல்லாம் உணவளித்து உபசரிக்கின்ற வனுடைய வாழ்க்கை அதனால் வறுமையுற்றுக் கெட்டுப் போகுமென்பது இல்லை.

***84. அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து***
***நல்விருந்து ஓம்புவான் இல்.***

(அப்படிப்பட்டவனுடைய வீட்டில் எது இல்லாவிட்டாலும் எப்போதும் மகிழ்ச்சி இருக்கும்.) முகமலர்ச்சியோடு தகுதியுடைய விருந்தினர்களை உபசரிக்கிறவனுடைய வீட்டில் மனமகிழ்ச்சியோடு திருமகள் வாசம் செய்வாள்.

***85. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி***
***மிச்சில் மிசைவான் புலம்.***

(அவன் தனக்குள்ள முகமலர்ச்சியோடு கொடுப்பவன். அத்துடன்,) விருந்தினர்களுக்கு உணவிட்டு மிச்சத்தை உண்பான். மிச்சம் இல்லை யானால் பட்டினியாகவும் இருந்து விடுவான். அப்படிப்பட்டவனுக்கு அவனுடைய சொந்த நிலத்தில் விளைந்துதான் தானியம் வரவேண்டும் என்பதில்லை.

86. **செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு.**

(அப்படிப்பட்டவன் எவ்வளவு விருந்தினர்கள் வந்தாலும் வரவேற்பான்.) வந்திருந்த விருந்தினர்களை உபசரித்து வழியனுப்பி விட்டு மேலும் வரக்கூடிய விருந்தினரை எதிர்பார்த்திருக்கும் மனமுடைய அவனைத் தேவர்கள் தமக்கு நல்ல விருந்தாளியாகக் கொண்டாடுவார்கள்.

87. **இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்.**

(விருந்திடுதல் என்பது பெருஞ்செலவு செய்து உயர்ந்த உண்டிகள் செய்வதன்று.) விருந்திடுவதற்கு இவ்வளவு அவ்வளவு என்ற கணக்கில்லை. எந்த அளவுக்குச் செய்தாலும் அந்த அளவுக்கு நல்ல காரியம் செய்த பலன் உண்டு.

88. **பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி**
**வேள்வி தலைப்படா தார்.**

(இல்லறம் நடத்தி விருந்தோம்புவதே ஒரு தவம்.) வீட்டோடிருந்து விருந்தினரை உபசரிக்கும் நல்ல காரியத்தைச் செய்யத் தெரியாதவர்கள் தாம் ஆசைகளை எல்லாம் விட்டு விட்டோம் என்று மிகவும் கடினமான துறவறத்தை மேற்கொண்டு நோன்பு காப்பார்கள்.

89. **உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா**
**மடமை மடவார்கண் உண்டு.**

(விருந்தோம்பப் பணக்காரராக இருக்க வேண்டும் என்பதில்லை. ஆனால் பணம் இருந்தும் விருந்தோம்பா விட்டால்,) விருந்தினரை உபசரிக்காதவர்கள் பணக்காரராக இருந்தாலும் அவர்கள் தரித்திரர்கள் தாம்; அவர்களுக்கு முட்டாள்தனந்தான் மிச்சம்.

90. **மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து.**

(பணம் இருந்தோ இல்லாமலோ விருந்தினர்கள் முகம் கோணாமல் உபசரிக்க வேண்டும்.) அனிச்சம் என்ற மலர், மனிதன் அதை மோந்தவுடன் வாடிப்போகும். அதைப் போல விருந்தாளிகளை விருந்திடுவோன் முகங்கோணிப் பார்த்தாலும் கூட விருந்து கெட்டுப்போகும்.

# 10. இனியவை கூறல்

**91. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.**

இல்வாழ்க்கையின் பயன்களைச் செம்மையாக அறிந்தவர்களுடைய வாயிலிருந்து வெளிவரும் சொற்கள் இனிமையாகவும் அன்பு கலந்தனவாகவும் வஞ்சக நோக்கம் இல்லாதனவாகவும் இருக்கும். இதுதான் இனியவை கூறல்.

**92. அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொல னாகப் பெறின்.**

(இந்தக் குணம் தானம் கொடுப்பதினும் சிறந்தது.) முக மலர்ச்சியோடு இனிய வார்த்தைகளைச் சொல்லுவது மனப்பூர்வமாகத் தானம் கொடுப்பதிலும் நல்லது.

**93. முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்.**

(தர்மம் என்பதே இனியவை கூறுவதில் அடங்கி விடும்.) முகமலர்ச்சியோடு இனிமை தரப்பார்ப்பதே மனப் பூர்வமாக இனிய வார்த்தைகளைச் சொல்லுவதே அறங்களின் அடிப்படை.

**94. துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.**

(அப்படிப்பட்டவர்களுக்கு வறுமையே வராது.) யாரிடத்திலும் இன்பம் உண்டாகக்கூடிய இனிய சொற்களையே பேசுகின்றவர்களுக்கு துன்பம் தருகிற பசிப்பிணியே வராது.

**95. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.**

(பசி வராமல் இருப்பதற்காக மட்டுமல்ல,) வணக்கமுடையவனாகவும் இனிய சொற்களே பேசுகிறவனாகவும் இருப்பதுதான் மனிதனுக்கு அழகு; அதுமட்டுமல்ல, அதனால் வேறுபல நன்மைகளும் உண்டு.

**96. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.**

(அந்த வேறுபல நன்மைகள் என்னவென்றால்,) நல்ல எண்ணத்தோடு

நல்ல சொற்களையே பேசினால் பாவங்கள் குறைந்து புண்ணியம் அதிகமாகும்.

*97. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று*
*பண்பின் தலைப்பிரியாச் சொல்.*

(நல்ல எண்ணம் என்பது பிறருக்கு நன்மை வர எண்ணுவது.) பிறருக்கு நன்மை உண்டாகும்படி சொல்லுவதன் பண்பு கெடாதபடி இனிய வார்த்தைகள் பேசுகின்றவனுக்கு அருள் குணத்தை உண்டாக்கிப் பல நன்மைகளை செய்யும்.

*98. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்*
*இம்மையும் இன்பந் தரும்.*

(அதனால் இம்மைக்கு மட்டுமல்ல, மறுமைக்கும் உதவும்.) மனதில் கெட்ட எண்ணம் இல்லாமல் இனிய சொற்களையே பேசினால் அது இம்மை மறுமை இரண்டுக்கும் நன்மை உண்டாக்கும்.

*99. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ*
*வன்சொல் வழங்கு வது.*

(மறுமையைப் பற்றி எண்ணாவிட்டாலும் இம்மையிலேயே கண்ணாரப் பார்க்கிறோம்.) இனிய வார்த்தைகளால் இனிய பலன்கள் உண்டாவதைத் தினம்தினம் கண்ணுக்கு முன்னால் பார்த்துக் கொண்டிருக்கிற மனிதன், எதற்காகத் துன்பத்தை உண்டாக்குகிற கடுஞ் சொற்களைப் பேசுகிறானோ தெரியவில்லை.

*100. இனிய உளவாக இன்னாத கூறல்*
*கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.*

ஆகையினால் இனிய வார்த்தைகள் வேண்டிய மட்டும் இருக்கும் போது, துன்பமான வார்த்தைகளைப் பேசுவது ஒரு மரத்தில் பழங்கள் வேண்டிய மட்டும் இருக்கப் பழத்தை விட்டுப் பச்சைக் காய்களைப் பறித்துக் கொள்வது போலத்தான்.

# 11. செய்ந்நன்றி அறிதல்

**101. செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்ற லரிது.**

நம்மிடத்தில் ஒரு உதவியும் முன்னால் பெறாதவராக இருந்தும் தக்க சமயத்தில் ஒருவர் நமக்குத் தாமாகவே செய்கிற உதவிக்கு ஈடாக மண்ணுலகம், விண்ணுலகம் இரண்டையும் கொடுத்தாலும் போதாது.

**102. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது.**

ஒருவர் செய்த உதவி சிறியதாக இருந்தாலும் அது செய்யப்பட்ட சமய சந்தர்ப்பத்தை ஒட்டி அதை இந்த உலகத்தை விடப் பெரிதாக மதிக்க வேண்டும்.

**103. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்**
**நன்மை கடலிற் பெரிது.**

பிரதிப் பிரயோசனத்தைக் கருதாமல் செய்கிற உதவியிலுள்ள அன்பை அளக்கப் போனால் அது கடலை விடப் பெரியதாக, அளக்க முடியாததாகும்.

**104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்தெரி வார்.**

உதவியின் பயனை உணரக்கூடியவர்கள், ஒருவர் தமக்குச் செய்த உதவி தினையளவு சிறியதானாலும் அதைப் பனையளவாக உயர்த்திப் பாராட்டுவார்கள்.

**105. உதவி வரைத்தன்று உதவி உதவி**
**செய்யப்பட்டார் சால்பின் வரைத்து.**

உபகாரத்தின் மதிப்பு உபகாரம் எவ்வளவு என்றதைப் பொறுத்தது அல்ல; உபகாரத்தைப் பெற்றுக் கொண்டவனுடைய குணம் எவ்வளவு பெரிதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அதுவும் பெரியதாகும்.

**106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க**
**துன்பத்துள் துப்பாயார் நட்பு.**

(உதவி செய்தாலும் செய்யாவிடினும்,) குற்றமற்ற நல்லவர்களுடைய நட்பை ஒருபோதும் மறக்கக்கூடாது. ஆனால் துன்பக் காலத்தில் உதவி

செய்தவர்கள் குற்றமுள்ளவர்களானாலும் அவர்களுடைய நட்பைத் தள்ளிவிடக் கூடாது.

107. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(ஏனெனில்,) துன்பக்காலத்தில் வந்து உதவி செய்து துன்பங்களைத் துடைத்து விட்டவர்களுடைய உறவை நன்றியுள்ளவர்கள் ஏழேழு தலைமுறைக்கும் நினைத்துப் பார்ப்பார்கள்.

108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

(துன்பக்காலத்தில் உதவியவர்கள் பிற்காலத்தில் ஒரு குற்றம் செய்து விட்டாலும்,) துன்பக் காலத்தில் செய்த உதவியை மறப்பது நல்லதல்ல. பின்னால் அவர்கள் செய்யும் குற்றத்தை உடனே மறந்து விடுவது நல்லது.

109. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்.

ஒருவன் கொலை செய்து விடுவதைப் போன்ற துன்பத்தைச் செய்து விட்டாலும் அவன் முன் நம்முடைய துன்பக்காலத்தில் உதவி செய்த ஒன்றை நினைத்துப்பார்த்தால் இப்போது அவன் செய்த துன்பங்கள் மறைந்து விடும்.

110. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(துன்பக்காலத்தில் அவன் செய்த நன்றிக்காகப் பின்னால் செய்த துன்பத்தை முற்றிலும் மறந்துவிட முடியாவிட்டாலும், அவனுக்குத் திருப்பித் துன்பம் செய்யாமலாவது இருக்க வேண்டும். ஏனெனில்,) எந்த நன்மையை அழித்து விட்டவனுக்கும் அதனாலுண்டாகும் தீவினையிலிருந்து தப்பித்துக்கொள்ள வழியுண்டு. ஆனால் துன்பக்காலத்தில் செய்த உதவியை அழித்து, உதவி செய்தவனுக்குத் தீமை செய்வோனுக்குத் தப்பித்துக்கொள்ள மார்க்கம் இல்லை.

# 12. நடுவுநிலைமை

111. தகுதி எனவொன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின்.

(ஒரு வழக்கைத் தீர்த்துவிட நடுவு நிலைமையாகப் பாரபட்ச மில்லாதிருக்க வேண்டிய ஒருவன்,) வழக்கினால் கருத்து வேற்றுமைப் பட்டவர்களுடைய நிலையில் தன்னை நிறுத்திக் கொண்டு ஆராய்ந்தால் நடுவுநிலைமை சரியாக இருக்கும்.

112. செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப்பு உடைத்து.

(வழக்கைத் தீர்ப்பவன்) ஓரவஞ்சனையற்றவனாக நடந்து கொண்டால் அந்தப் பெருமை அழியாமலிருந்து அவனுடைய பரம்பரைக்குப் பாதுகாப்பாகும்.

113. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

(ஓரவஞ்சகத் தீர்ப்பு செய்வதால் பெருத்த செல்வம் வருவதாக இருந்தாலும்,) எவ்வளவு நல்லதானாலும் நடுவுநிலைமையான நேர்மையை விட்டுவிட்டு அடையக்கூடிய செல்வத்தை அப்போதே விலக்கி விட வேண்டும்.

114. தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

(ஓரவஞ்சனையால் வருகின்ற செல்வம் சந்ததியைக் கெடுத்துவிடும்.) ஒருவன் நடுவுநிலைமை தவறாமல் இருந்தவனா அல்லவனா என்பதை அவனுடைய சந்ததிகளில் கண்டு கொள்ளலாம்.

115. கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(அதனால்,) ஏழையாக இருப்பதும் பணக்காரனாக இருப்பதும் உலகத்தில் எல்லாருக்கும் உள்ளதுதான். எவ்வளவு செல்வம் வருவதானாலும் மனம் நேர்மையை விட்டு, (செல்வத்தைக் கருதி) கோணாமல் இருப்பதுதான் உயர்ந்த குணமுடையவர்களுக்குச் சிறப்புத் தருவது.

**116. கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின்.**

(நடுவு நிலைமை தவறக்கூடாது என்பதை ஒருவனுடைய மனச்சாட்சியே சொல்லும்.) ஒருவன் நடுவு நிலைமை தவறிப் பாரபட்சமாக ஒரு தீர்ப்புச் சொல்ல நினைக்கும்போது அவனுடைய மனச்சாட்சி 'நான் கெட்டுப் போவேன்' என்று எச்சரிக்கும். அதை அறிய வேண்டும்.

**117. கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.**

(நடுவு நிலைமை உள்ளவன் ஏழையாக இருந்தாலும்,) நடுவு நிலைமை தவறாமல் நடந்து கொள்ளும் ஒருவன் ஏழையாக இருப்பினும் அதை ஒரு குறையாக எண்ணாமல் உலகம் அவனைச் சிறப்புள்ளவனாகவே மதிக்கும்.

**118. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.**

(ஒரு வழக்கைத் தீர்க்கும்போது) துலாக்கோல் போல நேர்மை கோணாமல் வழக்கைச் சீர்தூக்கிப்பார்த்து ஒரு பக்கத்திலும் சாய்ந்து விடாமல் இருப்பதுதான் மேலான குணமுள்ளவர்களின் சிறப்பு.

**119. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.**

(அதனால்,) மனம் ஒரு பக்கத்திலும் சாய்ந்து விடாமல் இருந்தால் வழக்கில் தீர்ப்புச் சொல்லுவதும் நடுவுநிலைமை தவறாததாகவே இருக்கும்.

**120. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்.**

பிறருடைய பண்டங்களையும் தம்முடைய பண்டங்களைப் போல நிறுப்பதுதான் வியாபாரிகளின் சிறப்பு. அதுபோல பிறருடைய வழக்கையும் தம்முடைய வழக்காகச் சீர்தூக்கிச் செய்வதுதான் நடுவுநிலைமையின் சிறப்பு.

# 13. அடக்கமுடைமை

**121. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும்.**

'அடக்கமுடைமை' என்ற நற்குணம் ஒருவனுக்கு யாரும் வணங்கும் படியான தெய்வத்தன்மையை உண்டாக்கும். அடங்காமை என்ற கெட்ட குணம் ஒருவனை அவன் இருப்பதைக்கூட யாரும் அறிய முடியாத அந்தகாரமான இருளில் தள்ளிவிடும்.

**122. காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்**
**அதனினூஉங் கில்லை உயிர்க்கு.**

(அதனால்,) அடக்கமுடைமை என்னும் குணத்தைச் செல்வமாகப் பாதுகாக்க வேண்டும். மனிதனுக்கு அதைவிட வல்லமை தருவது வேறில்லை.

**123. செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்.**

(அடக்கமுடைமை என்பது ஒன்றுமறியாதவனாக அடங்கியிருப்ப தன்று.) கற்க வேண்டியதைக் கற்று அறிய வேண்டியதை அறிந்து அக்கல்வியறிவின் நெறியில் அடக்கமுள்ளவனாக இருந்தால், அந்த அடக்கம் எவ்வளவு மிகுந்திருக்கிறதோ அவ்வளவுக்குச் சிறப்புண்டாகும்.

**124. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**

(அடங்கியிருப்பதென்றால்), தன்னுடைய கொள்கையை விட்டு விடாமல் பிறரிடம் தணிவாகப் பேசி அடங்கி நடந்து கொள்ளுகிறவனுடைய புகழ் மலையைவிட மிகப் பெரிதான தோற்றமுண்டாக்கும்.

**125. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வந் தகைத்து.**

(அந்த அடக்கம் செல்வமுடையவர்களிடமும் இருந்தால்), பிறரிடத்தில் பணிவாக அடங்கி நடப்பது எல்லாருக்கும் நல்லது தான். ஆனாலும் செல்வம் உள்ளவர்களிடத்தில் அந்தப் பணிவான அடக்கம் அமையுமானால் அது செல்வத்தோடு செல்வம் சேர்ந்தது போலாகும்.

**126. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.**

(தம்முடைய ஐந்து புலன்களிலும் அடக்கமுடையவர் களாக இருப்பதே சிறந்த அடக்கமுடைமையாகும்.) ஆமையானது தன் நான்கு கால்கள், தலை ஆகிய ஐந்தையும் தன் இச்சைப்படி ஓட்டுக்குள் அடக்கிக் கொள்வதைப்போல மனிதன் ஐந்து ஆசைகளையும் ஒரு பிறவியில் அடக்கியாள முடியுமானால் அது பின்வரும் ஏழு பிறவிகளுக்கும் பாதுகாப்பளிக்கும்.

**127. யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு**

(ஐந்து புலன்களில் மற்ற) எதை அடக்காவிட்டாலும் நாக்கை அடக்கியாள வேண்டும். நாக்கை அடக்கிப் பேசாவிட்டால் சொல்குற்றம் ஏற்பட்டுத் துன்பப்பட நேரிடும்.

**128. ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.**

(ஏனென்றால்), பேசுவதில் ஒரு சொல்லானாலும் கெட்ட அர்த்தத்தைக் கொடுக்கக்கூடியதாக இருந்து விட்டால் காரியமும் கெட்டு அடக்கமுடைமையும் கெட்டுப்போகும்.

**129. தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.**

(சொல்குற்றம் ஒருவரைப் புண்படுத்தி விடலாம். அப்படியானால்), தீயினால் சுடப்பட்டு உண்டான புண், வெளியே தழும்பு நிலைத்து விட்டாலும் உள்ளே ஆறிப்போகும். ஆனால் வாயினால் சுடப்பட்டு உண்டான புண் வெளியே தெரியாவிட்டாலும் உள்ளத்தில் ஆறாமல் இருந்து கொண்டே துன்பமுண்டாக்கும்.

**130. கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.**

(நாக்குப் பதற்றத்துக்குக் காரணம் கோபம்தான்; அதனால்,) கோபத்தை அடக்கப் பழகி, பேச்சில் நாவடக்கம் உடையவனாக இருந்தால் அப்படிப்பட்டவனுடைய நலத்தை அறக்கடவுள் தானாகவே தன் கடமையாற் காக்கும்.

# 14. ஒழுக்கமுடைமை

**131. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்.**

ஒருவனுக்கு மேன்மையுண்டாக்குவது நல்ல நடத்தைதான். அதனால் நல்ல நடத்தையை உயிரைவிடச் சிறந்ததாக பாதுகாக்க வேண்டும்.

**132. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்**
**தேரினும் அஃதே துணை.**

உடல் வருந்தியாவது மிகவும் கருத்தாக ஒழுக்கம் என்னும் நன்னடத்தையை வளர்க்க வேண்டும். எத்துணை நூல்களைப் படித்து எவ்வளவு சிந்தனை செய்து ஆராய்ந்து பார்த்தாலும் நல்லொழுக்கம்தான் ஒருவனுக்குத் துணை புரியக்கூடியது.

**133. ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்.**

(குலமும் ஒழுக்கத்தால்தான்;) உயர்ந்த குலம் என்பதே உயர்ந்த ஒழுக்கத்தினால்தான். ஒழுக்கத்தில் தாழ்ந்தால் குலத்திலும் தாழ்ந்தவனாகி விடுகிறான்.

**134. மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.**

(பார்ப்பான் உயர்ந்த குலத்தான் என்பது அவன் வேதம் ஓதுவதால் அன்று.) வேதம் ஓதுவதை மறந்து விட்டாலும் குற்றமில்லை; பிராமணன் தன்னுடைய ஒழுக்கத்தில் குறைந்தால் அவன் உயர்குலத்தான் என்பது அழிந்து போகும்.

**135. அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை**
**ஒழுக்க மிலான்கண் உயர்வு.**

(பிறப்பின் மேன்மை மட்டுமல்ல;) பொறாமை உள்ளவனுக்குச் செல்வம் சேராது; சேர்ந்தாலும் நிலைக்காது. அதுபோல ஒழுக்கமில்லா தவனுக்கு மேன்மை இருக்காது; இருந்தாலும் தங்காது.

**136. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்**
**ஏதம் படுபாக் கறிந்து.**

(ஒழுக்கம் என்பது ஒருவன் செய்கிற ஒவ்வொரு செய்கையும்

பற்றியதானதால் சிரமமாக இருக்கும். இருந்தாலும்,) ஒழுக்கம் கெடுவதால் வரக்கூடிய குற்றங்களை அறிந்த அறிவுடையவர்கள் ஒழுக்கத்தில் தளர மாட்டார்கள்.

**137. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்**
**எய்துவர் எய்தாப் பழி.**

(சாதாரண மனிதர்கள் ஒழுக்கம் கெட்டு விட்டால் அதை யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால்), ஒழுக்கத்துக்காகவே மேன்மைப் படுத்தப்பட்டவர்கள் ஒழுக்கம் கெட்டால் அவர்கள் மற்றவர்கள் அடையாத பெரும்பழிக்கு ஆளாவார்கள்.

**138. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்**
**என்றும் இடும்பை தரும்.**

(ஒழுக்கத்தால் மேன்மை அடைவது மட்டுமன்றிப் பின்னால் பல நன்மைகளும் உண்டாகும்.) நல்ல நடத்தையினால் உடனே நன்மைகள் கிடைக்காவிட்டாலும் பின்னால் நன்மைகள் முளைப்பதற்கு அது விதை தெளிப்பதாகும். ஆனால், தீய ஒழுக்கத்தால் உடனேயும் துன்பம் உண்டாகும்; பின்னாலும் துன்பம் வரும்.

**139. ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய**
**வழுக்கியும் வாயாற் சொலல்.**

(அதனால்,) நல்லொழுக்கத்தை விரும்புகிறவர்கள் தீய ஒழுக்கத்தைச் சேர்ந்த பேச்சுக்களை வாய்தவறிக்கூடப் பேச மாட்டார்கள்.

**140. உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்.**

(நல்லொழுக்கத்திற்கான பழக்கவழக்கங்களையும் இடம் காலம் அறிந்து செய்ய வேண்டும்.) எவ்வளவு படித்திருந்தாலும் உலகப் போக்கை ஒட்டி நடந்து கொள்ளத் தெரியாதவர்கள் நல்லொழுக்கத்தை அறியாதவர்கள்.

# 15. பிறனில் விழையாமை

*141. பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து*
*அறம்பொருள் கண்டார்கண் இல்.*

இன்னொருவனுக்கு உரிமையான அவனுடைய மனைவியின்மேல் காமஇச்சை கொண்டு அலைகிற மூடத்தனம் இல்லறத்தின் அர்த்தத்தை அறிந்தவர்களிடம் இருக்காது.

*142. அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை*
*நின்றாறின் பேதையார் இல்.*

இல்லற ஒழுக்கத்தில் கடைகெட்டவர்கள் எல்லாரிலும் இன்னொருவனுடைய மனைவியின்மேல் காமஆசை கொண்டு அவனுடைய வாசலுக்குப் போகிற மூடன் வேறு யாருமில்லை.

*143. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்*
*தீமை புரிந்துஒழுகு வார்.*

(அதிலும்,) தன்னை மிகவும் நம்பியிருந்தவனுடைய மனைவியின் காம இன்பத்தை விரும்பியலைகிற ஒருவன் செத்த பிணத்துக்கு ஒப்பாவான்.

*144. எனைத்துணையர் ஆயினும் என்னாம் திணைத்துணையும்*
*தேரான் பிறனில் புகல்.*

(யாரானாலும்) சிறிதேனும் எண்ணிப் பார்க்காமல் இன்னொருவனுடைய மனைவியின்மேல் காமங்கொண்டு அவனுடைய வீட்டுக்குள் நுழைகிறவன் வேறு என்ன சிறப்பு உடையவனானாலும் என்ன பயன்?

*145. எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்*
*விளியாது நிற்கும் பழி.*

(செல்வத்தாலும் செல்வாக்காலும் இந்தக் குற்றத்தை எளிதாகச் செய்து விடலாம். ஆனால் அதன் விளைவாக,) எளிதாகக் கிடைக்கிறதென்று இலேசாக மதித்துப் பிறனுடைய மனைவியிடத்துக் கொண்ட காம ஆசையினால் நெறி கடந்து நடந்து கொள்கிறவன், என்றும் நிலைக்கக்கூடிய பழியை அடைவான்.

***146. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.***

(பிறன் மனைவியின்மேல் காமம் கொள்வதால்) இன்னொருவனுடைய மனைவியிடத்தில் காமத்தொடர்பு நாடுகின்றவனுக்கு அதனால் உண்டாகும் பகைமையின் வஞ்சினமும், குற்றத்தின் பாவமும், கண்டு கொண்டால் என்னவாகுமோ என்ற அச்சமும், பிறர்பேசும் பழிச் சொல்லும் ஆகிய நான்கும் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும்.

***147. அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.***

(உலகத்தில் இல்லறம் ஒழுங்காக நடைபெறுதற்குப் பிறனில் விழையாமைதான் பிரதானம். ஆதலால்,) இல்லற முறைப்படி குடும்ப வாழ்க்கை நடத்துகிறவன் யாரென்றால், இன்னொருவனுடைய இல்லறத்துக்காக வாழ்க்கைப்பட்டிருக்கிற பெண்ணின் காம இன்பத்தை விரும்பாதவனே.

***148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.***

வேறொருவனுடைய மனைவியைக் காமக்குறியோடு கண்ணெடுத்தும் பார்க்காத மனஉறுதியை யோக்கியர்கள் தங்கள் தர்மமாகக் கொள்வார்கள். அதுமட்டுமல்ல, அவர்களுடைய ஒழுக்கமே அதுதான்.

***149. நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.***

(அப்படிப்பட்ட மன உறுதியுள்ளவர்கள் உலகத்தில் வெகு சிலரே. அதனால் இந்தக் குற்றம் உலகத்தில் அச்சம் உண்டாக்கத் தக்கதாக இருக்கிறது. அப்படி) அச்சம் தரக்கூடியதாக உள்ள இந்த உலகத்தில் மெச்சத் தகுந்தவர்கள் யாரென்றால், இன்னொருவனுடைய மனைவியைக் காம ஆசையினால் தீண்டாதவர்களே.

***150. அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.***

(ஆதலால்,) இல்லற நெறியின் வரம்புக்கு மீறிய வேறு குற்றங்களைச் செய்து விட்டாலும் இன்னொருவனுடைய வரம்புக்கு உட்பட்டவளான அவன் மனைவியுடன் காம இன்பத்தை விரும்பாதிருக்கும் நல்ல காரியமே நல்ல அறமாகும்.

# 16. பொறையுடைமை

**151. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை.**

குழி தோண்டுவதற்குத் தன்னையே வெட்டுகின்ற மனிதரைத் தானே சுமந்து கொண்டிருக்கும் நிலத்தைப் போல, ஒருவன் தன்னை அவமதித்தவர்களிடம் பொறுமை காட்டி மன்னித்து அவர்களுக்கு உதவியும் தானே செய்வது, மிக உயர்ந்த பொறையுடைமைக் குணம்.

**152. பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை**
**மறத்தல் அதனினும் நன்று.**

பொறுத்தல் என்பது ஒருவன் செய்துவிட்ட குற்றத்தை பொறுத்துக் கொள்வது. பொறுத்து மன்னித்து விடுவதை விட அக்குற்றத்தை மறந்து விடுவது, இன்னும் சிறந்த பொறையுடைமையாகும்.

**153. இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்**
**வன்மை மடவார்ப் பொறை.**

(முற்றிலும் மறந்து விடுவது கடினம். மன்னிப்பதற்கு மனப் பெருமை வேண்டும்.) மனப்பெருமை இல்லாமையிலும் இல்லாமை, விருந்தினரை உபசரிக்காமல் விட்டு விடுதல். மனப் பெருமையின் வல்லமையிலும் வல்லமை, அறிவில்லாதவர்கள் செய்துவிட்ட தீமைகளைப் பொறுத்து மன்னித்து விடுதல்.

**154. நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை**
**போற்றி ஒழுகப் படும்.**

நிறைகுணம் உள்ளவன் என்ற பெருமை நீங்காமல் இருக்க வேண்டுமானால், பொறுமையைப் பாதுகாத்து அதற்கிணங்க நடந்து கொள்ள வேண்டும்.

**155. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.**

தீங்குக்குத் தீங்கு திருப்பிச் செய்து விடுகிறவனைக் குறிப்பிடத்தகுந்த ஒரு மனிதனாக யாரும் மதிக்க மாட்டார்கள். ஆனால் தீங்கு செய்தவனையும் மன்னித்து விடுகிறவனை, மிகவும் குறிப்பிடத்தக்கவனாக மதித்து அவனுடைய பொறுமைக் குணத்தை எல்லாரும் தம் மனத்தில் போற்றி வைப்பார்கள்.

**156. ஒருத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ்.**

(ஆகையினால்,) தீங்குக்கு தீங்கு உடனே திருப்பிச் செய்து தண்டித்து விடுவதில் அப்போதைக்குத்தான் இன்பம் உண்டு. ஆனால் பொறுத்து மன்னித்து விடுவதில் சாகும் வரை பிறர் அதைப் புகழ்ந்து பேசும் இன்பம் உண்டு.

**157. திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறனல்ல செய்யாமை நன்று.**

மன்னிக்க முடியாத குற்றத்தைத் தனக்குப் பிறன் செய்து உடனே தண்டித்து விட்டாலும் குற்றமில்லை. ஆனால் உடனே திருப்பித் தண்டிக்க தைரியமில்லாமல் சும்மா இருந்து விட்டு அதை மனதில் வைத்து நொந்து கொண்டே இருந்து அவன் ஏமாந்த சமயத்தில் அதர்மமான முறையில் பழி வாங்காமல் இருப்பது நல்லது.

**158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியான் வென்று விடல்.**

(பின் என் செய்வார்கள் என்றால்,) கோப மிகுதியால் குற்றம் செய்து விட்டவர்களைப் பொறுமையுடையவர்கள் தாமாகவே அவர்களுக்கு உதவிகள் செய்து தம்முடைய பெருங்குணத்தால் அவர்களை வசப்படுத்தி விடுவார்கள்.

**159. துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.**

கோபத்தால் ஒருவன் முறைதவறிப் பேசுகின்ற துன்பந் தரும் வசைகளையும் கேட்டுப் பொறுத்துக் கொள்கிறவர்கள் துறவிகளைக் காட்டிலும் சுத்தமான சகிப்புள்ளவர்கள்.

**160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்.**

(அதனால்,) உணவு முதலிய சுகங்களைத் துறந்து பல துன்பங்களைச் சகித்துக் கொள்ளுகிற பெரியோர்களாகிய துறவிகளும் கூடப் பிறர் சொல்லும் வசைமொழிகளால் உண்டாகும் துன்பங்களைச் சகித்துக் கொள்கிறவர்களுக்கு மட்டமானவர்கள்தாம்.

# 17. அழுக்காறாமை

**161. ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு.**

பிறருடைய நல்வாழ்வைக் கண்டு பொறாமைப் படாமலிருக்கிற குணத்தை ஒவ்வொருவனும் தன்னுடைய வாழ்க்கை நெறிமுறையாக மனத்தில் வைக்க வேண்டும்.

**162. விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்**
**அழுக்காற்றின் அன்மை பெறின்.**

யாருடைய நல்வாழ்வைக் கண்டும் பொறாமை கொள்ளாத மனப்பான்மை அடைந்து விட்டால், விரும்பத் தக்க மேலான செல்வங்களுள் அதற்கிணையாவது வேறில்லை.

**163. அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்**
**பேணாது அழுக்கறுப் பான்.**

(பொறாமையினால்தான்) பல பாவச் செயல்களைச் செய்து தர்ம பலம் குறைகிறது.) பிறருடைய நல்வாழ்வைக் கண்டு பொறாமைப்பட்டுக் கொண்டிருப்பவன் தர்மபலத்தை இகழ்ந்து விடுகிறவன்.

**164. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து.**

(தர்ம பலத்தை மதிக்கிறவர்கள்) பொறாமைப்பட்டு அறமல்லாத காரியங்களைச் செய்து விட மாட்டார்கள். ஏனெனில், பொறாமைக் குற்றத்தால் விளையக்கூடிய தீமைகளை அவர்கள் அறிவார்கள்.

**165. அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்**
**வழுக்கியும் கேடீன் பது.**

(வேறு ஒரு குற்றம் செய்யாவிட்டாலும் பொறாமைக் குணமே ஒருவனைக் கெடுத்துவிடும்.) பொறாமைக் குணம் உள்ளவர்களுக்கு கேடுண்டாக்க அதுவே போதும். பகைவர்களால் கெடுக்க முடியாதவனையும் அது கெடுத்து விடும்.

**166. கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
**உண்பதூஉம் இன்றிக் கெடும்.**

(பொறாமையுள்ளவன் ஒருவருக்கொருவர் தானம் கொடுப்பதைக்

கண்டால்கூடப் பொறுக்க மாட்டான். அதனால்,) தானம் கொடுப்பதைக் கூடக் கண்டு பொறாமைப் படுகிறவனுடைய குடும்பம் உணவும் உடையுமற்றுத் தவிக்கும் படியான தரித்திரத்தை அடைந்து விடும்.

**167. அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்**
**தவ்வையைக் காட்டி விடும்.**

(அவன் செல்வமுடையவனாக இருந்தாலும் அது போய் வறுமை வந்து விடும். எப்படியெனில்,) பொறாமைப் படுகிறவன் இடத்தில் வெறுப்புக் கொண்டு சீதேவியானவள் தன் அக்காளாகிய மூதேவியிடம் அவனைக் காட்டிவிட்டு அவனை விட்டுப் போய்விடுவாள்.

**168. அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும்.**

(அதனால்,) பொறாமை என்ற பாவம் செல்வத்தையும் அழித்து, பல தீமைகளிலும் தள்ளி விடும்.

**169. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்**
**கேடும் நினைக்கப் படும்.**

(ஆனால் பொறாமைக் குணமுள்ளவர்கள் உலகத்தில் செல்வத்துடன் இருப்பதைப் பார்க்கிறோமே என்றால்,) பொறாமைக் குணமுள்ளவன் செல்வமுள்ளவனாக இருப்பதும், செம்மையான மனமுள்ளவன் ஏழையாக இருப்பதும் சிந்திக்க வேண்டிய விஷயங்கள்தாம்.

**170. அழுக்கற்று அகன்றாரும் இல்லைஅஃது இல்லார்**
**பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.**

(எப்படியெல்லாம் சிந்தித்துப் பார்த்தாலும்,) பொறாமையினால் செல்வம் பெருகினவர்களும் இல்லை; பொறாமை இல்லாமல் செல்வப் பெருக்கம் இல்லாது போனவர்களும் இல்லை என்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது. அதனால் பொறாமையுள்ளவனிடத்தில் செல்வமிருப்பதற்கும் பொறாமை இல்லாதவனிடத்தில் வறுமை இருப்பதற்கும் வேறு காரணங்கள் இருக்க வேண்டும்.

# 18. வெஃகாமை

***171. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்***
***குற்றமும் ஆங்கே தரும்.***

*நீதியில்லாமல் பிறருக்குச் சொந்தமான பொருளைக் கவர்ந்து கொள்ள ஆசைப்பட்டால் அது ஒருவனுடைய குடும்பத்தைக் கெடுத்துப் பல குற்றங்களையும் உண்டாக்கும்.*

***172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்***
***நடுவன்மை நாணு பவர்.***

*அநியாயம் செய்ய அஞ்சுகிறவர்கள், அப்போதைக்கு வரக்கூடிய நன்மைகளை மட்டும் கருதிப் பிறர்பொருளைக் கவர்ந்து கொள்ள ஆசைப்பட்டுப் பழிச் சொல்லுக்கு ஆளாகக் கூடிய குற்றங்களைச் செய்ய மாட்டார்கள்.*

***173. சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே***
***மற்றின்பம் வேண்டு பவர்.***

*(பழிச் சொல்லுக்கு மட்டுமல்ல, பாவம் வருமென்று அஞ்சுகிறவர்களும் உண்டு.) புண்ணியத்தால் வரக்கூடிய பேரின்பத்தை விரும்புகிறவர்கள், உடனே கிடைக்கிற சிற்றின்பங்களுக்கு ஆசைப்பட்டுத் தர்மமல்லாத காரியங்களை செய்ய மாட்டார்கள்.*

***174. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்பென்ற***
***புன்மையில் காட்சி யவர்.***

*(பேரின்ப ஆசையையும் கடந்த பெரியவர்கள் உண்டு.) ஐம்புல ஆசைகளையும் அடக்கி வென்றுவிட்ட குற்றமற்ற அறிவுடையவர்கள், செல்வம் இல்லையே என்பதற்காகப் பிறருடைய பொருளைக் கவர்ந்து கொள்ள ஆசைப்பட மாட்டார்கள்.*

***175. அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்***
***வெஃகி வெறிய செயின்.***

*(கூர்ந்த படிப்புள்ளவர்களிலும் பலர் வெஃகுகின்றார் களே!) கூர்ந்து கவனித்துக் கல்விகற்று விரிந்து அறிவுடையவர்கள் யாரானாலும் அவர்கள் பிறர் பொருளைக் கவர ஆசை கொண்டு வெறித்த செயல்களைச் செய்வாரானால் அவர்களுடைய அறிவு எதற்காகும்?*

176. அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(கல்வியறிவு இருந்தாலும் இல்லாவிட்டாலும் இல்லறத்தான் தெய்வக் கருணையை நம்பினவன்.) தெய்வக் கருணையை நாடி இல்லற நெறி தவறாமல் வாழ்க்கை நடத்துகிறவன், பொருளில் ஆசை கொண்டு பொல்லாத செய்ய நினைத்தால் கெட்டுப் போவான்.

177. வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

(கருணை வாழ்க்கையுடன் இல்லறம் கெட்டுப்போவது மட்டுமன்றி) பிறருடைய பொருளைக் கவர்ந்து வருவதாகிய செல்வத்தை விரும்பக் கூடாது. ஏனெனில், அப்படி வரும் செல்வத்தின் பயனாக ஒருவனுடைய செல்வநிலை உயர்ந்து விடாது.

178. அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(செல்வம் உயராது என்பது மட்டுமல்ல, உள்ள செல்வமும் அதனால் போய்விடலாம். ஆகவே,) குறையாத செல்வம் எதுவென்றால், இன்னொருவனுக்குச் சொந்தமான பொருளை அபகரிக்க நினைக்காமல் இருப்பதுதான்.

179. அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந் தாங்கே திரு.

தர்மத்தை உணர்ந்து பிறருடைய பொருளை அபகரிக்கும் ஆசை கொள்ளாத அறிவுடையவர்களுடைய தகுதிக்குத் தக்கபடி செல்வமகள் தானாகவே அவரிடம் வந்து சேருவாள்.

180. இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

(ஆகையினால்,) ஆலோசனை செய்யாமல் பிறருடைய பொருளைக் கவர்ந்து கொள்ள ஆசை கொண்டால், உள்ள செல்வமும் அற்றுப் போகும். அபகரித்து வரும் செல்வத்தை வேண்டாமென்று விலக்கி விடுதலே வெற்றி தரும்.

# 19. புறங்கூறாமை

**181. அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.**

ஒருவன் அறம் என்பதையே அறியாதவனாக அறம் அல்லாத காரியங்களைச் செய்கிறவனாக இருந்தாலும் அவன் கோள் சொல்ல மாட்டான் என்பது சிறப்புடையது.

**182. அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை.**

(அறத்தை அறிந்தவனாகவே இருந்தும் அறிந்தே தவறு செய்கிறவ னானாலும்,) அறத்தினின்றும் நழுவி அறமல்லாதவற்றைச் செய்வதை விட ஒருவன் இல்லாத இடத்தில் மறைவில் இருந்து கொண்டு ஒருவனைப் பற்றிப் பொய்யான கோள்களைச் சொல்லி மகிழ்வது கொடியது.

**183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.**

(அப்படிக் கோள் சொன்னால்தான் உயிர் வாழலாம் என்ற நிலைமை ஏற்பட்டால்,) கோள் சொல்லிப் பொய்யனாக உயிர் வாழ்வதை விட செத்துப்போவது அறநூல்கள் சொல்லுகிற புண்ணியத்தையாவது உண்டாக்கும்.

**184. கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.**

(கோள் சொல்லுவது அப்போதைக்கு நன்மையுண்டாக்குவது போலத் தோன்றினாலும், பின்னால் சொல்லுகிறவனுக்கே கேடுண்டாக்கும்.) ஒருவனுக்கு முன்னால் நின்று, அவனைத் தாட்சண்யமில்லாமல் பேசி விட்டாலும் குற்றமில்லை. ஆனால் ஒருவன் முன்னால் இல்லாதபோது பின்னால் வரக்கூடிய தீமைகளை எண்ணிப் பார்க்காமல் அவன்மீது கோள் சொல்லக்கூடாது.

**185. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.**

(கோள்சொல்வது சொல்லுகிறவனுக்கே தீமையுண்டாக்கும்.) நல்லது சொல்லும் எண்ணம் உள்ளவன்அல்லனென்பதைக் கோள் சொல்லுகின்ற அற்பத் தனமே கோளைக் காதால் கேட்கிறவனுக்குக் காட்டி விடும்.

**186. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்**
**திறன்தெரிந்து கூறப் படும்.**

(யாரிடத்தில் கோள் சொல்லுகிறானோ அவனே இவனைச் சந்தேகிப்பான்.) இன்னொருவன் மேல் பழி சுமத்தக் கோள் சொல்லுகிறவன் தான் யாரிடத்தில் கோள் சொல்லுகிறானோ, அவனே தன்னைக் கோள் சொல்லும் குற்றமுள்ளவனாகக் கருத இடமிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டு பேச வேண்டும்.

**187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பாடல் தேற்றா தவர்.**

(கோள் சொல்லுகிறவர்கள்) பிளவு உண்டாகும்படி புனைந்து பேசி, மனமொத்த நண்பர்களையும் பிரித்து வைத்து விடுவார்கள். மகிழ்ச்சி உண்டாகும்படி நல்ல வார்த்தைகளைச் சொல்லி நட்பு உண்டாக்குவது அவர்களுக்குத் தெரியாது.

**188. துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்**
**என்னைகொல் ஏதிலார் மாட்டு.**

நெருங்கிய நண்பர்களுக்கிடையிலும் குற்றங்கூறித் தூற்றிப் பேசிப் பகைமை உண்டாக்குகிற இனமாகிய இவர்கள் ஏற்கெனவே பகைமை உள்ளவர்களுக்கிடையில் என்ன செய்ய மாட்டார்கள்!

**189. அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்**
**புன்சொல் உரைப்பான் பொறை.**

(இப்படிப்பட்டவர்களை இந்த உலகம் ஏன் சுமந்து கொண்டிருக்கிறது?) ஒருவன் இல்லாத சமயம் பார்த்து அவனைப் பற்றிப் பொய்களைச் சொல்லிக் கோள் மூட்டுகிறவனுடைய பாரத்தையும் இந்தப் பூமி சுமந்து கொண்டிருப்பது தன் கடமையைக் கருதியோ?

**190. ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.**

(கோள் சொல்லுகிறவனானாலும் அதற்குக் காது கொடுக்கிறவனானாலும்,) பிறரிடம் குற்றம் காண்பதைப் போல் தன் குற்றத்தையும் காண்பானாகில் மனிதருக்குக் கோள் சொல்லுவதனால் உண்டாகிற தீமைகள் இருக்குமா? இருக்க மாட்டா.

# 20. பயனில சொல்லாமை

**191. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்**
**எல்லாரும் எள்ளப் படும்.**

ஒரு சபையிலுள்ள பல பேருக்குக் கோபம் உண்டாகும்படி பயனற்ற வார்த்தைகளைப் பேசுகின்றவன் எல்லாராலும் இகழப்பட்டு அவமானப் படுவான்.

**192. பயனில பல்லார்முன் சொல்லல் நயனில**
**நட்டார்கண் செய்தலின் தீது.**

(அவமானம் மட்டுமல்ல,) பலபேருக்கும் முன்னால், வீண் வார்த்தை களைப் பேசுவது, நண்பர்களிடத்தில் விரும்பத் தகாத குற்றங்களைச் செய்வதைவிடத் தீமை உண்டாக்கக்கூடியது.

**193. நயனிலன் என்பது சொல்லும் பயனில**
**பாரித் துரைக்கும் உரை.**

(ஏனெனில், அவன்மீது எல்லாருக்கும் வெறுப்பு உண்டாகும்.) ஒரு சபையில் பிறருக்குப் பாரமாக அலுப்பு உண்டாகும்படி வீண்வார்த்தை களை அதிகமாகப் பேசுகின்ற பேச்சே, அவன் பயனற்றவன் என்பதை வெளியாக்கி விடும்.

**194. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்**
**பண்பில்சொல் பல்லா ரகத்து.**

(பிறருக்கு அலுப்புண்டாக்குவதோடு அவனுக்கும் தீமையுண்டாக்கும்.) பலபேர் கூடிய சபையில் பயனற்றதும் தகுதியற்றதுமான பேச்சைப் பேசுவது கேட்கிறவர்களுடைய இன்பத்தைக் கெடுத்துப் பேசுகின்றவனுக்கு வரக்கூடிய நன்மைகளையும் தடுத்து விடும்.

**195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில**
**நீர்மை யுடையார் சொலின்.**

(சாதாரண மனிதர்களுக்கு மட்டுமல்ல, கல்வி கேள்விகள் நிறைந்து) மேலான நிலைமையில் உள்ளவர்கள் ஆனாலும், பலபேர் கூடிய சபையில் அவர்கள் வீண் வார்த்தைகளைப் பேசி விடுவார்களேயானால், அப்போதே அவர்களுடைய சீரும் சிறப்பும் அவர்களை விட்டு நீங்கிவிடும்.

**196.** *பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்*
*மக்கட் பதடி யெனல்.*

(சபையில் பயனற்ற சொற்களையே திருப்பித் திருப்பிச் சொல்லு கிறவனை) பயனற்ற பேச்சையே திருப்பித் திருப்பிப் பேசுகின்றவனை மனிதன் என்றா சொல்ல முடியும்? மனிதப் பதர் என்றுதான் சொல்ல முடியும்.

**197.** *நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்*
*பயனில சொல்லாமை நன்று.*

(அதனால்,) அறிவொழுக்கங்களாற் சிறந்தவர்கள், பிறரைக் கண்டிக்க அன்பில்லாத வார்த்தைகளைச் சொன்னாலும் சொல்லுவார்கள், ஆனால் வீண்வார்த்தைகளைப் பேசமாட்டார்கள்.

**198.** *அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்*
*பெரும்பயன் இல்லாத சொல்.*

(அறிவொழுக்கத்திற் சிறந்திருத்தலோடு பிறவிப்பயனை அறிந்தவர், ஆராய்ந்து பேசுவர்.) அருமையான மனிதப் பிறவியினால் அடையக்கூடிய பயன்களை ஆராயக்கூடிய அறிவுடையவர்கள் பிறருக்கு நன்மை உண்டாக்கக்கூடிய பேச்சையன்றி வேறு எதையும் பேச மாட்டார்கள்.

**199.** *பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த*
*மாசறு காட்சி யவர்.*

(அறிவொழுக்கத்தோடு பிறவிப் பயனையும் அறிந்து அதன் மேலும் ஆசாபாச மயக்கங்களை ஒழித்தவர்கள்) உலக ஆசைகளின் மயக்கங்களை ஒழித்துவிட்ட மெய்யறிவு உடையவர்கள், எப்போது எங்கே பேசினாலும் பயனில்லாத வார்த்தைகளை மறந்தும் பேசிவிட மாட்டார்கள்.

**200.** *சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க*
*சொல்லிற் பயனிலாச் சொல்.*

(ஆகையினால்,) பயனுள்ள வார்த்தைகளையே ஆராய்ந்து பொறுக்கி யெடுத்துப் பேச வேண்டும். வீண் வார்த்தைகளை ஆராய்ந்து பொறுக்கி யெடுத்து விலக்க வேண்டும்.

# 21. தீவினையச்சம்

**201. தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னுஞ் செருக்கு.**

பிறருக்குத் தீங்கு செய்வதால் தமக்கு வரக்கூடிய பாவம் என்னும் ஒரு வல்லமையுள்ள சக்திக்கு தீங்கு செய்யும் இயல்புள்ளவர்கள் அஞ்சுவதில்லை. ஆனால், நல்லவர்கள் அதற்கு அஞ்ச வேண்டும்.

**202. தீயவை தீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும்.**

(தீமை செய்வது நெருப்பை விடக் கொடியது.) நெருப்பு மற்ற பொருள்களை எரித்துச் சாம்பலாக்குமேயன்றி நெருப்பு வைத்தவனை ஒன்றும் செய்யாது. ஆனால் பிறருக்குத் தீமை செய்வது தனக்கே தீமை உண்டாக்கும். ஆகையால், அது நெருப்பை விடக் கொடியது என்று அதற்கு அஞ்ச வேண்டும்.

**203. அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல்.**

(அதனால்,) அறிவுகளுக்கெல்லாம் மிகச்சிறந்த அறிவு எதுவென்றால், பகைவருக்கும்கூடத் தீங்கு செய்யக்கூடாது என்பதே.

**204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.**

மறந்தாற்போலக்கூட பிறனொருவனுக்குக் கேடு உண்டாக்க நினைக்கக்கூடாது. நினைத்தால் அப்போதே தர்ம தேவதை அப்படி நினைக்கிறவனுக்கு கேடுண்டாக்க நினைத்து விடும்.

**205. இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலனாகும் மற்றும் பெயர்த்து.**

(ஏழையாக இருந்தாலும்) பொருள் இல்லையே என்பதற்குத் தீமை எதையும் செய்துவிடக்கூடாது. செய்தால் பொருள் இல்லாததோடு மற்ற எதுவும் இல்லாது போய்விடும்.

**206. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான்.**

(பிறருக்குத் தீமை செய்தாலும் செல்வம் வருவது நிச்சயமில்லை;

ஆனால் துன்பம் வருவது நிச்சயம். அதனால்,) துன்பம் உண்டாக்கக்கூடிய தீவினைப் பயன்கள் பின்னால் தன்னை வருத்தாமல் இருக்க விரும்புகிறவன், பிறருக்குத் தீமை செய்யாமல் இருக்க வேண்டும்.

**207. எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும்.**

(ஏனென்றால்,) எப்படிப்பட்ட பகைவர்களிடத்திலும் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால், தீவினைப் பயன் என்ற பகை நாம் எங்கே போய் ஒளிந்தாலும் நம்மை விடாமல் பின்தொடரும்.

**208. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று.**

(எப்படியென்றால்,) தீமை செய்கிறவன் தீமையே அடைவான் என்பது அவனுடைய நிழல் அவன் எங்கே போனாலும் அவனை விட்டு விலகாமல் அவன் பாதங்களோடு சேர்ந்தே இருப்பது போல விலக்க முடியாது.

**209. தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்**
**துன்னற்க தீவினைப் பால்.**

பிறருக்குத் தீமை செய்யாதிருப்பது பிறருடைய நன்மைக்காக அல்ல; தனக்குத் துன்பம் வரக்கூடாதென்று தன்னைத்தானே நேசிக்கிறவன் பிறருக்குத் தீங்குண்டாக்கும் செயல்களின் பக்கத்திற்குக் கூட நெருங்கக் கூடாது.

**210. அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்**
**தீவினை செய்யான் எனின்.**

(அதனால்,) ஆத்திரப்பட்டுப் பிறருக்குத் தீமை செய்யாமல் இருப்பவனே தனக்கு ஒரு துன்பமும் வராமல் இருக்கக்கூடியவன் என்பதை அறிய வேண்டும்.

# 22. ஒப்புரவறிதல்

**211.** **கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என்ஆற்றுங் கொல்லோ உலகு.**

(ஒப்புரவறிதல் என்பது என்னவென்றால்,) பிரதிபலனைக் கருதாமல் ஒருவன் தான் செய்ய வேண்டிய கடமை, பிருக்கு உதவி செய்வது. மழை பெய்கின்ற மேகம் உலகத்தாரிடம் என்ன பிரதியுபகாரத்தை எதிர்பார்த்துப் பெய்கிறது?

**212.** **தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு.**

(ஒப்புரவறியும் குணம் மிகுந்தவர்கள் எப்படி எண்ணுவார்கள் என்றால்,) பாடுபட்டு சம்பாதிக்கிற செல்வம் எல்லாம் உதவி பெறத் தகுந்தவர்களுக்கு உதவி செய்வதற்காகத்தான்.

**213.** **புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
**ஒப்புரவின் நல்ல பிற.**

தேவலோகத்திலானாலும், பூலோகத்தினாலும் பரோபகாரம் செய்யும் குணத்தைவிட மேலானது வேறு ஒன்றுமில்லை.

**214.** **ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்**
**செத்தாருள் வைக்கப் படும்.**

(பிறருடைய துன்பங்களைக் கண்டாலும் மனம் இரங்காதவர்கள் இருக்கிறார்களே!) தனக்கு ஏற்படும் இன்ப துன்பங்களே மற்றவர்களுக்கும் என்று பிறருடைய துன்பத்தை உணர்ந்து உதவி செய்கிறவன்தான் உயிருள்ள மனிதன். அந்த உணர்ச்சி இல்லாதவன் செத்த பிணத்துக்கு ஒப்பாவான்.

**215.** **ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்**
**பேரறி வாளன் திரு.**

(அளந்து கொடுக்கிற அறிவாளியின் ஒப்புரவு எப்படி என்றால்,) உலகத்தார் விரும்பத்தக்க நல்ல அறிவாளியிடத்தில் செல்வமிருப்பது ஊரிலுள்ளவர்களுக்கு அவரவர் தேவைக்குத் தக்கபடி தண்ணீர் கொடுத்துதவுகிற குளத்தில் நீர் நிறைந்திருப்பது போன்றது.

**216. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.**

(அறிவு கொண்டு உபகாரம் செய்கிறவனை விட உயர்ந்தவனாகிய அன்பு கொண்டு உபகாரம் செய்கிறவன் ஒப்புரவு எப்படியென்றால்,) அன்புடையவனிடத்தில் செல்வம் இருந்தால், நல்ல பழம் தரக்கூடிய மரம் நடு ஊரில் பொது நிலத்தில் பழுத்திருப்பது போல் அவரவர் விரும்பியபடி அவர்களுடைய தேவைகளுக்கு அதிகமாகவும் அவர்களே எடுத்துக் கொள்ள உதவும்.

**217. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.**

(அறிவாளிக்கும் அன்பாளிக்கும் உயர்ந்தவனாகிய தியாகியின் ஒப்புரவு எப்படியென்றால்,) பெருந்தன்மை உள்ளவனிடத்தில் செல்வம் இருந்தால் மூலிகைச் செடியானது தன் இலை, பூ, காய், பட்டை முதலியவற்றை மருந்துக்கென்று கொடுத்துக் கடைசியில் வேரோடும் தன்னைப் பிடுங்கிக் கொள்ளவும் உதவுவது போலத் தன்னையே அழித்துக் கொண்டு பிறருக்கு உபகாரமாகும்.

**218. இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர்.**

(மனிதப் பிறவியின் கடமைகளை அறிந்தவர்கள் பிறருக்கு உபகாரம் செய்யச் செல்வம் உள்ளவர்களாக இருக்க வேண்டிய அவசியமில்லை.) கடமையை உணரும் அறிவுடையவர்கள் செல்வம் இல்லாவிட்டாலும் உபகாரம் செய்யப் பின்தங்க மாட்டார்கள்.

**219. நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு.**

ஒப்புரவை அறிந்த இரக்கமுள்ளவன் தன்னை ஏழையென்று எண்ணுவது பிறருக்கு உபகாரம் செய்ய முடியாத சமயத்தில்தான்.

**220. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.**

பிறருக்கு உபகாரம் செய்வதால் வறுமையே வருமென்றாலும் அப்படிப்பட்ட வறுமையை விலை கொடுத்தாவது வாங்கிக் கொள்வதில் நன்மையுண்டு.

# 23. ஈகை

**221. வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்**
**குறியெதிர்ப்பை நீர துடைத்து.**

(எதைக் கொடுத்தாலும்) இல்லாதவர்களுக்குக் கொடுப்பதுதான் ஈகை. மற்ற எல்லாம் பிரதிப் பிரயோசனத்தை எதிர்பார்த்துக் கொடுக்கும் தன்மையுள்ளவை.

**222. நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று.**

(ஏழைகளுக்குக் கொடுப்பதில் புண்ணியத்தைக்கூட எதிர்பார்க்கக் கூடாது. அப்படியிருக்க,) நல்ல காரியத்துக்கானாலும்கூட, ஏழைகளிடத்திலிருந்து வாங்கக்கூடாது. மோட்சலோகம் கிடைக்காமல் போய்விடுவதானாலும் ஏழைகளுக்குக் கொடுப்பதே நல்லது.

**223. இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே உள.**

(ஏழைகளுக்கும் எப்படிக் கொடுக்க வேண்டும் என்றால்,) தன்னிடம் யாசிப்பவனுக்கு இல்லை என்னும் துன்பம் தரக்கூடிய வார்த்தையை சொல்லாமலிருப்பதும், தன்னால் கொடுக்கக்கூடியதை உடனே கொடுப்பதும் நல்ல இனத்தைச் சேர்ந்தவனிடத்தில்தான் உண்டு.

**224. இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகங் காணும் அளவு.**

(இரப்பவர்களுடைய துன்பத்தைத் தீர்க்க முயலாமல் வெறும் அனுதாபம் மட்டும் பேசுவது நல்லதன்று.) பிச்சை கேட்பவனுடைய குறை தீர்ந்து அவன் முகம் மகிழ்ச்சி காட்டுகிற வரையிலும் வெறும் இரக்கம் பேசுவது நல்லதன்று.

**225. ஆற்றுவார் ஆற்றல்பசி ஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்.**

(ஈகைகளிற் சிறந்தது ஏழைகளுக்கு அன்னமிட்டு அவர்கள் பசிப்பிணியை மாற்றுவது. அது தவம் செய்வதினும் சிறந்தது.) தவம் செய்கிறவனுடைய வல்லமை அவன் தன் பசியைப் பொறுத்துக் கொண்டு துன்பம் சகிப்பது. அதுவுங்கூட அந்தப் பசியை உணவளித்துத் தீர்த்து வைக்கிற இல்லறத்தானுடைய வல்லமைக்குப் பிற்பட்டதே.

**226. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி.**

ஏழைகளின் கடும்பசியைத் தீர்த்து வைக்கிற அந்தக் காரியம் ஒருவன் பின்னால் தனக்கு வேண்டுமே என்று செல்வத்தை ஓர் இடத்தில் சேமித்து வைப்பது போன்றது.

**227. பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது.**

(பின்னால் தனக்கு உதவுவது எப்படியானாலும்,) பசித்து வந்தவர்களுக்குப் பங்கு கொடுத்து அவர்கள் பசியை ஆற்றிவிட்டுப் பிறகு தான் உண்பவனைப் பசி என்ற கொடிய துன்பம் தீண்டக்கூட முடியாது.

**228. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வன்க ணவர்.**

(பெரும் செல்வம் கிடைத்தும்) தம்முடைய செல்வத்தையெல்லாம் அப்படியே விட்டுவிட்டு உயிரிழந்து போகிறவர்கள் ஏழைகளுக்குக் கொடுத்து அவர்களுக்கும் தமக்கும் மகிழ்ச்சியுண்டாக்கும் இன்பத்தை அறிவதில்லையே!

**229. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய**
**தாமே தமியர் உணல்.**

(ஈகைக் குணத்துக்கு பெரும் செல்வம் வேண்டுமென்ப தில்லை.) பிச்சை எடுக்கும் இழிவான நிலைமை உள்ளவனுக்கும் இன்னும் இழிவான நிலைமை உண்டாக்கக் கூடியது எதுவென்றால், அவன் நெடுந் தெருக்களில் வீடுதோறும் பிச்சையெடுத்து நிரம்பக் கிடைத்த உணவிலும் இன்னொருவனுக்குக் கொஞ்சம் கொடுக்காமல் அத்தனையையும் தானே உண்பதுதான்.

**230. சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை.**

(யாருக்கும் எதையும் கொடுக்க மனமில்லாமல் வாழ்ந்த ஒருவன் இறந்து விட்டாலும்,) சாவைக் காட்டிலும் துக்கம் உண்டாக்கக்கூடிய சேதி வேறொன்றுமில்லை. ஆனால் ஈகைக்குணம் இல்லாதவனைப் பற்றிய அந்தச் சேதிகூட கேட்பவர்களுக்கு இன்பம் உண்டாக்கும்.

## 24. புகழ்

231\. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

ஏழைகளுக்குக் கொடுப்பதையும் அதனால் புகழப்பட்டு வாழ்வதையும் தவிர இந்தப் பிறவியினால் அடையக்கூடிய பயன் வேறு எதுவும் இல்லை.

232\. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

(இயலாகவும் இசையாகவும் நாடகமாகவும்) சொன்னவர்கள் சொன்னதெல்லாம், இரந்து கேட்ட ஏழைகளுக்கு இல்லையென்னாமல் கொடுத்தவரது புகழைப் பற்றியதுதான்.

233\. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.

(எந்தக் காலத்திலோ தானம் கொடுத்தவர்களுடைய கீர்த்தி இந்தக் காலத்திலும் பேசப்படுகிறது. அதனால்,) ஒரு பொருளும் நிலைத்திருக்காத இந்த உலகத்தில் உயர்ந்த புகழைத் தவிர அழிவில்லாமல் நிலைத்திருப்பது வேறொன்றுமில்லை.

234\. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

உயிரோடிருக்கின்ற வரையில் ஏழைகளுக்குக் கொடுத்துப் புகழ் வரக்கூடிய காரியங்களைச் செய்துவந்தால் நினைவில் இருந்து வருகிற தேவலோகத்தைப் பற்றி ஆசைப்பட வேண்டியதில்லை.

235\. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

(புகழ்பெற்றவர்கள் இறந்தாலும் இருப்பவர்களே.) சங்குபோல உயிர்போனபின்பும் உருவம் இருக்கக்கூடிய அழிவும், உயிரும் உடலும் போன பின்பும் உலகத்தில் பேசப்படும் புகழ் இருக்கக்கூடிய மரணமும் சாமர்த்தியமுள்ள அறிவாளிகளுக்கன்றி மற்றவர்களுக்குக் கிடைக்காது.

**236. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.**

எந்தக் காரியத்துக்கானாலும் பல பேருக்கு இடையில் நானென்று முன்னால் வருகிறவன் அந்தக் காரியத்திலாவது புகழுள்ளவனாக இருக்க வேண்டும். அது இல்லாதவன் முன்னால் வருவதைவிட மறைவில் இருப்பதே நல்லது.

***237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை***
***இகழ்வாரை நோவது எவன்.***

(அப்படித் திறமையும் புகழுமில்லாதவர் ஒரு காரியத்துக்கு நானென்று முன்வந்து அக்காரியம் கெட்டுப் போய் அதற்காக அவரைப் பிறர் இகழ்ந்தால்,) பிறர் புகழும்படி நடந்துகொள்ளத் தெரியாதவர் தம்மைத் தாமே நொந்து கொள்ள வேண்டுமேயன்றித் தம்மை இகழ்வாரை நொந்து கொள்வதில் என்ன பயன்?

***238. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்***
***எச்சம் பெறாஅ விடின்.***

(எந்த விதத்திலாவது சிறிதேனும் புகழ்தேடிக் கொள்ளாவிட்டால்,) உலகத்திற் பிறந்த ஒவ்வொரு மனிதனும் அவனுக்குப் பின் அவரைப் புகழ்ந்து பேசக்கூடிய ஏதாவது ஒன்றையேனும் மிச்சம் விட்டுப் போகா விட்டால் அது குற்றமென்றே சொல்லப்படும்.

***239. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா***
***யாக்கை பொறுத்த நிலம்.***

(இந்த எண்ணமில்லாத குடிமக்கள் மிகுந்த ஒரு நாடு) புகழ் பெறவேண்டும் என்ற உணர்ச்சியில்லாத வெறும் உடல்களான மக்கள் மிகுந்துள்ள ஒரு நாட்டில் குற்றமற்ற செல்வ வளமும் அதன் பயன்களும் குன்றியதாகத்தான் இருக்கும்.

***240. வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய***
***வாழ்வாரே வாழா தவர்.***

(ஆகையினால்,) புகழ் தேடாத குற்றம் இல்லாதிருக்கும்படி முயற்சி செய்கிறவர்களே வாழத் தெரிந்தவர்கள். உள்ள புகழும் அழிந்து போகும்படி அபகீர்த்திக்கான காரியங்களைச் செய்கிறவர்களே வாழத் தெரியாதவர்கள்.

# 25. அருளுடைமை

**241. அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

உடைமைகளிலெல்லாம் சிறந்த உடைமை அருள் உடைமை. வெறும் பண உடைமை தீயவர்களிடத்திலும் உண்டு.

**242. நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்**
**தேரினும் அஃதே துணை.**

(எல்லா மார்க்கங்களும் சீவகாருணியத்தைத்தான் போதிக்கின்றன. ஆகையால்,) நல்ல முறையில் ஆராய்ந்து பார்த்துக் கருணை வாழ்வைக் கடைப்பிடிக்க வேண்டும்; பல மார்க்கங்களையும் ஆராய்ந்து பார்த்தால், அந்தக் கருணை வாழ்க்கைதான் துணையாகக் கூடியது என்பது தெரியவரும்.

**243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்.**

(அருள் நெறியை மேற்கொண்டவர்கள் உலகத்திலுள்ள மருள் நெறி களோடு சேரமாட்டார்கள்.) சீவகாருணியம் நிறைந்த மனமுடையவர்கள் அறியாமை நிறைந்த உலக விவகாரத் துன்பங்களில் ஈடுபடமாட்டார்கள்.

**244. மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப**
**தன்னுயிர் அஞ்சும் வினை.**

(சீவகாருணியம் உள்ளவன் தன்னுயிரைப் பற்றிப் பயப்படமாட்டான்.) உலகத்தில் உள்ள மற்ற உயிர்களையெல்லாம் தன்னுயிர்போலப் பாதுகாக்கும் கருணை புரிகிறவனுக்குத் தன்னுயிரைப் பற்றிப் பயப்பட வேண்டிய வேலையே இருக்காது.

**245. அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்**
**மல்லல்மா ஞாலம் கரி.**

(அதற்கு இந்த உலகத்தின் சரித்திரமே சாட்சி.) சீவகாருணியத்தை மேற்கொண்டு நடப்பவர்களுக்குத் தம்முயிரைப் பற்றிய கவலையே இல்லை என்பதற்கு இந்த உலகத்தில் சீவகாருணிய ஒழுக்கத்தில் வாழ்ந்தவர் களுடைய சரித்திரங்களே சாட்சி.

**246. பொருள் நீங்கிப்பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி**
**அல்லவை செய்தொழுகு வார்.**

சீவகாருணிய ஒழுக்கத்தைவிட்டு அதற்கு மாறான காரியங்களைச் செய்கிறவர்கள் கையிலிருந்த பண முடிப்பை வைத்த இடம் மறந்துபோய்த் திண்டாடுகிறவர்களுக்கு ஒப்பாவார்கள்.

**247. அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு.**

247. (இல்லறத்துக்குப் பொருள் முக்கியம்; துறவறத்துக்கு அருள் முக்கியம்.) செல்வம் இல்லாதவன் இந்த உலகத்தில் வாழ்க்கை நடத்த முடியாது. அதுபோல் சீவகாருணியம் இல்லாதவன் மோட்ச உலகத்தில் வாழ்வு பெற முடியாது.

**248. பொறுளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்**
**அற்றார்மற் றாதல் அரிது.**

பொருட்செல்வத்தை இழந்துவிட்டவர்களுக்கு அது மீண்டும் எங்கிருந்தாவது வந்து அவர்கள் செழிப்படைய முடியும். ஆனால் அருட்செல்வத்தை மனத்திலிருந்து இழந்து விட்டால் மீண்டும் அது தானாக வந்துசேர முடியாது.

**249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்**
**அருளாதான் செய்யும் அறம்.**

(அருளை இழந்துவிட்ட பின் அவன் நடத்தும் துறவறம் தடுமாற்றந்தான்) அருளில்லாதவன் நடத்துகின்ற துறவறம் புத்தித் தெளிவில்லாத பைத்தியக்காரன் மெய்ஞ்ஞானத்தை விளக்கிச் சொல்வதற்கு ஒப்பாகும்.

**250. வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லும் இடத்து.**

(துறவியானாலும் அல்லது மற்றவரானாலும் பிற உயிரிடம் இரக்கம் வேண்டுமென்ற அருளுடைமையை உணர்த்துவதற்கு என்ன செய்ய வேண்டுமென்றால்,) தன்னை விட வலிமை குறைந்த ஒருவனை (ஒரு பிராணியைத்) தான் வதைக்கப் போகும்போது, தன்னைவிட வலிமை மிகுந்த ஒருவன் (ஒரு பிராணி) தன்னை வதைக்க வந்தால் தனக்கு எப்படியிருக்கும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

## 26. புலால் மறுத்தல்

**251. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.**

தன்னுடைய உடல் பெருக்க வேண்டுமென்று இன்னொரு பிராணியைக் கொன்று அதன் உடலை உண்பவன் எப்படி அருளுடையவனாக முடியும்?

**252. பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.**

செல்வத்தைப் பாதுகாக்காதவனுக்குச் செல்வத்தால் வரும் நன்மைகள் இல்லை. அதைப்போல், (உயிர்களைப் பாதுகாக்காமல் உயிரை நீக்கி) ஊனைத் தின்பவர்களுக்கு அருளால் பெறக்கூடிய நன்மைகள் கிடைக்கமாட்டா.

**253. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.**

(ஊன் உண்பவனுக்கு ஏன் அருட்குணம் வராது என்றால்,) கொலைக் கருவியைக் கையில் வைத்திருக்கிறவனுடைய மனம் கொலையிலேயே நாட்டமாக இருப்பது போல, பிற பிராணியின் ஊனைத் தின்று ருசி கண்டவ னுடைய மனம் அந்த ருசியையே நாடுமாதலால் அந்தப் பிராணி அவன் மனத்தில் கருணையைத் தூண்டிவிடாது.

**254. அருளல்லது யாதெனின் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.**

அருள் என்பது கொலை செய்யாமல் இருப்பது. அருளல்லாதது கொலை செய்வது. அப்படியிருக்க அருள் நெறியை மேற்கொண்ட துறவி கொலை செய்து வருகிற ஊனைத் தின்பது அர்த்தமில்லாத காரியம்.

**255. உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.**

(ஊனைத் தின்பது அருளுக்கு மட்டுமல்ல. அறிவுக்கும் பொருந்தாது.) மனிதனுடைய உயிர்வாழ்க்கைக்கு அவசியமான எல்லாச் சத்துப் பொருள் களும் புலால் உண்ணாமலேயே கிடைக்கின்றன. (ஏன் பின்னே ஊனுண்ண வேண்டும்?) மேலும், உயிர்போன பிணத்தை நரகங்கூட

அதன் வாசலுக்குள் விடாது. அப்படியிருக்க அந்தப் பிணத்தை உட்கொள்ள மனிதன் வாய்திறப்பதேன்?

**256. தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்**
**விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.**

(நானா கொல்லுகிறேன். யாரோ கொன்றதைத்தானே தின்கிறேன் என்றால்,) உண்பதற்கென்று பிற உயிரைக் கொல்லுகிற வழக்கம் உலகத்தில் இல்லையானால் மாமிசத்தை விலைக்கு விற்பவர்களும் இருக்க மாட்டார்கள்.

**257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்**
**புண்ணது உணர்வார்ப் பெறின்.**

(ஊனுக்காகப் பிராணிகளை வெட்டுவதை ஊன் உண்பவன் கண்ணால் பார்க்காவிட்டாலும்,) ஒருவன் உண்ணும் மாமிசத் துண்டம், வேறொரு பிராணியின் உடலை வெட்டித் துண்டாக்கும்போது உண்டான புண்ணுள்ளது. அதை உணர்ந்து பார்த்தாவது புலால் உண்ணாதிருக்க வேண்டும்.

**258. செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்**
**உயிரின் தலைப்பிரிந்த ஊன்.**

(அதனால்,) துன்பம் செய்வதை நீக்கிவிட்ட அறிவுடையவர்கள் உயிரை நீக்கியதாகிய ஊனை உண்ண மாட்டார்கள்.

**259. அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத் துண்ணாமை நன்று.**

(புலால் உண்பது துறவறத்தான் செய்யவே தகாத காரியம். அவனுடைய யோக முயற்சிகளையும் யாக முயற்சிகளையும் விடப் பலமடங்கு சிறந்தது புலால் உண்ணாமை.) அவிர்ப் பாகங்களைக் கொட்டி ஆயிரம் யாகங்களைச் செய்வதைவிட உண்பதற்கென்று ஓர் உயிரைக் கொல்லாதிருப்பது மேல்.

**260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்.**

(ஆகையினால்,) புலாலுக்காகக் கொல்லாதிருப்பவனும் பிறன் கொன்று விற்கிற புலாலை உண்ணாதிருப்பவனும் எல்லாச் சீவராசிகளாலும் வணங்கத் தக்கவன்.

## 27. தவம்

**261. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற் குரு.**

தவம் செய்வதற்கு இன்றியமையாத குணம் என்னவென்றால், தனக்கு வந்த துன்பங்களைப் பொறுத்துக் கொள்வது, தான் பிற உயிருக்குத் துன்பம் செய்யாமலிருப்பது ஆகிய அவ்வளவேதான்.

**262. தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை**
**அஃதிலார் மேற்கொள் வது.**

தவமும், தவக்குணமாக மேலே சொல்லப்பட்ட 'உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை' என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பவர்களுக்குத்தான் பலிக்கும். அந்த இரண்டு குணங்களும் இல்லாதவர்கள் தவம் செய்வது வீண் முயற்சியாகும்.

**263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்கள் தவம்.**

தவசிகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்வதற்குத்தான் மற்றவர்கள் தானும் தவம் மேற்கொள்ளாமல் இல்லறம் நடத்துகிறார்கள்.

**264. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்**
**எண்ணின் தவத்தான் வரும்.**

தவசி விரும்பினால் அவனுக்கு வேண்டாதவர்களுக்குச் சாபமிட்டுக் கெடுப்பதும் வேண்டியவர்களுக்கு வரங்கொடுத்து வாழ வைப்பதும் செய்யமுடியும்.

**265. வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.**

(ஆனால் வீடு பெறக் கருதிய தவசி தன் வலிமையை வீணில் செவழிக்கலாகாது. ஏனெனில்,) வெறுப்பு விருப்புக்களினால் (சாபமோ வரமோ) விரும்பியதை விரும்பியபடி செய்துவிட்டால் தவ வலிமை செலவாகிப் போகும். வீடு பெறக் கருதிய தவத்தை மீண்டும் தொடங்க வேண்டும்.

**266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்**
**அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.**

(ஆகையினால்,) தவம் செய்கிறவன் தன்னுடைய தவக் காரியங் களிலேயே இருக்க வேண்டும். அப்படியின்றி விருப்பு வெறுப்புக்களை மேற்கொள்கிறவன் மீண்டும் உலக ஆசைகளில் சிக்கிக்கொண்டு தவத்துக்குக் கேடு செய்கிறவன்.

**267. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்**
**சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.**

நெருப்பிலிட்டுக் காய்ச்சக் காய்ச்சக் களிம்பு நீங்கி மாற்றுயர்ந்து ஒளி அதிகப்படுகிற தங்கத்தைப்போல் துன்பங்கள் அடுத்தடுத்து வந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் தவஞ்செய்கிறவனுக்குத் தவ வலிமை அதிகப்பட்டு ஞான ஒளி உண்டாகும்.

**268. தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய**
**மன்னுயி ரெல்லாம் தொழும்.**

தன்னுயிர் பெரிது என்ற ஆசையும், தான் பெரியவன் என்ற அகங்காரமும் முற்றும் அற்றுப்போன தவசி உலகத்திலுள்ள எல்லாராலும் வணங்கத்தக்கவன்.

**269. கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்**
**ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.**

(அப்படிப்பட்ட தவசிகள் எமவாதையின்றி நினைத்த மாத்திரத்தில் உடலைவிடக் கூடியவர்கள்.) தவ வலிமை மிகுந்தவர்களுக்கு எமவாதனை களை வெல்வதும் சித்திக்கும்.

**270. இலர்பல ராகிய காரணம் நோற்பார்**
**சிலர்பலர் நோலா தவர்.**

(அப்படி சித்தி பெற்றவர்களை நாம் அதிகம் காண்பதில்லையே எனில்,) அப்படிப்பட்டவர்கள் பல பேர் உலகத்தில் இல்லையென்பதற்குக் காரணம் துறவு பூண்டு தவம் செய்வதாகச் சொல்லுகின்றவர்களிலும்கூட மேற்சொன்ன முறையில் சரியான தவம் செய்கிறவர்கள் வெகு சிலரே. அப்படிச் செய்யாத துறவிகளே பெரும்பான்மையோர்.

# 28. கூடா ஒழுக்கம்

**271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும்.**

(துறவறத்தில் இருந்துகொண்டு) வஞ்சகமாகத் துறவறத்துக்குத் தகாத கள்ள வாழ்க்கை நடத்துகிறவனுடைய கெட்ட நடத்தையை (மற்றவர்கள் அறியாவிட்டாலும்) அவன் தேகத்திலுள்ள பஞ்ச பூதங்களும் தமக்குள் சிரித்து ஏளனம் செய்யும்.

**272. வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்**
**தான்அறி குற்றப் படின்.**

தன்னுடைய மனச்சாட்சி குற்றமென்று சொல்லுவதை அறிந்தும் அதைச் செய்கிறவனுடைய மிக உயர்ந்த துறவறச் சின்னங்களால் மட்டும் என்ன நன்மை வரும்?

**273. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்**
**புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.**

மனவலிமையில்லாத துறவியின் தவவேடம் ஒரு பசுமாடு புலித் தோலைப் போர்த்துக்கொண்டு பயிரைத் தின்பதைப் போன்றதே.

**274. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து**
**வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.**

தவவேடத்தில் மறைந்துகொண்டு தகாத காரியங்களைச் செய்வது ஒரு வேடன் புதரில் மறைந்து கொண்டு கண்ணி வைத்துப் பறவைகளைப் பிடிப்பதற்குச் சமானம். அப்படிப்பட்ட கள்ளத் துறவிகளால் பல கேடுகள் விளையும்.

**275. பற்றற்றேம் என்பார் படிற்றெழுக்கம் எற்றெற்றென்று**
**ஏதம் பலவுந் தரும்.**

ஆசைகளையெல்லாம் விட்டுவிட்டோமென்று சொல்லிக்கொண்டு கள்ளத்தனமாக அந்த ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் முறை, 'இருக்காது' என்று பிறர் நம்பி ஏமாந்துபோவதால் பலவிதமான துன்பங்களை உண்டாக்கி விடுகின்றது.

**276. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்.**

(ஆகையினால்,) மனத்தில் ஆசைகளை விடாமல், விட்டு விட்டவர் களைப்போல் உலகத்தை ஏமாற்றிச் சீவனம் நடத்துகிறவர்களுக்கு ஈடான நெஞ்சழுத்தமுள்ள கொடியவர்கள் வேறில்லை.

**277. புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி**
**மூக்கிற் கரியார் உடைத்து.**

(இப்படிப்பட்டவர்கள்) குன்றிமணியின் உடல் சிவந்து மினு மினுப்பாக இருந்தாலும் அதன் மூக்குக் கறுத்திருப்பதைப் போல, உடல் முழுவதும் தவவேடமாக இருந்தாலும் உள்ளம் இருண்டு வஞ்சம் நிறைந்தவர்களான பொய்த் துறவிகள் உண்டு.

**278. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி**
**மறைந்தொழுகு மாந்தர் பலர்.**

மனத்தில் கெட்ட நோக்கங்களை வைத்துக்கொண்டு அதற்காகவே துறவிகளைப்போல் வேடம் பூண்டு அதில் மறைந்து கொண்டு தம்முடைய இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுகிற பொய்த்துறவிகளும் பலபேர் உண்டு.

**279. கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன**
**வினைபடு பாலால் கொளல்.**

அம்பானது கோணலின்றிப் பார்வைக்கு அழகாக இருந்தாலும் அது கொலை செய்வது. வீணை கோணலாக இருந்தாலும் இனிமை செய்வது. அதுபோல மக்களை அவர்களுடைய உருவத்தால் மட்டும் மதித்து விடாமல் செயல்களைக் கொண்டே நம்பவேண்டும்.

**280. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்.**

(உண்மையான துறவிக்கு வேடம் அவசியமில்லை.) உலகத்தால் பழியான காரியங்கள் என்று விலக்கப்பட்ட குற்றங்களைச் செய்யா திருந்தால் தலையை மொட்டையடித்துக் கொள்வது, தலைமுடி, தாடி முதலியவற்றை நீண்டு வளர விடுவது முதலான சின்னங்கள் வேண்டியதில்லை.

# 29. கள்ளாமை

**281. எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.**

தனக்கு இகழ்ச்சி வரக்கூடாதென்று விரும்புகின்றவன் எந்தப் பொருளையும் திருடி எடுத்துக்கொள்ளத் தன் மனம் எண்ணாமல் இருக்கும்படி காக்க வேண்டும்.

**282. உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.**

பிறருக்குச் சொந்தமான பொருளைத் திருடிக்கொள்ளலாமென்று மனத்தில் நினைப்பதுங்கூடத் தீமையுண்டாக்கும்.

**283. களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்.**

திருட்டுத் தொழிலால் அடையக்கூடிய செல்வம் அளவிட முடியாதபடி பெருகுவதுபோலக் காட்டி, திடீரென்று இல்லாது போகும்.

**284. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.**

திருடுவதில் ஆசை வளர்ந்துவிட்டால் அதன் பயனாக ஓயாமல் துன்பங்கள் வந்துகொண்டேயிருக்கும்.

**285. அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.**

(திருடுவதில் ஆசை வந்துவிட்டவனுடைய மனத்தில் நல்ல எண்ணங் களுக்கு இடமிருக்காது.) ஒருபொருளைத் திருடிக்கொள்ள நினைத்து அந்தப் பொருளுக்குச் சொந்தக்காரன் ஏமாறும் சமயத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களிடம் அருளைக் கருதி அன்பு செய்யும் குணம் இருக்காது.

**286. அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.**

(அதுமட்டுமல்ல; அவர்கள் திருட்டால் வரக்கூடிய பொருளைக் கணக்கிட்டுத் தம்முடைய சக்திக்கும் தகுதிக்கும் மீறிய காரியங்களையே செய்வார்கள். அதனால்,) திருடுவதில் அதிக ஆசைகொண்டு விட்டவர்கள்

தம்முடைய நிலைமைக்குத் தகுந்த வரையறையோடு அடங்கி வாழ்க்கை நடத்த மாட்டார்கள்.

**287. களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.**

(தம்முடைய சக்திக்கும் தகுதிக்கும் ஏற்ற) அளவோடு வாழ்க்கை நடத்தக்கூடிய மனவலிமை உள்ளவர்களிடத்தில் இருட்டு அறிவான திருட்டுப்புத்தி இருக்காது.

**288. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.**

(அதனால்,) அளவோடு வாழத் தெரிந்தவர்களிடத்தில் அவர்கள் மேற்கொண்ட அற உணர்ச்சி இருந்து கொண்டேயிருக்கும். அளவுக்கு மீறிய வாழ்க்கையால் திருட நினைக்கிறவர்களுடைய மனத்தில் அந்த அற உணர்ச்சி மறைந்து விடுகிறது.

**289. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.**

(அளவுக்கு மீறிய காரியங்களால்தான் திருடவேண்டிய எண்ணம் உண்டாகிறது. அந்த எண்ணம் உண்டான பின்) திருடுவதில் ஆசை வந்துவிட்டவர்கள் அளவுக்கு மீறிய காரியங்களையே செய்து அதனால் கெட்டுப்போவார்கள்.

**290. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.**

(ஆகையினால்,) திருடுகின்றவர்களுக்குக் கடைசியில் சீவனத்துக்கும் தடுமாற்றம் உண்டாகிவிடும். என்ன துன்பம் வந்தாலும், திருடாதவர் களுக்கு (உலக சுகம் குறைந்தாலும்) தேவலோகம் சேர்ப்பிக்கின்ற புண்ணியம் நிச்சயம்.

# 30. வாய்மை

**291. வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்.**

வாய்மை என்பது என்னவென்றால், யாருக்கும் எந்தவிதமான தீமையும் உண்டாக்காத வார்த்தைகளைப் பேசுவது.

**292. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.**

(தீமை உண்டாக்காத சொற்கள் மட்டுல்ல,) குற்றமில்லாத நன்மை உண்டாக்கும் நோக்கத்துடன் பொய்யைச் சொன்னாலும் அதுவும் வாய்மையோடு சேர்ந்ததேயாகும்.

**293. தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்.**

(கண்டதையும் கேட்டதையும் அப்படியே உள்ளபடி சொல்லி விடுவது வாய்மையல்ல.) தன் மனச்சாட்சி சரியென்று அறிந்ததைப் பொய்யாக்கி விடக்கூடிய எதையும் சொல்லக்கூடாது. மனச்சாட்சியைப் பொய்யாக்கி விட்டால் பிறகு தன் மனச்சாட்சியே இடித்துத் தன்னை வருத்தப்படுத்தும்.

**294. உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்**
**உள்ளத்து ளெல்லாம் உளன்.**

(சொல்லுவது வாய்மையா அல்லவா என்பதற்கு மனச்சாட்சிதான் அளவுகோல். ஆதலால்,) மனச்சாட்சிக்குப் பொய்யனாகாமல் நடந்து கொள்ளும் ஒருவன் உலகிலுள்ள மற்றெல்லாராலும் மதிக்கப்படுவான்.

**295. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானஞ்செய் வாரின் தலை.**

(மனச்சாட்சிக்குப் பொய்யனாகாமல் வாயால் பொய்யே சொன்னாலுங்கூட அவன் மதிக்கத் தகுந்தவனாவானென்றால்,) மனச் சாட்சிக்கும் மெய்யனாகி வாயாலும் மெய்யே பேசினால் அப்படிப் பட்டவன் தவமும் தானமும் ஒருங்கே செய்கிறவர்களைவிடச் சிறந்தவன்.

***296. பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை***
***எல்லா அறமும் தரும்.***

(மனமும் சொல்லும் சேர்ந்து) பொய் சொல்லாதிருப்பதை விடப் பெருமை தரக் கூடியது வேறொன்றுமில்லை. அது வேறெந்த முயற்சியும் இல்லாமலே மற்றெல்லாத் தர்மங்களையும் செய்யும் பயன் உண்டாக்கும்.

***297. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற***
***செய்யாமை செய்யாமை நன்று.***

(ஆகையால்,) பொய்யாமை என்னும் தர்மத்தைச் சரியாகக் காத்தால் வேறு எந்தத் தர்மமும் செய்ய வேண்டியதில்லை.

***298. புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை***
***வாய்மையால் காணப் படும்.***

(எல்லா அறங்களுக்கும் அடிப்படை மனச்சுத்தம்.) உடலின் வெளிப் புறத்தைத் தண்ணீரால் சுத்தப்படுத்தலாம். ஆனால் உடலின் உட்புறமாகிய உள்ளத்தை வாய்மைதான் சுத்தப்படுத்தும்.

***299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்***
***பொய்யா விளக்கே விளக்கு.***

(அதனால்,) அறிவொழுக்கங்களால் உயர்ந்த மேலோர்க்கு வழி காட்டுவது மற்ற விளக்குகள் அல்ல; சத்தியந்தான் அவர்களுக்கு வழிகாட்டும் ஒளி.

***300. யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்***
***வாய்மையின் நல்ல பிற.***

(ஆகையினால்,) நாம் அறிந்த உண்மைகளுக்குள் சத்தியத்தைவிட உயர்ந்தது வேறொன்றுமில்லை.

# 31. வெகுளாமை

***301. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்***
***காக்கின்என் காவாக்கால் என்.***

(கோபம் கொள்ளாதிருப்பது எதுவென்றால்) தன்னை விட மெலிந்தவர்களிடத்தில் செலுத்திவிடாமல் கோபத்தை அடக்குகிறவனே அதை அடக்கினவனாவான். மற்ற இடத்தில் அடக்கினாலென்ன, அடக்காவிட்டாலென்ன?

***302. செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்***
***இல்அதனின் தீய பிற.***

(எந்த இடத்திலும் கோபம் தனக்கே தீங்கு உண்டாக்கும்.) செலுத்தக் கூடாத இடத்திற் கோபத்தைச் செலுத்தினால் தனக்கு உடனே தீமை உண்டாக்கும்; செலுத்தக்கூடிய இடத்தில் கோபத்தைச் செலுத்தி னால் செலுத்திய இடத்துக்கும் உடனே தீங்கு உண்டாவதுடன் பின்னால் தனக்கும் பாவமுண்டாக்கும். அதனால் அதைவிடத் தீமை தருவது வேறில்லை.

***303. மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய***
***பிறத்தல் அதனான் வரும்.***

(அதனால் யாரிடத்திலும் கோபங் கொள்ளக்கூடாது.) ஏனெனில், தீங்கு செய்யத் தூண்டுகிற மனத்தாபம் கோபத்தால் தான் உண்டாகிறது.

***304. நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்***
***பகையும் உளவோ பிற.***

(எப்படியென்றால், கோபம் வந்தவுடனேயே பகையாளியைக் கண்டு விட்டது போலாகிறோம்.) உதட்டிலிருந்த சிரிப்பையும் உள்ளத்திலிருந்த மகிழ்ச்சிகளையும் உடனே அழித்துவிடுகிற கோபத்தைவிடப் பகைவன் வேறு உண்டா?

***305. தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்***
***தன்னையே கொல்லும் சினம்.***

(கோபமானது தன்னுடைய இன்பத்தை உடனே அழித்துப் பின்னால் துன்பமும் தருவதால்,) ஒருவன் தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ள விரும்பினால் மனத்தில் கோபம் உதித்த உடனே அடக்கிவிட வேண்டும். அடக்காவிட்டால் அக்கோபம் தனக்கே அழிவு செய்யும்.

***306. சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.***

(அது மட்டுமல்லாமல்,) சேர்ந்தவரையே கொன்று விடக்கூடிய கோபம் ஒருவனுக்கு அபாயகாலத்தில் பாதுகாப்பாக இருக்கக்கூடிய துணைவர்களான உற்றார் உறவினர்களையும் விலக்கிவிடும்.

***307. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.***

(கோபமுள்ளவன் நிச்சயமாகக் கேடடைவான்.) கோபத்தை ஒரு பொருளாகக் கொண்டு நடப்பவன் நிலத்தை ஓங்கி அறைந்தவனுடைய கை துன்பமடைவது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயமாகத் துன்பமடைந்தே தீருவான்.

***308. இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.***

(அதனால்,) கொழுந்துவிட்டெரிகிற நெருப்பைக் கொண்டு சுடுவது போன்ற துன்பம் செய்கிறவர்களிடத்திலும்கூட முடியுமானால் கோபம் கொள்ளாதிருப்பதே நல்லது.

***309. உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.***

(அப்படிப்பட்ட அபூர்வ குணம் அமைந்தால்,) மனத்தில் கோபத்துக்கு இடங்கொடுக்காதவனாயிருந்தால், அவன் விரும்பினதையெல்லாம் உடனே விரும்பியபடி அடைவான்.

***310. இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.***

(ஆகையினால் கோபத்தை விட்டவனே துறந்தவன்.) கோபமுள்ள துறவி தன்னுடைய நெறி கெட்டவன்; கோபங் கொள்வதை விட்டொழித்தவன் துறவியல்லாவிடினும் துறவிக்குச் சமானமானவன்.

# 32. இன்னா செய்யாமை

**311. சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

சிறப்புக்களெல்லாம் உண்டாக்கக்கூடிய மிகப் பெரிய செல்வம் கிடைப்பதானாலும் அதற்காகவும் பிறருக்குத் தீங்கு செய்யாமலிருப்பது குற்றமற்றவர்களுடைய கொள்கை.

**312. கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

(அதைவிடவும்,) கோபத்தால் ஒரு தீங்கு செய்து விட்டவருக்கும் திருப்பித் தீங்கு செய்யாதிருப்பது குற்றமற்றவர்களுடைய கொள்கை.

**313. செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்**
**உய்யா விழுமம் தரும்.**

(தீங்கு செய்தவர்களுக்கும் திருப்பித் தீங்கு செய்யாம லிருப்பதே விரும்ப வேண்டியதாயிருக்க, ஒரு தீங்கும் செய்யாதவர்களுக்கும் திருப்பித் தீங்கு செய்கிறார்களே!) பகைவர்களுக்கானாலும், அவர்கள் ஒரு தீங்கும் செய்யாதிருக்கும்போது அவர்களுக்குத் தீங்கு செய்தால், அது தப்பித்துக் கொள்ள முடியாத குற்றமுண்டாக்கும்.

**314. இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்.**

தீங்கு செய்தவர்களை நல்லவர்கள் தண்டிப்பது எப்படியென்றால், தீங்கு செய்தவர்கள் தாமாகவே வெட்கப்படும்படி அவர்களுக்கு நன்மை செய்துவிடுவது.

**315. அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
**தந்நோய்போல் போற்றாக் கடை.**

(அறிவுள்ள மனிதர் ஏன் பிறருக்குத் தீங்கு செய்ய வேண்டும்?) பிற உயிருக்கு உண்டாகும் துன்பம் தமக்கு வரும் துன்பத்தைப்போலத்தானே இருக்குமென்று உணராவிட்டால் அறிவினால் என்ன பயன்?

**316. இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல்.**

(ஆகையினால், அறிவுடையவன்) தீமை உண்டாக்கக் கூடியவை

என்று தான் உணருகின்ற எதையும் இன்னொருவருக்குச் செய்துவிடாமல் இருக்க வேண்டும்.

*317. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்*
*மாணாசெய் யாமை தலை.*

(தீமை உண்டாக்கக்கூடிய செயல்களை மட்டுமல்ல;) எவ்வளவு சிறிய அளவிலுங்கூட, எப்போதும் யாருக்கும் கண்ணியமில்லாதது என்று தன் மனத்திற்படுகிற எதையும் செய்யாமலிருப்பது மிகச் சிறந்த குணம்.

*318. தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ*
*மன்னுயிர்க்கு இன்னா செயல்.*

(அப்படியிருக்க,) தன் உயிருக்குத் தீங்கு செய்வது என்னவென்று அறிந்து அதை விலக்க விரும்புகின்ற மனிதன் பிற உயிருக்குத் தீங்கு செய்வது என்ன காரணத்தாலோ தெரியவில்லை.

*319. பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா*
*பிற்பகல் தாமே வரும்.*

(தீங்கு செய்தால் தனக்கே தீங்கு வரும்.) பிறருக்குத் தீங்குகள் முன்னால் செய்தால் தனக்குத் தீங்குகள் பின்னால் தாமாகவே வந்துவிடும்.

*320. நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்*
*நோயின்மை வேண்டு பவர்.*

(ஆகையினால்,) பிறருக்குச் செய்யும் துன்பங்களெல்லாம் செய்தவர்களுக்கே வந்துசேரும்; அதனால் தமக்குத் துன்பம் வரக்கூடாது என்று விரும்புகிறவர்கள் பிறருக்குத் துன்பம் செய்யாமல் இருக்கவேண்டும்.

# 33. கொல்லாமை

***321. அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்***
***பிறவினை எல்லாந் தரும்.***

*புண்ணியச் செயல் எதுவென்றால், உயிர்க்கொலை செய்யாதிருப்பது; கொலை செய்வது மற்ற எல்லாப் பாவங்களையும் உண்டாக்கும்.*

***322. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்***
***தொகுத்தவற்றுள் எல்லாந் தலை.***

*தனக்குள்ள உணவைப் பசித்துள்ள மற்ற மனிதர்க்கும் பங்கிட்டுப் பின் உண்பதும் மற்ற சீவராசிகளின் உயிரைத் தீனி போட்டுப் பாதுகாப்பதும் ஆகிய இந்த இரண்டுமே உலகத்தில் அறிவு நூல்களை எழுதினவர்கள் எல்லாரும் சேகரித்துக் கொடுத்திருக்கிற அறிவுகளில் தலைசிறந்தவை.*

***323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்***
***பின்சாரப் பொய்யாமை நன்று.***

*(மனித வாழ்க்கையின் தலை சிறந்த தர்மங்கள் இரண்டு. அவை:) முதலாவது, பிற உயிரைக் கொல்லாதிருப்பது; அதற்கடுத்தது, பொய் சொல்லாதிருப்பது.*

***324. நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்***
***கொல்லாமை சூழும் நெறி.***

*(கொலை சம்பந்தப்பட்ட எந்தக் காரியமும் சன்மார்க்கமாகாது.) நன்னெறி என்பது எதுவென்றால், எதற்காகவானாலும் எந்த உயிரையும் கொல்லக்கூடாது என்ற கொள்கையுள்ளதுதான்.*

***325. நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்***
***கொல்லாமை சூழ்வான் தலை.***

*(கொல்லாவிரதத்தைவிட உயர்ந்த துறவறம் வேறில்லை.) பிறவித் துன்பங்களுக்கு அஞ்சி உலகப் பற்றுக்களையெல்லாம் விட்டுவிட்டவர்கள் எல்லாரிலும், கொலைக் குற்றத்திற்கு அஞ்சிக் கொல்லாவிரதம் பூண்டவனே சிறந்தவன்.*

**326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிருண்ணுங் கூற்று.**

(அப்படிப்பட்டவனுக்கு எமவாதனை இருக்காது.) கொல்லா விரதத்தைக் கடைப்பிடித்து நடந்து கொள்கிறவனுடைய வாழ்வின்மேல் உடலைப் பதைபதைக்கச் செய்து உயிரை மென்று தின்று விடுகிற எமன் வரமாட்டான்.

**327. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை.**

(ஆதலால்,) தன்னுடைய உயிர்போவதாயிருந்தாலும் தான் வேறோர் உடலிலுள்ள அதற்கினிய உயிரைப் போக்குகின்ற கொலைச்செயல் செய்யக்கூடாது.

**328. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்**
**கொன்றாகும் ஆக்கம் கடை.**

(கொலை செய்து அதனால்) பல நன்மைகள் வருமென்றாலும், பெருத்த செல்வம் கிடைக்குமென்றாலும் மேலோர்கள் பிற உயிரைக் கொன்று வரக்கூடிய எந்தச் செல்வத்தையும் மிகவும் இழிவாகத்தான் கருதுவார்கள்.

**329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவா ரகத்து.**

ஈனமான செயல் எதுவென்பதை எண்ணிப்பார்க்கக் கூடியவர் களுடைய மதிப்பில் கொலை செய்கிறவர்கள் சண்டாளத்தனமுள்ள கீழ்மக்களாகக் கருதப்படுவார்கள்.

**330. உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

(உலகத்தில்) உடம்பிலிருந்து வியாதிகள் நீங்காதவர் களாக எந்நேரமும் நோயால் துன்பப்பட்டுக் கொண்டே இருப்பவர்கள், முற்பிறப்பில் உயிர்களை உடம்பிலிருந்து நீக்கும் கொலைகளைச் செய்தவர்கள் என்று சொல்லப் படுவார்கள்.

# 34. நிலையாமை

**331. நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.**

நிலையில்லா பொருள்களை நிலையுள்ளனவாக நினைக்கின்ற அற்ப புத்திதான் இழிவுண்டாக்குவது.

**332. கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.**

(செல்வம் நிலையற்றது.) ஒருவனுக்குச் செல்வம் வந்து சேர்வது, பல இடங்களிலிருந்து ஒவ்வொருவராக வந்து ஓர் இடத்தில் கூத்தாட்டம் பார்க்கப் பெருங்கூட்டம் கூடுவது போன்றது. அந்தச் செல்வம் தொலைந்து போவதும் அந்தக் கூட்டம் கலைந்து போவதைப்போல் வெகுவிரைவில் இல்லாது போகும்.

**333. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.**

(அதனால்,) பொருட்செல்வம் ஓர் இடத்திலும் நிலைத்திருக்க முடியாத இயல்புடையது; அது கிடைத்த போதே, நிலைத்திருக்கக்கூடிய புண்ணியங்களுக்குச் செலவு செய்துவிட வேண்டும்.

**334. நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின்.**

(செல்வம் மட்டுமன்று; இளமையும் நிலையற்றது.) நாள் என்பது, ஒன்றைப்போலவே அடுத்தடுத்துப் பல நாட்களாக வந்து, சிறுகச் சிறுக உயிரை அறுத்துவிடுகிற இரம்பம் என்பதை நாம் உணர வேண்டும்.

**335. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.**

(அப்படி இளமை ஒழிந்து உயிர் போய்விடுவதற்கு முன்) பேச்சு வராதபடி நாக்குக் குழறி மேல்மூச்சு வருவதற்கு முன்னால் புண்ணியங் களைச் செய்ய முந்திக்கொள்ள வேண்டும்.

**336. நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு.**

(ஏனென்றால்,) நேற்றிருந்தவன் இன்றைக்கு இல்லையென்று சொல்ல வேண்டிய பெரிய உண்மையுள்ளது இவ்வுலக வாழ்வு.

**337. ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப**
**கோடியும் அல்ல பல.**

(அப்படியிருக்கும்) ஒரு நாள் முழுதுங்கூட உயிரோடு இருப்பது நிச்சயமில்லா மனிதன் எண்ணுகிற எண்ணங்களோ ஒருகோடி இரண்டு கோடியல்ல; பல கோடி.

**338. குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு.**

(உடம்பில் உயிர் இருப்பது எதைப்போல் என்றால்,) உடம்புக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்தம் ஒரு முட்டையின் ஓட்டுக்கும் அதிலிருந்து பறந்துபோய்விடுகிற பட்சிக்கும் உள்ள சம்பந்தந்தான்.

**339. உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு.**

(உடல் அழிந்தாலும் உயிர் அழிவதில்லை; அதனால்,) மரணம் என்பது உயிருக்குத் தூங்குவதைப்போன்றது. அந்த உயிர் வேறோர் உடலில் பிறப்பது தூங்கி விழிப்பது போன்றது.

**340. புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்**
**துச்சில் இருந்த உயிர்க்கு.**

(இப்படி அந்த உயிர் ஓர் உடலில் நிலைத்திருக்காமல் வெவ்வேறு உடல்களிற் புகுந்து புகுந்து ஓடிவிடுவதைப் பார்த்தால் இப்படித்தான் தோன்றுகிறது:) ஒவ்வோர் உடம்பிலும் சிறிது காலம் ஒண்டுக் குடியிருந்துவிட்டு ஓடிப்போகிற உயிர் தனக்கு நிலையாகத் தங்கியிருக்கத் தகுந்த ஒரு வீட்டைத் தேடிக்கொண்டு அலைகிறதோ?

# 35. துறவு

**341. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.**

ஒருவன் எந்தெந்தப் பற்றுக்களை விட்டுவிடுகிறானோ அந்தந்தப் பற்றுக்களால் வரக்கூடிய துன்பங்களும் அவனுக்கு இல்லையாகும்.

**342. வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல.**

(அதனால்,) துன்பமே இல்லாதிருக்க விரும்பினால் பற்றுக்களை முற்றும் விட்டொழிக்க வேண்டும்; விட்ட பிறகுதான் துறவறத்தால் அடையக்கூடிய பல நன்மைகளும் கிடைக்கும்.

**343. அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.**

(அப்படிப் பற்றுக்களையெல்லாம் முற்றும் விட்டொழிப்பது மிகவும் கடினந்தான். அதற்காக) ஐந்து இந்திரியங்களோடும் போராட வேண்டும். அவை விரும்புகின்ற எல்லா இன்பங்களையும் ஒருமிக்க விட்டொழிக்க வேண்டும்.

**344. இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.**

(பற்றுக்களை விட்டதன் பயனாகத் தன்னுடையது என்று ஒரு பொருளையும் எண்ணக்கூடாது.) எந்த ஒரு பொருளையும் உடைமையாக வைத்துக்கொள்ளாமல் இருப்பதுதான் துறவறத்தின் முறை; உடைமை என்பது இருந்தால், அது துறவறத்தைக் கெடுத்து, விட்டுவிட்ட பற்றுக்களில் மீண்டும் ஈடுபடுவதாக நம்மை ஆக்கிவிடும்.

**345. மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.**

(உடைமைகளில் மட்டுமல்ல; உடம்பின் மீது கூடப்பற்று வைக்கக் கூடாது.) பிறவாதிருக்க வேண்டுமென்ற முயற்சிகளில் ஈடுபடும் துறவிக்கு அவனுடைய தேகமேகூட அவனுக்குப் பாரம்; அப்படியிருக்க வேறு உடைமைகள் எதற்காக?

**346. யான்எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.**

(உலகத்தில் பற்றுக்களை விட்டவன் தேவர்களைவிடச் சிறந்தவன்.) 'நான்', 'என்னுடையது' என்ற மயக்கங்களை விட்டவனே தேவர்களுக்கும் மேலான வீட்டின்பத்தை அடைவான்.

**347. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு.**

(ஏனெனில், 'யான்' 'எனது' என்ற) பற்றுக்களை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறவர்களைப் பிறவித் துன்பங்களும் விடாமல் பற்றிக் கொண்டே இருக்கும்.

**348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

(பற்றுக்களைத் துறப்பதுதான் துறவறம்.) பற்றுக்களையெல்லாம் முற்றும் விட்டொழித்தவர்களே துறவு நிலை அடைந்தவர்கள். பற்றுக்களை ஒழிக்காமல் துறவறத்திலிருக்கும் மற்றவர்கள் பிறவித் துன்ப வலைக்குள் அகப்பட்டிருப்பவர்களேயாவார்கள்.

**349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று**
**நிலையாமை காணப் படும்.**

(பிறவிக்குக் காரணமே பற்றுக்கள்தாம்.) பற்றுக்களெல்லாம் அற்றுப் போன பிறகுதான் இனிப் பிறவாத நிலை அடைய முடியும். இல்லை யானால், மீண்டும் நிலையற்ற பிறவிதான் வரும்.

**350. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு.**

(பற்றுக்களை அறுப்பது மிகவும் கடினம்.) பற்றுக்களை விட்டொழிப் பதற்குப் பற்றற்றவனாகிய பகவானைப் பற்றிக் கொள்ள வேண்டும். அந்தப் பற்றை விடாமல் பின்பற்ற வேண்டும்.

## 36. மெய்யுணர்தல்

**351. பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்**
**மருளானும் மாணப் பிறப்பு.**

மெய்ப்பொருள் அல்லாதவற்றைப் பகவான் என்று உணர்ந்துவிடும் திரிபினால் பிறப்பை அறுப்பதுபோய் இன்னும் கீழான பிறவி வந்துவிடும்.

**352. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி**
**மாசறு காட்சி யவர்க்கு.**

(மயங்கித் திரிபாக எண்ணிவிடாமல்,) குற்றமற்ற நெறியில் மெய்ப் பொருள் எதுவென்று கண்டு உணர்கிறவர்களுக்குத்தான் அஞ்ஞானம் நீங்கிப் பிறப்பில்லாத பேரின்பம் கைகூடும்.

**353. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வானம் நணிய துடைத்து.**

(திரிபில்லாமலிருப்பதோடு சந்தேகமும் இல்லாமலிருக்க வேண்டும்.) சந்தேகம் இல்லாமல் மெய்ப் பொருளைத் தெளிவாக அறிந்து விட்டவர் களுக்குப் பிறவிக்கு இடமாகிய வையகத்தைவிடப் பிறவாமைக்கு இடமாகிய வானகமே, எளிதிற் கிடைப்பதாகும்.

**354. ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே**
**மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.**

(மெய்ப்பொருளை அறிவினால் அறிந்துவிட்டால் மட்டும் போதாது.) நுட்பமான அறிவுடையவர்களானாலும் மெய்ப்பொருளாகிய பகவானை உள்ளூர அனுபவித்து உணராதவர்களுக்குப் பயன் கிடையாது.

**355. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

(மெய்ப்பொருளை ஆராய்வது எப்படி என்றால்,) எந்தப் பொருள் எப்படி நமக்குக் காணப்படினும் அந்தப் பொருளில் எந்தப் பகுதி அழிவில்லாமல் என்றும் இருக்கும் என்று கண்டறிவதே மெய்ப்பொருளை ஆராயும் அறிவு.

**356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி.**

(அந்த முறையில் ஆராய்ந்தறியக்) கற்றுக்கொண்டு இங்குள்ள

பொருள்களில் எது மெய்ப்பொருள் என்று கண்டறியக் கூடியவர்கள் மறுபடியும் இங்கே பிறவா திருக்கும் மார்க்கத்தை அடைவார்கள்.

**357. ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.**

கல்வி கேள்விகளைக் கொண்டு என்றைக்கும் உள்ள பொருள் எது என்பதைத் தீர்மானமாக அறிந்து அதை உணர்ந்தால் மறுபிறப்பை எண்ண வேண்டியதில்லை.

**358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு.**

பிறப்பு என்னும் அறியாமை நீங்கவேண்டுமென்ற நோக்கத்தோடு, நாம் அறிந்த பொருள்கள் எல்லாவற்றிலும் சிறந்ததும் குற்றமற்றுச் செம்மையானதுமான பொருள் எது என்று கண்டறியும் அறிவுதான் மெய்யுணரும் அறிவு.

**359. சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்**
**சார்தரா சார்தரு நோய்.**

சேர விரும்பும் இடமாகிய மெய்ப்பொருளை உணர்ந்து கொண்டு, அதன்பின் தன்னைச் சேர்திருப்பதும் இனிச்சேரக் கூடியதுமான பற்றுக்கள் ஒழிந்து விடும்படியான ஒழுக்கத்தோடு நடந்துகொண்டால் பிறப்புக்குக் காரணமாகிய வினைகள் மீண்டும் நெருங்கமாட்டா.

**360. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்.**

(சுருங்கச் சொன்னால்,) விருப்பு, வெறுப்பு, அறியாமை என்ற மூன்று குற்றங்களும் அறவே இல்லாமற்போனால் பிறவித் துன்பமும் இல்லாமற் போகும்.

# 37. அவா அறுத்தல்

**361. அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.**

எல்லா உயிர்களுக்கும் எந்தக் காலத்திலும் நிச்சயமாகப் பிறவியைத் தரக்கூடிய மூலகாரணம் ஆசைதான்.

**362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.**

(துறவியானவன்) எதன் மீதாவது ஆசை கொண்டால் பிறவாதிருப் பதன் மீதுதான் ஆசைகொள்ளவேண்டும்; ஆனால் அந்தப் பிறவாமையுங் கூட அதன்மீது ஆசை வைக்காதவனுக்குத்தான் கைகூடும்.

**363. வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல்.**

(பிறப்பதற்கு மட்டுமல்ல; எதற்காகவானாலும் ஆசைப்படா திருப்பதைப் போன்ற சிறப்பு ஆசையால் வராது.) எதிலும் ஆசை வைக்காதிருப்பதைப்போன்ற குறைவற்ற செல்வம் இந்த உலகத்தில் இல்லை. வேறு எந்த உலக்த்திலும் அதற்கிணையான செல்வம் இருக்க முடியாது.

**364. தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.**

(குற்றமற்ற வாழ்க்கை இருந்தால்தான் துறவறம் பலிக்கும். அந்தக் குற்றமற்ற தன்மை எப்படி வருமென்றால்,) மாசற்ற நிலைமை என்பது ஆசையற்ற தன்மையினால் வருவது. அந்த உண்மையை விரும்பிக் கடைப்பிடித்தால் மற்றவை கைகூடும்.

**365. அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர்.**

(உறவினரையும் உடைமைகளையும் விட்டொழித்த பின்னும் உள்ளத்தில் ஆசை இருக்க முடியும். ஆகையால்,) மனத்தில் ஆசைப் படுவதை ஒழித்தவர்களே பற்றற்ற துறவிகளாவார்கள்; மற்றவர்கள் அப்படியாகத் துறந்து விட்டது ஒன்றுமில்லை.

**366. அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை**
**வஞ்சிப்ப தோரும் அவா.**

(ஆசைகள் வந்துவிடாதபடி எப்போதும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.) ஒருவனை ஏமாற்றி விடுவது இந்த ஆசைதான். அதற்கு அஞ்சி நடப்பதே அறம்.

**367. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை**
**தான்வேண்டு மாற்றான் வரும்.**

(ஆசைவிட்டால் பிறவியும் விட்டுவிடும்.) ஆசைகளை முற்றிலும் விட்டொழித்தால் துன்பமற்ற நிலையான பிறவாமை வரவேண்டிய முறையில் தானாகவே வந்துசேரும்.

**368. அவாஇல்லார்க் கில்லாகுந் துன்பம் அஃதுண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும்.**

(பிறவாத நிலைமை பெறுவதற்கு மட்டுமல்ல, உலக வாழ்வில் நிம்மதியடைவதற்கும்) ஆசையை நீக்குவதே வழி. ஆசை இல்லாதவர் களுக்குத் துன்பமும் இருக்காது. ஆசை இருந்தால் நிச்சயமாகத் துன்பங்கள் அடிக்கடி வந்து கொண்டேயிருக்கும்.

**369. இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்**
**துன்பத்துள் துன்பங் கெடின்.**

துன்பங்களிலெல்லாம் கொடிய துன்பமாகிய ஆசை என்னும் துன்பம் இல்லாது போனால் இந்த உலகத்திலும் இடையறாத இன்பமாகிய பேரின்பத்தை அனுபவிக்கலாம்.

**370. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே**
**பேரா இயற்கை தரும்.**

எவ்வளவு கிடைத்தாலும் அடங்காத தன்மையுள்ளது ஆசை; அதை அடக்கிவிட்டால் அப்போதே பிறப்பில்லாத பேரின்ப நிலை வந்துவிடும்.

## 38. ஊழ்

**371. ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்**
**போகூழால் தோன்றும் மடி.**

செல்வம் வரவேண்டிய நல்வினைப்பயன் வரும்போது சோர்வில்லாத மன உறுதி உண்டாகும். உள்ள செல்வம் போகவேண்டிய தீவினைப் பயன்கள் வரும்போது சோம்பல் உண்டாகிவிடும்.

**372. பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்**
**ஆகலூழ் உற்றக் கடை.**

கைப்பொருளை இழக்கவேண்டிய தீவினைப் பயன்கள் வரும்போது உள்ள அறிவையும் கெடுத்துவிடும்; நல்வினைப் பயன் வரும்போது புதுப்புது யோசனைகளைக் கொடுத்து அறிவை அதிகப்படுத்தும்.

**373. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்**
**உண்மை அறிவே மிகும்.**

பல நுட்பமான நூல்களைப் படித்து, வேண்டிய உபாயங்களைத் தெரிந்து வைத்திருந்தாலும் தீவினைப் பயன்கள் வரும்போது படித்து வைத்திருந்த அறிவு தருணத்தில் உதவாமல் முன்னிருந்த தன்னுடைய சாதாரண அறிவுதான் முன்னால் வந்து நிற்கும்.

**374. இருவேறு உலகத்து இயற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு.**

உலகத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத இரண்டு உண்மைகள் இருக்கின்றன. அவையாவன: செல்வமுள்ளவர்களாக இருப்பதற்கும் அறிவுடையவர்களாக இருப்பதற்கும் சம்பந்தமே இல்லாதிருக்கிறது.

**375. நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு.**

செல்வம் சம்பாதிப்பதற்குக் கல்வியறிவுடன் நல்ல முறையில் செய்யப்படுகிற முயற்சிகள் கெட்டுப்போகின்றன. அறிவில்லாமலும் தீயவழிகளில் செய்யப்படுகிற முயற்சிகள் நல்ல பலனைத் தருகின்றன.

**376. பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்**
**சொரியினும் போகா தம.**

எவ்வளவு பரிந்து முயன்றாலும் தமக்கு வந்து சேரத்தக்க நல்வினை

இல்லாத பொருள்கள் கிடைத்துவிட மாட்டா. நல்வினையால் தமக்குச் சொந்தமாகச் சேர்ந்துள்ள பொருள்களை வேண்டாமென்று எங்கேனும் கொண்டு போய்க் கொட்டிவிட்டாலும் அவை மீண்டும் தம்மிடமே வந்துசேர்ந்துவிடும்.

**377. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.**

கோடி கோடியாகச் செல்வத்தைச் சேர்த்து விட்டவர்களுங்கூட விதிக்கக் கூடிய தெய்வமாகிய ஊழ்வினை விதிக்கிற அளவுக்கும் விதத்துக்கும் அதிகமாக அனுபவித்துவிட முடியாது.

**378. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால**
**ஊட்டா கழியும் எனின்.**

வரவேண்டிய தீவினைகள் வந்து, அடைந்துள்ள செல்வத்தை அனுபவிக்க விடாமல் காலங்கழித்து விடுமானால், பெற்ற செல்வத்தை அனுபவிக்க நல்வினை வராமலேயே விட்டுப்பிரிந்து போகவேண்டும்.

**379. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்**
**அல்லற் படுவ தெவன்.**

நல்வினைப் பயனாக நன்மை வருகிறபோது இன்பமடைகிற மனிதன் தீவினைப் பயனாகத் தீமை வருகிறபோது ஏன் துன்பப்படவேண்டும்?

**380. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்.**

பழவினையைவிட வல்லமையுள்ளது என்ன இருக்கிறது? அதை விலக்கிவிட என்ன உபாயங்களைச் செய்தாலும் அதுதான் முன்னால் வந்து நிற்கும்.

# 39. இறைமாட்சி

***381. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்***
***உடையான் அரசருள் ஏறு.***

சேனையின் வலிமை, குடிஜனக்கட்டு, செல்வச் சிறப்பு, நல்ல மந்திரிகள், அயல் நாட்டரசர்களின் நல்லுறவு, கோட்டை கொத்தளப் பாதுகாப்புக்கள் ஆகிய இந்த ஆறு பகுதிகளும் சரியாக அமையப்பெற்ற அரசனே சிறப்புடையவன்.

***382. அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்***
***எஞ்சாமை வேந்தர்க் கியல்பு.***

(மேலே சொல்லப்பட்டவை அரசாட்சிக்கு அமைய வேண்டிய உறுப்புகள். அரசனுக்கு அமைய வேண்டிய குணங்கள் என்னவெனில்,) அச்சமற்ற தன்மை, ஏழைகளுக்கு உதவம் கொடைமனம், அரசியல் அறிவு, விடாமுயற்சி ஆகிய நான்கும் ஒன்றுக்கொன்று குறைவில்லாமல் இருக்க வேண்டியது அரசனுடைய தகுதி.

***383. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்***
***நீங்கா நிலனாள் பவர்க்கு.***

அரச காரியங்களில் அயர்ந்துவிடாமல் விழிப்பாக இருப்பது, அப்போதைக்கப்போது அறிய வேண்டியவற்றைக் கற்றுக்கொள்வது, உடனுக்குடன் ஆலோசனை நடத்திக் காரியங்களை நிச்சயிப்பது ஆகிய மூன்று குணங்களும் நாடாளும் தலைவனிடத்தில் எந்த நேரத்திலும் நீங்காதிருக்க வேண்டும்.

***384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா***
***மானம் உடைய தரசு.***

(அரசனுடைய நெறிமுறை எதுவென்றால்,) தன்னுடைய தர்மங்களில் தவறாமல், குடிகளிடத்தில் அதர்மம் ஏற்பட்டால் அவற்றை நீக்குவதற்கு, அளவுக்கு அதிகப்படாத தண்டனை விதிக்கும் பெருந்தன்மை உள்ளவனே நல்ல அரசன்.

***385. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த***
***வகுத்தலும் வல்ல தரசு.***

நீதி பரிபாலனம் செய்வதையும், நாட்டின் செல்வத்தை அதிகப்

படுத்துவதையும், செல்வம் சிதையாமல் சேமிப்பதையும், சேமித்த செல்வத்தைத் திட்டமிட்டு வெவ்வேறு பொதுநலக் காரியங்களுக்குப் பகிர்ந்து செலவு செய்வதையும் திறமையுடன் நடத்துகிறவனே நல்ல அரசன்.

**386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம்.**

எளிதில் காணக்கிடைப்பவனாகவும், அவர்களிடத்தில் கடுகடுத்துப் பேசாதவனாகவும் இருக்கிற மன்னன் உலகத்தாரால் கொண்டாடப் படுவான்.

**387. இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு.**

இனிய வார்த்தைகள் பேசி, வேண்டிய உதவிகளைச் செய்து குறை தீர்த்துப் பாதுகாப்பளிக்க வல்லவனாகிய அரசனாக இருந்தால் உலக மக்கள் அவன் சொன்னபடி கேட்பார்கள்.

**388. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப்படும்.**

முறை தவறாத நீதிகளைச் செய்து பாதுகாப்பதனால்தான் அரசனை மக்கள் தெய்வமாகக் கருதி வணங்குவது வழக்கம்.

**389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.**

காது கசக்கும்படியாகக் கண்டித்துப் பேசினாலும் அதைப் பொறுமையுடன் கேட்டுத் தன் குற்றங்களைத் திருத்திக் கொள்ளுகிற அரசனுடைய ஆட்சியின்கீழ் வாழ உலக மக்கள் விரும்புவார்கள்.

**390. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க் கொளி.**

தாராள குணம், சீவகாருணியம், நீதி தவறாமை, பாதுகாப்பளித்தல் ஆகிய நான்கும் பொருந்திய அரசன் மற்ற அரசர்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்குப் போன்றவன்.

# 40. கல்வி

***391. கற்க கசடறக் கற்பவை கற்றபின்***
***நிற்க அதற்குத் தக.***

(மனித உடலுக்கு இயல்பாக உள்ள) குற்றங்கள் நீங்குவதற்காகப் பல நூல்களைப் படித்துக் கல்வி கற்க வேண்டும். அதற்குத் தகுந்த நூல்களைத் தெரிந்து படித்தறிந்து அதன்படி நடந்து கொள்ள வேண்டும்.

***392. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்***
***கண்ணென்ப வாழும் உயிர்க்கு.***

கணக்கெண்ணுதல், எழுத்தறிதல் ஆகிய இரண்டும் மனிதன் நல்லறிவு அடைவதற்கு வழிகாட்டும் இரு கண்களைப் போன்றவை.

***393. கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு***
***புண்ணுடையர் கல்லா தவர்.***

(எண்ணும் எழுத்துமே கண்களாவதால்) கண் உள்ளவர்கள் என்று சொல்லத் தகுந்தவர்கள் எண்ணும் எழுத்தும் கற்றவர்களே. மற்றவர் களுடைய முகத்திலிருக்கும் கண்கள் புண்களுக்கே ஒப்பாகும்.

***394. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்***
***அனைத்தே புலவர் தொழில்.***

(கல்வி என்பது கற்ற வித்தையைக் காட்ட, வாது புரியும் புலமை அல்ல.) கூடும்போது தாமும் பிறரும் மகிழும்படியாகச் சபையிற் கூடிப் புலமைத் திறமைகளைக் காட்டுவதில் கருத்து வேற்றுமைகள் உண்டாகிப் பின் பிரியும்போது வருத்தத்தோடு பிரிந்து போவதுதான் புலவர்கள் செய்யும் வேலை.

***395. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்***
***கடையரே கல்லா தவர்.***

(படிப்பில்லாதவர்கள் எவ்வளவு செல்வச் சிறப்பு உள்ளவர்களா னாலும் பல காரியங்களுக்கும் படித்தவர்களுடைய தயையை நாட வேண்டியவர்களே.) எந்தவிதமான குறைச்சலும் இல்லாவிட்டாலும் பணக்காரர்களுடைய வாசலில் ஏழைகள் குறையிரந்து நிற்பதைப்போல் கற்றவர்கள் வாசலில் நிற்க வேண்டியவர்களே கல்லாதவர்கள்.

**396. தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத் தூறும் அறிவு.**

(கற்றவனாவதற்கு எவ்வளவு படித்தால் போதும் என்ற கணக்கில்லை.) எவ்வளவுக்கெவ்வளவு தோண்டுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு மணற் கேணியில் நீர் ஊறுவதைப் போல் எவ்வளவுக்கெவ்வளவு கல்வி கற்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அறிவு பெருகும்.

**397. யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்**
**சாந்துணையுங் கல்லாத வாறு.**

(எவ்வளவு படித்தாலும் நல்லதுதான் என்பது மட்டுமல்ல; எத்தனை மொழிகளைப் படித்தாலும் நல்லதுதான்.) எந்த நாடும் சொந்த நாடாகும் படியும் எந்த ஊரும் சொந்த ஊராகும்படியும் பலநாட்டு மொழிகளிலும் உள்ள பற்பல நூல்களையும் சாகிறவரையிலும் ஒருவன் படித்துக் கொண்டே இருந்தால்தான் என்ன?

**398. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து.**

(அப்படித் தம்முடைய ஆயுள் முழுதும் நல்லறிவை நாடிக் கற்பவருக்கு) ஒரு பிறப்பில் கற்றுக்கொள்ளும் நல்லறிவு இனிவரக்கூடிய ஏழு பிறவிகளுக்கும் பாதுகாப்பளிக்கும்.

**399. தாமின் புறுவது உலகின் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்.**

(கல்வியிற் சிறந்த பெரியோர்கள்) கற்கவேண்டியதைக் கற்று அறிய வேண்டியதை அறிந்தவர்கள் தாம் பெற்ற அறிவின்பங்களை உலகிலுள்ள எல்லாரும் அடையும்படி பிறருக்கும் கொடுத்து மகிழ்வார்கள்.

**400. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவர்க்கு**
**மாடல்ல மற்றை யவை.**

(எத்தனை பேருக்குக் கொடுத்தாலும் கல்விச் செல்வம் குறையாது. அதனால்,) அழிவில்லாத சிறப்புடைய செல்வம் கல்வியறிவுதான். மற்றச் செல்வங்கள் அப்படி ஒருவரிடத்தில் குறையாமலும் நீங்காமலும் தங்கியிருப்பது இல்லை.

# 41. கல்லாமை

*401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய*
*நூலின்றிக் கோட்டி கொளல்.*

பல நூல்களைப் படித்து நிரம்பிய கல்வியறிவில்லாதவன் ஒரு சபையில் பேசுவது, கோடுகள் இல்லாமல் தாயம் ஆடுவதைப் போன்றது. (ஏனெனில், கோடுகள் இல்லாவிடில் எந்தக் காயை எங்கே ஏன் வைப்பதென்பது முடியாது. அதுபோல் கல்வியறிவில்லாதவன் எந்தச் சொல்லை எங்கே ஏன் சொல்லுவதென்பதை அறியாதவன்.)

*402. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்*
*இல்லாதாள் பெண்காமுற் றற்று.*

(மேலும்,) கல்வியறிவில்லாதவன் பிரசங்கம் செய்ய ஆசை கொள்வது, இரண்டு கொங்கைகளும் இல்லாத ஒருத்தி பெண்மை காட்ட ஆசைப் படுவது போன்றதே (யாருக்கும் கவர்ச்சி தராது.)

*403. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்*
*சொல்லா திருக்கப் பெறின்.*

(கல்லாதவர்கள் கற்றறிந்தார் சபையில் வாயை மூடிக் கொண டிருப்பதே நல்லது.) கற்றறிந்தார் கூடியுள்ள சபையில் பேசாமல் இருக்கிற வரையிலும் கல்லாதவர்கள் வெகு நல்லவர்களாகவே மதிக்கப்படுவார்கள்.

*404. கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்*
*கொள்ளார் அறிவுடை யார்.*

(பிறர் சொல்லித் தந்ததை மனப்பாடம் செய்து கொண்டு) சொந்தக் கல்வியில்லாதவன் மிக நல்ல கருத்துக்களைப் பேசிவிட்டாலும், அறிவுடையவர்கள் அவனைக் கற்றவனாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

*405. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து*
*சொல்லாடச் சோர்வு படும்.*

(கற்றவன்போல் அறிவுள்ள சொற்களை மனப் பாடமாகப் பேசி விட்டாலும் அவன் கல்லாத ன் என்பது எளிதில் வெளியாகிவிடும்.) கல்லாத ஒருவன் கற்றவனைப் போலப் பாசாங்கு செய்த தன்மை அவனுடன் நெருங்கிப் பேச்சுக் கொடுத்தால் வெளியாகிவிடும்.

**406. உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்**
**களரனையர் கல்லா தவர்.**

(கல்வியறிவில்லாதவர்கள் சபையில் இருந்தாலும் ஒன்றுக்கும் உதவாதவர்.) கல்வியறிவில்லாதவர்கள் பெயரளவுக்குத்தான் இருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். மற்றபடி அவர்கள் ஒன்றுக்கும் உதவாத களர் நிலத்தைப் போன்றவர்களே.

**407. நுண்மான் நுழைபுலம் இல்லான் எழில்நலம்**
**மண்மாண் புனைபாவை யற்று.**

(கல்வியில்லாதவர் எவ்வளவு அழகாக இருந்தாலும்) நல்ல நூல்களை நுட்பமாக ஆராயும் கல்வியறிவில்லாதவர்களுடைய அழகின் சிறப்பு, மண்ணைக் கொண்டு திறமையுடன் செய்யப்பட்ட பொம்மையின் அழகை ஒத்ததாகும்.

**408. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே**
**கல்லார்கண் பட்ட திரு.**

(கற்றவர்கள் வறுமையிலிருந்தாலும் பிறருக்குப் பயன்படுவார்கள். கல்லாதவர்கள் செல்வத்திலிருந்தாலும் பயன்படமாட்டார்கள். அதனால்,) கல்வியில்லாதவர்களிடத்தில் உள்ள செல்வம் கற்றறிந்த நல்லவர்களுடைய தரித்திரத்தை விடப் பயனற்றது.

**409. மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு.**

(மேலான குலம் என்பதும் கல்வியினால் வருவதே.) சாதியாலும் செல்வத்தாலும் மேலான பிறப்புடையவர்களுங்கூடக் கல்வியறிவில்லா தவராக இருந்தால், சாதியாலும் செல்வத்தாலும் கீழான பிறப்புடையவர் களாக இருந்தும் கல்வியறிவுடையவர்களைப் போல் பெருமை அடைய மாட்டார்கள்.

**410. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர்.**

(கல்விதான் மனிதனை மிருகத்திலும் உயர்ந்தவனாக்குவது.) அறிவைத் துலங்க வைக்கிற நூல்களைக் கற்றவர்களோடு கல்லாதவர்களை ஒப்பிடுவது மனிதனோடு விலங்கை ஒப்பிடுவது போன்றதாகும்.

# 42. கேள்வி

**411. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.**

(மக்கள் விரும்பியடைகின்ற) செல்வங்களிற் சிறந்த செல்வம் கேள்வி இன்பம். அந்த இன்பம் மற்றச் செல்வ இன்பங்களுக்கெல்லாம் சிறந்தது.

**412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.**

(நல்ல கேள்வி இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறவர் களுக்குப் பசியும் மறந்துபோகும்.) காதுகளின் வழியாக உண்டு கொண்டிருக்கும் கேள்வி நின்றுவிட்டபோதுதான் பசியெடுத்து உணவு கொள்ளும் நினைவு உண்டாகும்.

**413. செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.**

(கேள்வியில் ஈடுபட்டிருப்பவர்கள் பசியை மறப்பார்கள் என்பது மட்டுமல்ல; மிகவும் ஆசை மூட்டக்கூடிய ருசியுள்ள தின்பண்டங் களையும்கூட அப்போது மதிக்க மாட்டார்கள்.) செவியுணவாகிய கேள்வி இன்பத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் உலகிலுள்ள மனிதர்களேயானாலும் படைப்பில் பரப்பப்பட்ட உயர்ந்த உண்டிகளைத் தின்று விடாமலிருக்கிற தேவதைகளைப் போலத் தமக்கு முன்னால் மிக இனிய உணவுப் பண்டங்கள் இருந்தாலும் பொருட்படுத்த மாட்டார்கள்.

**414. கற்றில னாயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை.**

(கேள்வி இன்பம் அவ்வளவு சிறந்தது. அதனால்,) ஒருவன் எழுதப் படிக்கத் தெரியாதவனாக இருந்தாலும் பாதகமில்லை; அறிவுரைகளைக் கேட்டுக்கொண்டாலே போதும். அந்தக் கேள்வியறிவு தடுமாற்றம் உண்டாகும் சமயங்களில் தக்க துணையாகும்.

**415. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.**

(கேள்வியறிவும் குற்றமற்ற நடத்தையுள்ளவர்களிடத்தில் கேட்பதுதான் நல்லது.) நல்லொழுக்கமுள்ளவர்களிடம் கேட்கும் அறிவுரை ஒருவனுக்கு

அவனுடைய கால் சறுக்கிவிட்ட சமயத்தில் அவன் கையிலுள்ள ஊன்று கோல்போல் விழுந்துவிடாதபடி காப்பாற்றும்.

**416. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்.**

(ஒழுக்கம் உடையவர்களிடத்தில்தான் கேட்கவேண்டுமென்பதில்லை; எவரிடத்திலானாலும்,) எவ்வளவானாலும் நல்ல அறிவுரைகளைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வளவுக்கும் மிகுந்த பெருமை உண்டாகும்.

**417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்**
**தீண்டிய கேள்வி யவர்.**

(எவரிடத்திலாயினும் எவ்வளவாயினும் அறிவுரைகளைக் கேட்டுக் கொண்டே இருப்பவர்கள்) அடிக்கடி பல நல்லுரைகளைக் கேட்டு அவற்றை எண்ணியெண்ணி உணர்ந்து சேகரிக்கப்பட்ட கேள்வி ஞானமுள்ளவர்கள் நினைவுதவறுதலாகக்கூட மூடத்தனமாகப் பேசிவிட மாட்டார்கள்.

**418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி.**

(காதுகளால் அடையக்கூடிய பயன் கேள்வி ஞானந்தான். இல்லா விடில்,) கேள்வியறிவுகள் அடிக்கடி புகுந்து அவற்றால் தொளைக்கப்படாத காதுகள் ஓசைகளைக் கேட்கக்கூடியவனவாக இருந்தாலும் செவிட்டுக் காதுகளேயாகும்.

**419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய**
**வாயின ராதல் அரிது.**

(கேள்வியறிவைப் பயபக்தியோடு கேட்டுக் கொள்கிறவர்களுக்குத் தான் விநய குணமும் உண்டாகும்.) கேள்வி ஞானத்தை விநய விருப்பத்துடன் கேட்டுக் கொள்ளாதவர்கள் பணிவான சொற்களைப் பேசக் கூடியவர்கள் ஆக முடியாது.

**420. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்.**

(ஆகையினால்,) செவியுணவாகிய கேள்வி இன்பத்தை அனுபவிக்கப் பழகாமல் வெறும் வாயுணவின் (நாக்கு) ருசிகளை மட்டும் அனுபவிக்கிற மனிதப் பிறவிகள் இறந்தாலென்ன, இருந்தாலென்ன?

# 43. அறிவுடைமை

**421. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா அரண்.**

புத்திசாலித்தனந்தான் துன்பம் வராமல் தடுத்துக் கொள்வதற்கு ஆயுதம். அது மனத்துக்குள் இருப்பதானதால் பகைவர்களாலும் புகுந்து அழித்துவிட முடியாத பாதுகாப்பு.

**422. சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ**
**நன்றின்பால் உய்ப்ப தறிவு.**

மனத்தால் அதுபோன பேோக்குகளிற் போகவிடாமல் தீய காரியங்களுக்குப் போவதைத் தடுத்து, நல்ல காரியங்களில் ஈடுபடச் செய்வதுதான் அறிவு.

**423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

எந்தப் பொருளைப் பற்றி யாரார் எப்படியெல்லாம் சொன்னாலும் அவற்றையெல்லாம் கேட்டு அவற்றுள் எது உண்மை என்று கண்டு கொள்ளச் செய்வதுதான் அறிவு.

**424. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்ப தறிவு.**

தான் சொல்வதைப் பிறர் சுலபமாகத் தெரிந்து கொள்ளும்படி விளங்கச் சொல்லி, பிறர் சொல்லுவது விளங்கும்படி அமையாவிட்டாலும் அதன் கருத்தைத் தெரிந்து கொள்ளச் செய்வது அறிவுதான்.

**425. உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்**
**கூம்பலும் இல்ல தறிவு.**

சமயோசிதமாகச் சூழ்நிலையைக் கருதி உலக வழக்கைத் தழுவி நடந்தாலும் உலகத்தார் மகிழ்வதற்கெல்லாம் மகிழ்ந்து விடாமலும், வருத்தப்படுவதற்கெல்லாம் வருந்தி விடாமலும் இருக்கச் செய்வது அறிவு.

**426. எவ்வ துறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வ துறைவது அறிவு.**

அப்போதைக்கு உலகப்போக்கு எப்படியிருக்கிறதோ அதை

அனுசரித்துப் பொது மக்களுடன் ஒட்டி நடந்து கொள்வதுதான் அறிவுடைமை.

***427. அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்***
***அஃதறி கல்லா தவர்.***

(மேலும்,) அறிவுடையவர்கள் எதனால் எது வரும் என்று, பின்னால் வரக்கூடியதை முன்னால் ஆலோசித்தறிந்து எச்சரிக்கை கொள்வார்கள். அப்படி முன் யோசனை செய்யத் தெரியாதவர்கள் அறிவில்லாதவர்கள்.

***428. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது***
***அஞ்சல் அறிவார் தொழில்.***

(ஆலோசிக்க வேண்டியதை ஆலோசிப்பதுடன் அஞ்ச வேண்டியதற்கும் அஞ்ச வேண்டும்.) அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமல் எதிர்ப்பது (தைரியமல்ல) முட்டாள்தனம்; அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுவது (கோழைத்தனமல்ல) அறிவுடைமை.

***429. எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை***
***அதிர வருவதோர் நோய்.***

(அப்படிப்பட்ட அறிவுடைமை, துன்பம் வருவதற்கு முன்னால் அதைத் தடுத்துவிடும். அதனால்) துன்பம் வருவதற்கு முன்னால் தடுத்துவிடக்கூடிய அறிவுடையவர்களுக்குத் திடுக்கிடும்படியான துன்பம் வராது. (வந்துவிட்டாலும் அதனால் குலைந்து போக மாட்டார்கள்.)

***430. அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்***
***என்னுடைய ரேனும் இலர்.***

(ஆகையினால்,) அறிவுடையவர்கள், மற்ற எது இல்லாவிட்டாலும் எல்லாம் உள்ளவர்களாவார்கள். மற்ற எது இருந்தாலும் அறிவில்லாதவர்கள் ஒன்றும் இல்லாதவர்களே ஆவார்கள்.

# 44. குற்றங்கடிதல்

**431. செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து.**

அகங்காரமும் கோபமும் அற்பத்தனமும் இல்லாதவர்களுடைய செல்வந்தான் பெருமை கொள்ளத்தக்கது.

**432. இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா**
**உவகையும் ஏதம் இறைக்கு.**

(நாட்டிற்கோ வீட்டுக்கோ தலைவனாக இருப்பவனுக்கு) பேராசையும், பெருந்தன்மையில்லாத தன்மதிப்பும், அற்பத்தனமான மகிழ்ச்சியும் தலைவனுக்குக் குற்றங்களாகும்.

**433. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழிநாணு வார்.**

(குற்றம் செய்வதில் பெரிய குற்றம், சிறிய குற்றம் என்பதில்லை.) பழிக்கு அஞ்சுகிறவர்கள் தினையளவு சிறிய குற்றம் நேர்ந்துவிட்டாலும் பனையளவு மிகப் பெரிய குற்றம் வந்துவிட்டதாக வருத்தப்படுவார்கள்.

**434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை.**

(மேலும்,) குற்றம் செய்வதுதான் துன்பங்களை உண்டாக்கும் பகை. ஆகையால், குற்றம் செய்யாமல் இருப்பதைத்தான் செல்வத்தைப் பாதுகாப்பதுபோல் கவனித்துக்கொள்ள வேண்டும்.

**435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும்.**

(குற்றம் செய்தபின் வருந்திப் பயனில்லை. செய்து விடாமல் எச்சரிக் கையாகத் தடுக்க வேண்டும்.) குற்றம் செய்வதற்கு முன் எச்சரிக்கையாக இருந்து விலக்கி விடாதவனுடைய வாழ்க்கை நெருப்புத் தீண்டுவதற்குமுன் தடுப்பாரில்லாத வைக்கோல் பொதிபோல் அழிந்தே போகும்.

**436. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
**என்குற்ற மாகும் இறைக்கு.**

(பிறர் குற்றத்தைக் கண்டிப்பதற்கு முன்னால்) தன் குற்றங்களை

முதலில் நீக்கிக்கொண்டு அதன் பிறகு பிறர் குற்றத்தைக் கண்டிக்கிற தலைவனுக்கு ஒரு துன்பமும் வராது.

**437. செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.**

(அப்படித் தன்னிடத்திலும் தனக்கு உட்பட்டவர்களிடத்திலும் குற்றமில்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.) செய்ய வேண்டியவற்றைச் செய்யாமல் அசட்டையாக இருந்து வருகிறவனுடைய செல்வவளம் தப்பாமல் கெட்டுப் போகும்.

**438. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.**

(குற்றமென்று அறிந்த பின் ஒரு குற்றமான பழக்கத்தில் மிகுந்த பற்றுடையவனாக இருப்பதற்காகவாவது) குற்றம் செய்கிற ஒருவன் தனக்கு மிகவும் பற்றுடையவனாக இருக்கிறான் என்பதற்காகவாவது குற்றத்தை நீக்காமல் அசட்டை செய்வது எந்த அறிவோடும் சேர்ந்ததல்ல.

**439. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.**

(தன் குற்றமானாலும் தன்னைச் சேர்ந்த பிறர் குற்றமானாலும் போவதற்குத்) தன்னைத்தானே குற்றமற்றவனாக ஒருநாளும் புகழ்ந்து கொள்ளக்கூடாது. பிறர் செய்கிற எந்த நன்மையற்ற காரியத்தையும் பாராட்டக்கூடாது.

**440. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.**

(குற்றங்களுக்கு மூலகாரணமாகிய) ஆசைப்பட்டதையெல்லாம் அடைய விரும்புகின்ற அறியாத்தனத்தை நீக்கிவிட்டால், அதன்பின் பகைமை என்பதற்குக் காரணமாகிய குற்றங்களும் பகைவரின் சூழ்ச்சிகளும் இல்லாமற்போகும்.

# 45. பெரியாரைத் துணைக்கோடல்

**441. அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறனறிந்து தேர்ந்து கொளல்.**

(ஒவ்வொருவரும்) தம்மினும் தர்மங்களை அறிந்தவர்களாகவும் அனுபவம் முதிர்ந்தவர்களாகவும் திறமை உள்ளவர்களாகவும் இருக்கிற பெரியவர்களுடைய ஆதரவைத் தேவைக்குத் தகுந்தபடி ஆராய்ந்தறிந்து சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.

**442. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்**
**பெற்றியாப் பேணிக் கொளல்.**

(அப்படிப்பட்ட பெரியவர்கள்,) ஒருவனுக்கு வந்து விட்ட துன்பங்களுக்கு உடனே வேண்டிய பரிகாரங்களைச் செய்து, இனி துன்பங்கள் வராதிருப்பதற்கு வேண்டிய முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளையும் செய்ய வல்லவர்கள். ஆகையால், அவர்களைத் தேடி அடையவேண்டும்.

**443. அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்.**

பெரியவர்களை அண்டி அவர்கள் எப்போதும் நமக்கு ஆதரவாக இருக்கும்படி செய்து கொள்வது பெறுதற்கருமையான பாக்கியங்களி லெல்லாம் பெரிய பாக்கியம்.

**444. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்**
**வன்மையு ளெல்லாந் தலை.**

(அந்தப் பாக்கியம் கிடைத்துவிட்டால் பிறகு அப் பெரியவர்களே நம்முடைய காரியங்களைத் தம்முடைய காரியங்களாக முன்னால் நின்று நடத்துவார்கள். ஆனால்,) தம்மைக் காட்டிலும் அறிவு, அனுபவம், திறமை முதலியவற்றில் பெரியவர்கள் தமக்கு எப்போதும் துணைவராக இருக்கப் பெறுவது தமக்குள்ள எல்லா வல்லமைகளிலும் சிறந்த வல்லமையாகும்.

**445. சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்**
**சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.**

(குறிப்பாக) ஓர் அரசனுக்கு, ஆராய்ந்து அறிவு சொல்லக் கூடியவர்களே அவனுக்கு வழிகாட்டும் கண்கள் போன்றவர்களானதால் அந்த ஆலோசனைகளை அவன் தன்னைவிடப் பெரியவர்களாக

உள்ளவர்களைத் தேடியடைந்து அவர்களிடம் கேட்டுக் கொள்ள வேண்டும்.

**446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.**

பெரியவர்களுடைய சகவாசமுள்ளவனாக அவர்கள் ஆலோசனையைக் கேட்டு நடந்துகொள்ளுகிற ஒருவனை அவனுடைய பகைவர்கள் ஒன்றும் செய்ய முடியாது.

**447. இடிக்குந் துணையாரை ஆள்வாரே யாரே
கெடுக்குந் தகைமை யவர்.**

(ஏன் என்றால், அப்போதைக்கப்போது) இடித்துக்கூறி அறிவு சொல்லும் பெரியவர்களைத் துணைவர்களாகக் கொண்டு குற்றமில்லாமல் நடந்துகொள்ளுகிறவர்களுக்குக் கெடுதி செய்பவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள்.

**448. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.**

(அப்படி) இடித்துக் கூறும் பெரியவர்கள் துணைவராக இல்லாத அரசன் பாதுகாப்பற்றவன். அவனைக் கெடுப்பவர்கள் இல்லாவிட்டாலும் தானாகவே கெட்டுப் போவான்.

**449. முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாஞ்
சார்பிலார்க்கு இல்லை நிலை.**

பெரியவர்களுடைய ஆதரவு, வியாபாரிக்கு மூலதனம் போலவும் குழந்தைக்குத் தாயின் அணைப்புப் போலவும் உதவுவது. மூலதனம் இல்லாத வியாபாரிக்கு இலாபம் இல்லை. குழந்தையை அணைத்து ஆறுதல் செய்து அறிவு சொல்லும் தாய் போன்ற பெரியவர்களுடைய ஆதரவில்லாதவர்களுக்கு நல்ல நிலைமை இருக்காது.

**450. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.**

(ஆகையால் பெரியாரைத் துணைகொண்டு அவர்கள் தொடர்பு விட்டுப்போகாதபடி நடந்துகொள்ளவேண்டும்.) தமக்குத் துணைவராக உள்ள பெரியவர்களுடைய ஆதரவு விட்டுப்போகும்படி தவறி நடந்து கொள்வது பலபேரைப் பகைத்துக் கொள்வதைவிடப் பலமடங்கு தீமை உண்டாக்கக் கூடியது.

# 46. சிற்றினம் சேராமை

**451. சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாச் சூழ்ந்து விடும்.**

பெருமையடைய விரும்புகிறவர்கள் அறிவும் ஒழுக்கமும் இல்லாத அற்பர்களுடன் சேரமாட்டார்கள். சிறுமையடைய விரும்புகிறவர்கள்தாம் அற்பர்களை உறவாகக் கொண்டாடுவார்கள்.

**452. நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு.**

தண்ணீர் எந்த நிலத்தோடு சேர்ந்திருக்கிறதோ அந்த நிலத்தின் சாரமுள்ளதாக மாறிவிடும். அதுபோல இயற்கையாக நல்ல புத்தி யுடைவர்களும் அற்ப புத்திக்காரர்களுடன் சேர்ந்தால் கெட்டுப் போவார்கள்.

**453. மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்**
**இன்னான் எனப்படுஞ் சொல்.**

அவரவர்களுடைய அறிவு அவரவர்கள் மனத்தைச் சேர்ந்ததுதான் என்றாலும், அவருக்குப் பிறர்கொடுக்கும் மதிப்பு அவர் எந்த இனத்தாரோடு நெருங்கிப் பழகுகின்றாரோ அதை ஒட்டித்தான் உண்டாகும்.

**454. மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு**
**இனத்துள தாகும் அறிவு.**

ஒருவன் தான் செய்வதெல்லாம் தன்னுடைய சொந்த அறிவினால் செய்வதாகவே எண்ணும்படி செய்து, அவனையும் ஏமாற்றிவிட்டுக் கடைசியில் அவ்வறிவு அவனுடைய சேர்க்கையின் அறிவினால் செய்வதாகவே அமைந்துவிடும்.

**455. மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனந்தூய்மை தூவா வரும்.**

(நல்ல மனமுடையவனுக்கும் சகவாசம் நல்லதாக இருந்தால்தான் அந்த மனத் தூய்மை நிலைக்கும்.) ஒருவனுடைய மனம் சுத்தமாக இருப்பது, செய்கை சுத்தமாயிருப்பது ஆகிய இரண்டும் அவன் நெருங்கிப் பழகும் மனிதர்களுடைய இனம், சுத்தமாக இருந்தால்தான் முடியும்.

**456. மனந்தூயார்க் கெச்சும்நன் றாகும் இனந்தூயார்க்கு**
**இல்லைநன் றாகா வினை.**

பழகுகின்ற இனம் சுத்தமானதாக இராமல் மனம் சுத்தமாக உள்ளவர்களுக்கு அதனால் பின்னால் நன்மைகள் வரலாம். ஆனால் மனம் சுத்தமாக இல்லாவிட்டால் சேர்ந்துள்ள இனம் சுத்தமாக உள்ளவர்களுக்கு உடனே எந்தக் காரியமும் கைகூடும்.

**457. மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்.**

மனம் கெடாமல் நல்லதாகவே இருப்பது ஒருவ னுடைய ஆன்மாவுக்குப் பலம் தரும். ஆனால் மனம் நல்லதாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் சேர்ந்திருக்கும் இனம் நல்லதாக இருந்தால் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாச் சிறப்புக்களும் உண்டாகும்.

**458. மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு**
**இனநலம் ஏமாப் புடைத்து.**

(வாழ்க்கைச் சிறப்புக்களைக் கருதாவிட்டாலும்,) மேலோர்கள் தம்முடைய மனநலம் கெட்டுப் போகாமலிருக்கப் பாதுகாப்பாகத் தாம் சேரும் இனம் நல்லதாக இருக்கவே விரும்புவார்கள்.

**459. மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்**
**இனநலத்தின் ஏமாப் புடைத்து.**

(அதனால்,) மனநலத்தால் வரக்கூடிய மறுமையை மட்டும் கருதினாலும் அதற்குங்கூடச் சகவாசத்தின் இனநலம் துணையாக உதவக்கூடிய ஒரு காவலாகும்.

**460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்**
**அல்லற் படுப்பதூஉம் இல்.**

(ஆகையினால்,) மனிதருக்கு நல்ல சகவாசத்தைவிட நன்மை செய்யக் கூடிய துணையும் இல்லை; கெட்ட சகவாசமாகிய சிற்றினச் சேர்க்கையை விடத் துன்பம் உண்டாக்கக்கூடிய பகையும் இல்லை.

# 47. தெரிந்து செயல்வகை

**461. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்**
**ஊதியமும் சூழ்ந்து செயல்.**

(ஒரு வேலையைத் தொடங்கு முன்னால்) அதற்குச் செய்யவேண்டிய செலவுகளையும், அந்த வேலையினால் அடையக்கூடிய நன்மைகளையும், அந்த வேலை முடிந்தபின் அதன் வழியாகப் பின்னால் வரக்கூடிய பலாபலன்களையும் ஆராய்ந்து அறிந்துகொண்டு அதன்பிறகே அந்தக் காரியத்தில் இறங்க வேண்டும்.

**462. தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல்.**

(அப்படி ஆராயும்போது,) அந்த வேலையைப் பற்றித் தெரிந்திருக்கிற தொழிலாளிகளைத் தேடியடைந்து, அவர்களுடன் ஆலோசனை செய்து, அதன் பிறகு அதை ஆரம்பிக்கிறவர்களுக்கு முடியாத காரியம் யாதொன்று மில்லை.

**463. ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை**
**ஊக்கார் அறிவுடை யார்.**

(தெரிந்தவர்களோடு ஆலோசிக்காமல் அவசரப்பட்டு எந்தக் காரியத்தையும் தொடங்கக் கூடாது.) இலாபத்துக்கு ஆசைப்பட்டு உள்ள முதலை இழந்துவிடக்கூடிய காரியத்தை அறிவுடையவர்கள் ஆரம்பிக்க மாட்டார்கள்.

**464. தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்**
**ஏதப்பாடு அஞ்சு பவர்.**

ஏமாந்து போனவர் என்ற இகழ்ச்சிக்கு ஆளாகக் கூடாதென்று அஞ்சுகின்றவர்கள் தமக்கே தெளிவாக விளங்காத காரியத்தைப் பிறர் சொல்லுவதை மட்டும் வைத்துக்கெண்டு ஆரம்பித்துவிட மாட்டார்கள்.

**465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோ ராறு.**

(ஆகையினால்,) செய்ய நினைக்கிற காரியத்தைப் பற்றி எல்லா விவரங்களையும் தீர ஆராயாமல் செய்யத் தொடங்கி விடுவது (பகைவர்களாகிய) இடையூறுகளைப் பாத்தி கட்டிப் பயிர் செய்வதற்கான ஒரு வழி.

**466. செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.**

செய்யத்தகாத காரியத்தைச் செய்து விடுவதாலும் தீமை உண்டு; செய்ய வேண்டிய காரியத்தை உடனே செய்யாமல் தாமதிப்பதாலும் தீமை உண்டாகும்.

**467. எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.**

(அதனால்,) தீர ஆராய்ந்து அறிந்துகொண்ட பின்புதான் காரியத்தை ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்துவிட்டு நடக்க நடக்க ஆராய்ந்து கொள்ளலாம் என்பது குற்றம்.

**468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.**

(ஏன் எனில்,) காரியத்தைப் பற்றியும் அதை முடிக்கும் வழிகளைப் பற்றியும் வருந்தியாவது ஆராய்ந்து கொள்ள வேண்டும். இல்லையானால், பின்னால் வரக்கூடிய வருத்தங்களைப் பலபேர் கூடித் துணைநின்று தடுத்தாலும் தவிர்க்க முடியாமல் காரியம் கெட்டுப்போகும்.

**469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.**

(காரியம் ஆரம்பிப்பதற்கு முன்னால் மட்டும் அல்லாமல் காரியம் முடிந்த பின்பும் தெரிந்துசெய்ய வேண்டியவை உண்டு.) காரியம் நன்றாக முடிப்பதிலும் அதற்குச் சம்பந்தப்பட்டவர்களுக்கு அவரவர்களுடைய குணமறிந்து தக்கபடி செய்வன செய்யாவிட்டால் அதுவும் குற்றமாகும்.

**470. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.**

(சுருங்கச் சொன்னால், எந்தக் காரியம் செய்வதானாலும்,) அந்தக் காரியம் பழிவராத காரியமா என்பதை எண்ணிப் பார்த்துச் செய்ய வேண்டும். தனக்கு ஏற்காத காரியத்தை உலகமும் ஏற்றுக் கொள்ளாது. அதைச் செய்தால் பழிவரும்.

# 48. வலியறிதல்

*471. வினைவலியும் தன் வலியும் மாற்றான் வலியும்*
*துணைவலியும் தூக்கிச் செயல்.*

செய்யக் கருதுகின்ற வேலையின் கடினத்தையும் அதைச் செய்து முடிக்கத் தனக்குள்ள வல்லமையையும், (அந்த வேலையைக் கெடுக்கக் கூடிய பகைவன் இருந்தால்) அவனுடைய வல்லமையையும், (தனக்கும் அந்தப் பகைவனுக்கும்) துணை வரக்கூடியவர்களுடைய பலத்தையும் நிறுத்து அளந்துகொண்டு அதன் பிறகு செய்ய வேண்டும்.

*472. ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்*
*செல்வார்க்குச் செல்லாதது இல்.*

(அப்படி அளந்து) தம்மால் எவ்வளவு முடியும் என்பதை அறிந்து கொண்டு அந்த அளவோடு நின்று செய்கிறவருக்கு நடக்காத காரியம் ஒன்றுமில்லை.

*473. உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி*
*இடைக்கண் முரிந்தார் பலர்.*

தம்முடைய சக்தியை அளந்து அறிந்துகொள்ளாமல் வெறும் ஆவேசத்தில் ஒரு காரியத்தை ஆரம்பித்து அதை முடிக்க முடியாமல் இடையில் விட்டுவிட்டுக் கெட்டுப் போனவர்கள் உலகத்தில் பலர் உண்டு.

*474. அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை*
*வியந்தான் விரைந்து கெடும்.*

(அதனால்,) தனக்கு அமைந்துள்ள சக்திகளுக்குத் தகுந்த மட்டில் காரியத்தின் பலத்தை அளந்துகொள்ளாமல் தன்னுடைய பலத்தை அதிகமாக மதிப்பிட்டுக்கொண்டு தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுகிறவன் விரைவில் கெட்டுப்போவான்.

*475. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்*
*சால மிகுத்துப் பெயின்.*

(யாரானாலும் தம்முடைய சக்திக்கு மீறிச் செய்துவிட முடியாது.) மிகவும் இலேசான மயில் தோகையைப் பாரம் ஏற்றிய வண்டியானாலும் அந்த மயில் தோகையையும் அளவுக்கு மீறி அந்த வண்டியில் ஏற்றினால் அதன் அச்சு முறிந்துவிடும்.

**476. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்**
**உயிர்க்கிறுதி யாகி விடும்.**

(மேலும், அளவறியாமல் செய்வது எதைப்போல் என்றால்,) ஒரு மரத்தின் நுனிக்கொம்பின் உச்சிக்குப் போய்விட்டவன் அதற்கு மேலும் ஏற முயன்றால் உயிருக்கே முடிவு வந்துவிடும்.

**477. ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி.**

(தானம் கொடுப்பதிலும்) உன்னுடைய பொருளாதாரத்தின் அளவை அறிந்து அதற்குத் தக்கபடி கொடு; அதுதான் செல்வத்தைப் பாதுகாத்துப் பயன்படுத்திக் கொள்ளும் வழி.

**478. ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை**
**போகாறு அகலாக் கடை.**

(ஏனென்றால்,) ஒருவனுக்கு வரும்படி குறைவாக இருந்தாலும் பாதகமில்லை. செலவு மட்டும் வரவுக்கு அதிகப் படாமல் இருந்தால் கெடுதி வராது.

**479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்.**

அளவறிந்து அதற்குத் தக்கபடி வாழ்க்கை நடத்தாதவனுடைய ஆடம்பரச் சிறப்பு, இருப்பதுபோல் இருந்து இல்லாமற்போய் மீண்டும் தலைதூக்க முடியாமல் கெட்டுப் போகும்.

**480. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.**

(உபகாரம் செய்வதானாலும்) தனக்குள்ள செல்வத்தின் அளவைக் கணக்குப் பார்க்காமல் செய்கிற உபகாரச் செலவுகளாலும் உள்ளதெல்லாம் விரைவில் இல்லாதுபோய் வறுமை வந்துவிடும்.

# 49. காலம் அறிதல்

***481.* பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது.**

(அச்சம் மிகுந்து வலிமை குறைந்த) காக்கை (அதைவிட அச்சம் குறைந்து வலிமை மிகுந்ததான) ஆந்தையைப் பகற் பொழுதில் வென்று விடும். அதைப்போல் அரசனுக்குத் தன் எதிரிகளை வெல்லுவதற்குத் தக்க காலம் வேண்டும்.

***482.* பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்**
**தீராமை ஆர்க்கும் கயிறு.**

(அரசர் பகைவரை வெல்ல மட்டுமல்ல, எந்தக் காரியத்துக்கும் பருவகாலம் உண்டு.) பருவகாலத்தை அறிந்து அந்தந்தக் காரியத்தை அதனதன் பருவகாலத்தில் செய்யத் தெரிவது, செல்வம் தம்மைவிட்டு நீங்கிவிடாமல் இருக்கச் செய்கிற உபாயம்.

***483.* அருவினை என்ப உளவோ கருவியான்**
**காலம் அறிந்து செயின்.**

(ஒரு காரியத்தைச் செய்து முடிக்க அவசியமான கருவிகளுக்குள்) தகுந்த காலம் என்பதும் ஒரு கருவியாகும். அதை அறிந்து செய்தால் முடியாத காரியங்களும் உண்டா? இல்லை.

***484.* ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்**
**கருதி இடத்தாற் செயின்.**

காலங் கருதிக் காத்திருந்து, வாய்ப்பான காலம் வந்தவுடன் காரியத்தைச் செய்தால் உலகம் முழுவதையும் வசப்படுத்த விரும்பினாலும் முடியும்.

***485.* காலம் கருதி இருப்பர் கலங்காது**
**ஞாலம் கருது பவர்.**

(உலகம் மெச்சும்படி) உயர்ந்த காரியங்களைச் செய்து முடிக்கிறவர்கள் தக்க காலம் வாய்க்கிற வரையிலும் பதற்றமில்லாமல் பொறுத்திருப்பார்கள்.

***486.* ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேருந் தகைத்து.**

(அது எதைப் போலென்றால்,) ஊக்கமுடையவன் (காலம் கருதிக்

கலங்காமல்) அடங்கியிருப்பது சண்டையிடுகிற ஆட்டுக்கடா எதிரியைத் தாக்கப் பின்புறமாக நகருவதைப் போன்றது.

**487. பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து**
**உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.**

(தமக்கு ஒருவன் பகையான காரியத்தைச் செய்து விட்டாலும்,) புத்திசாலிகள் சட்டென்று அப்போதே தம்முடைய கோபத்தைக் காட்டிவிடாமல் காலங்கருதி மனத்துக்குள்ளேயே கோபத்தை அடக்கிக் கொள்வார்கள்.

**488. செறுநரைக் காணின் சுமக்க இறுவரை**
**காணின் கிழக்காம் தலை.**

பகைவர்களைக் கண்டாலும் அவர்களை வெல்லத் தக்க தீர்மானமான காலம் தம்முடைய அறிவுக்குப் புலனாகிற வரையிலும் பொறுக்க வேண்டும்.

**489. எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே**
**செய்தற் கரிய செயல்.**

(காலங்கருதிக் காத்திருக்கும்போது,) தான் குறித்துள்ள காலத்துக்கு முன்னால் எதிர்பாராதபடி இதைவிட அருமையான வாய்ப்புக் கிடைக்காதென்ற சமயம் கிடைத்து விட்டால் பின்னால் அப்படிப்பட்ட வாய்ப்புக் கிடைக்காதென்பதற்காக அப்போதே குறித்த காரியத்தைச் செய்துவிட வேண்டும்.

**490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த இடத்து.**

(காலத்துக்காகக் காத்திருப்பதும் வாய்ப்பு நேர்ந்தால் உடனே செய்வதும் எப்படியிருக்க வேண்டுமென்றால்,) ஒரு கொக்கு தன் இரைக்காகக் காலங்கருதி சிறிதும் அசைவில்லாமல் வாடியிருப்பது போல் இருக்கவேண்டும். வாய்ப்பு வந்தவுடன் அந்தக் கொக்கு நறுக்கென்று மீனைக் கொத்திக்கொள்வதைப்போல் காரியத்தை முடித்துக் கொள்ள வேண்டும்.

# 50. இடன் அறிதல்

***491.*** ***தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்***
***இடங்கண்ட பின்அல் லது.***

(வலிமையறிதல், காலமறிதல் என்பதைப்போலவே தக்க இடத்தையும் கருத வேண்டும்.) தகுந்த இடத்தை அறிந்து கொள்ளாமல் எந்தக் காரியத்தையும் தொடங்கிவிடக் கூடாது. இந்த விஷயத்தை எவரும் அலட்சியம் செய்து விடவேண்டாம்.

***492.*** ***முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்***
***ஆக்கம் பலவுந் தரும்.***

(ஏனென்றால்,) பலவிதமான திறமைகள் உள்ளவர்களுக்கும் பாதுகாப்பான இடத்தைச் சேர்ந்திருப்பதால் கிடைக்கக்கூடிய வல்லமை பல நன்மைகளைத் தரும்.

***493.*** ***ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து***
***போற்றார்கண் போற்றிச் செயின்.***

(பாதுகாப்புள்ள இடத்தின் சிறப்பால் ஆற்றலும் அதிகப்படும்.) காரியத்தைக் கெடுத்துவிடக்கூடிய பகைவர்கள் வரமுடியாத பாது காப்புள்ள இடத்தைத் தெரிந்து அதிலிருந்து கொண்டு காரியத்தைச் செய்தால் திறமை யில்லாதவர்களும் திறமையுடன் வெற்றியடைவர்.

***494.*** ***எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து***
***துன்னியார் துன்னிச் செயின்.***

(மேலும்,) தக்க இடத்தை ஆராய்ந்தறிந்து அதைச் சேர்ந்து அந்த இடத்தைவிட்டுப் பெயர்ந்து விடாமல் அங்கிருந்தே காரியத்தைச் செய்தால், அக்காரியத்தைக் கெடுக்க எண்ணியவர்களுடைய எண்ணம் பலிக்காது.

***495.*** ***நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்***
***நீங்கின் அதனைப் பிற.***

(தனக்குப் பலமான இடத்தைவிட்டு விலகாமல் இருந்தால் தோல்வி வராது என்பது எதைப்போல என்றால்,) ஆழமான தண்ணீரில் இருக்கிற வரையிலும் முதலையானது மற்ற எந்தப் பிராணியையும் வென்றுவிடும். ஆனால் தண்ணீரை விட்டு வெளியே வந்துவிட்டால் அந்த முதலையை மற்ற எந்தப்பிராணியும் கொன்றுவிடும்.

**496. கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்**
**நாவாயும் ஓடா நிலத்து.**

(மற்றுமோர் உதாரணமாக,) உறுதியான சக்கரங்கள் உள்ளன வானாலும் உயரமான தேர்கள் கடலில் ஓடமாட்டா. கடலில் ஓடுகின்ற படகுகளும் நிலத்தில் ஓடமாட்டா.

**497. அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை**
**எண்ணி இடத்தாற் செயின்.**

(அச்சமற்ற வீரனுக்கும் தக்க இடம் வேண்டும்.) அஞ்சாமை இருந்தால் போதும், வேறு துணை வேண்டியதில்லை என்பவர்களுக்கும் சரியான பாதுகாப்புள்ள இடம் அமைந்தால் அந்த அஞ்சாமை குறையாமல் இருக்கும்.

**498. சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்**
**ஊக்கம் அழிந்து விடும்.**

(பாதுகாப்பான இடத்தில் இருந்துகொண்டால்) குறைந்த பரிவாரமுள்ளவனானாலும் ஒருவன் தகுந்த இடத்தில் மட்டும் இருந்துகொண்டால், மிகுந்த பரி வாரங்கள் உள்ளவன் அவனை வெல்ல நினைக்கும் முயற்சிகள் பலிக்கமாட்டா.

**499. சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்**
**உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.**

(பாதுகாப்பான இட வசதி இல்லை என்பதற்காக இருக்கிற இடத்தையும் விட்டுவிடக் கூடாது.) பாதுகாப்பு வசதியும் மற்றச் சிறப்புக்களும் இல்லாவிட்டாலும் மக்கள் அவரவர்களுடைய உறைவிடத்தை விட்டுவிடாமல் இருப்பது அருமையான காரியம்.

**500. காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா**
**வேலாள் முகத்த களிறு.**

(ஏனெனில், இடவசதியைத் தேடிச் சொந்த இருப்பிடத்தையும் விட்டுவிட்டு அபாயத்தில் சிக்கிக்கொள்ள நேரும், எதைப் போல் என்றால்,) முகத்தில் வேல்களைப் போன்ற தந்தங்களுள்ள அச்சமில்லாத யானை கால்கள் புதைந்து கொள்ளும்படியான சேற்றுநிலத்தில் சிக்கிக்கொண்டால், அதைச் சிறுநரியும் வென்றுவிடும்.

# 51. தெரிந்து தெளிதல்

**501. அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.**

(தன் காரியத்தைச் செய்ய ஒருவனை நியமிக்கிறபோது அவனைப் பற்றி நன்றாக அறிந்துகொண்ட பிறகே அவனை நம்ப வேண்டும்.) தர்மங்களை மதித்து நடப்பவனா, நல்வழியில் பொருள் சம்பாதித்து வாழ்க்கை நடத்துகிறவனா, குற்றமான இன்பங்களை விரும்பாதவனா, சமயம் நேர்ந்தால் உயிருக்கு அஞ்சாமல் உதவக்கூடியவனா என்ற நான்கையும் விவரமாக அறிந்துகொண்ட பிறகே ஒருவனை நம்பவேண்டும்.

**502. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.**

(அவ்வளவையும் ஆராய்வது அனுபவத்தில் மிகவும் கடினமானது தான். அதனால் குறைந்தபட்சமாக) நல்ல குடும்பத்தில் பிறந்தவனாகவும், இதுவரைக்கும் குற்றங்களில் சம்பந்தப்படாதவனாகவும், குற்றம் செய்ய அஞ்சுகிறவனாகவும் இருக்கிறவனிடத்தில் நம்பிக்கை வைக்கலாம்.

**503. அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.**

(படித்தவன் என்பதற்காக மட்டும் ஒருவனை நம்பி விடக்கூடாது.) அருமையான நூல்களைக் கற்று ஐயந் திரிபுகள் இல்லாதவர்களிடத்திலும் நம்பத்தகாமை இல்லாதிருக்கும் என்பது இல்லை.

**504. குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.**

(குற்றமே இல்லாதவர்களாகப் பார்த்துத்தான் நம்ப வேண்டுமென்பது முடியாத காரியம். யாரிடத்திலும் குற்றமும் உண்டு. குணமும் உண்டு. அதனால்,) ஒருவனுடைய நல்ல குணத்தையும் ஆராய்ந்து அவனுடைய கெட்ட குணத்தையும் ஆராய்ந்து எது அதிகமோ அதைக்கொண்டு தீர்மானிக்க வேண்டும்.

**505. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.**

(ஒருவனுடைய குணத்தை அவனுடைய செயல்களால் கண்டு கொள்ளலாம்.) நல்ல குணமுடையவன் என்ற பெருமைக்கும் கெட்ட

குணமுடையவன் என்ற சிறுமைக்கும் அவனவனுடைய செயல்களே மாற்றறியும் உரை கல்லாகும்.

**506. அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.**

(முக்கியமாக,) அன்பில்லாதவர்களை நம்பிவிடுவதை விலக்க வேண்டும். அவர்கள் யாரிடத்திலும் பற்றுடையவர்களாக நடந்துகொள்ள மாட்டார்கள்; பழி பாவங்களுக்கும் அஞ்ச மாட்டார்கள்.

**507. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும்.**

(மேலும்,) தனக்குப் பிரியமானவர்கள் என்ற காரணத்துக்காக மட்டும் அறிய வேண்டியதை அறியாதவர்களை நம்பிக் காரியத்தை அவர்களிடம் விடுவது முழு மூடத்தனமாகும்.

**508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.**

(அதனால்,) ஆலோசிக்காமல் இன்னொருவரை நம்பி விடுகிற வனுடைய வாழ்க்கை நெடுகத் தீராத துன்பம் உள்ளதாகிவிடும்.

**509. தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.**

(நம்பத் தகுந்தவர்கள் என்று தெரிந்தவர்களிலும் எல்லாரும் எல்லாக் காரியத்துக்கும் தகுதியுள்ளவர்களாக இருக்க முடியாது. அதனால்,) ஆராய்ந்தறியாமல் யாரையும் நம்பிவிடக்கூடாது. ஆராய்ந்தறிந்து நம்பத் தகுந்தவன் என்று தெரிந்தபின், அவன் எந்தக் காரியத்துக்கு ஏவத் தகுந்தவன் என்பதையும் ஆராய்ந்து ஒப்படைக்க வேண்டும்.

**510. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.**

(முடிவாக) ஆராயாமல் நம்பிவிடுவதும், ஆராய்ந்து நம்பி விட்டவனிடத்தில் இடையிடையே சந்தேகம் கொள்ளுவதும் ஓயாத துன்பமுண்டாக்கும்.

# 52. தெரிந்து வினையாடல்

**511. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப் படும்.**

குறிப்பிட்ட காரியத்தின் நன்மை தீமைகளை அறிந்து முன்னே அப்படிப்பட்ட காரியத்தை நன்றாகச் செய்து முடித்துள்ள அனுபவம் உள்ளவனைக் கொண்டு அதைச் செய்விக்க வேண்டும்.

**512. வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை.**

(அந்த அனுபவத்தோடு,) வருகின்ற வழிகளை அதிகப் படுத்தி, பொருளாதார நிலைமையை வளப்படுத்தி அந்த வளம் நிலைப்பதற்கான முறைகளை ஆராயக் கூடியவன் காரியம் செய்ய வேண்டும்.

**513. அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு.**

நம்மிடத்தில் அன்பு, குறிப்பிட்ட காரியத்துக்கு வேண்டிய அறிவு, அதை செய்து முடிக்கும் திறமை, நமக்காக அவனிடத்தில் வருகிற பணத்தின்மேல் ஆசை கொள்ளாத குணம் ஆகிய நான்கும் நன்றாகப் பொருந்தினவனைக் கொண்டே காரியத்தைச் செய்விக்க வேண்டும்.

**514. எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகும் மாந்தர் பலர்.**

அப்படியெல்லாம் ஆராய்ந்து தேர்ந்தெடுத்தாலும் குறிப்பிட்ட காரியத்தின் விவரமறிந்து செய்யத் தெரியாதவர்களே அதிகமாக உள்ளவர்கள்.

**515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்**
**சிறந்தானென்று ஏவற்பாற் றன்று.**

(ஆகையினால்,) குறிப்பிட்ட வேலையை அறிந்தவனாகவும் அதைச் சமாளித்து முடிக்கக் கூடியவனாகவும் இருந்தாலன்றி ஒருவனை அவனுக்குள்ள வேறு சிறப்புக்களைக் கருதி வேலை செய்ய ஏவக்கூடாது.

**516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு**
**எய்த உணர்ந்து செயல்.**

(அதனால்,) காரியத்தைச் செய்ய ஆளைத் தேடிக் கொண்டு அந்த

ஆள் இந்தக் காரியத்துக்குத் தகுந்தவனா என்பதையும் தெரிந்து செய்யவேண்டும்.

517. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்.

(சில காரணங்களினால் சில வேலைகளைக் குறிப்பிட்ட வசதியுள்ள சிலபேர்தாம் செய்ய முடியும். அதனால்,) இந்தக் காரியத்தை இன்னின்ன காரணத்தால் இவன்தான் செய்துமுடிப்பான் என்று ஆராய்ந்தறிந்து அந்தக் காரியத்தை அவனிடம் விடவேண்டும்.

518. வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல்.

காரியத்தைச் செய்யத் தகுதி உள்ளவன் என்று அறிந்த பின் அந்தக் காரியத்துக்கு அவனையே பொறுப்பாளியாக்கி விடவேண்டும்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு.

(அப்படிப் பொறுப்பை ஒப்படைத்தபின் இடையிடையே குறுக்கிட்டு ஆலோசனையோ அதிகாரமோ செலுத்தக்கூடாது. ஏனெனில்,) வேலை நடந்து கொண்டிருக்கும் போது அந்த வேலைக்குப் பொறுப்பாளியாக அதைச் செய்து கொண்டிருக்கிறவனுடைய உறவு கெட்டுப் போகும்படி குறுக்கிடுகிற எசமானுடைய சிறப்புக்கள் நீங்கிவிடும்.

520. நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(ஆகையினால்,) நாட்டின் காரியங்களைச் செய்கிற ஊழியர்கள் அதிருப்தியடையாமல் இருந்தால், நாட்டின் நலம் கெடாது. இதை ஓர் அரசன் தினந்தோறும் கவனிக்க வேண்டும்.

# 53. சுற்றந் தழால்

**521. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே யுள.**

(அடிக்கடி சந்திக்கின்ற) தொடர்பு விட்டுப்போனாலும் பழைய உறவுகளை மறந்துவிடாமல் பாராட்டிக்கொண்டிருக்கிற இயல்பு சுற்றத்தார்களிடத்தில்தான் உண்டு.

**522. விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா**
**ஆக்கம் பலவுந் தரும்.**

(அடிக்கடி சந்திக்காவிட்டாலும் மனத்தில் அன்பு விட்டுப் போகாதிருந்தால்,) விருப்பம் விட்டுப்போகாத உறவு ஈரம் அற்றுப்போகாத மரம் புதுப்புதுத் தளிர்விடுவதைப் போல் புதுப்புது நன்மைகளை உண்டாக்கிக் கொண்டே இருக்கும்.

**523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்**
**கோடின்றி நீர்நிறைந் தற்று.**

(சுற்றத்தார் இருப்பதுதான் ஒருவனுடைய வாழ்க்கையின் இன்பமும் பயனும்.) குலவி மகிழ உற்றார் உறவினர்கள் இல்லாதவனுடைய வாழ்க்கை செல்வம் நிறைந்திருந்தாலும் கரையில்லாத ஏரியில் நீர் நிறைவது போலப் பயனற்றதும் பாதுகாப்பற்றதுமாக வீணாகிவிடும்.

**524. சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்**
**பெற்றத்தால் பெற்ற பயன்.**

(அதனால், செல்வத்தின் பயனைச் சரியாக அடைவதற்கு) சுற்றத்தார்கள் தன்னைச் சூழ்ந்திருக்கும்படி நடந்து கொள்வதே ஒருவன் செல்வத்தைப் பெற்றதனால் அடையக்கூடிய பயன்.

**525. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்.**

(அப்படிச் சுற்றத்தார் சூழ்ந்துள்ளவனாக இருப்பதற்கு) வெகுமதிகளைக் கொடுப்பதும் இனிமையான வார்த்தைகளையே பேசுவதும் செய்வதால், ஒருவன் அணியணியாகப் பல சுற்றத்தார்களால் சூழப் பட்டவனாக இருப்பான்.

**526. பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்**
**மருங்குடையார் மாநிலத்து இல்.**

(அந்தக் குணங்கள் மிகுந்தவனாய்) பெரிய கொடையாளியாகவும் கோபம் இல்லாமல் கொடுப்பவனாகவும் உள்ளவனைவிடப் பக்க பலம் உள்ளவர்கள் இந்தப் பெரிய உலகத்தில் யாரும் இல்லை.

**527. காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள.**

(அப்படிக் கொடுப்பதிலும்) காக்கையானது (தீனி கிடைத்ததும் தனக்கு மட்டும் என்று மறைக்காமல்) கரைந்து கத்தித் தன்னுடைய சுற்றமான மற்ற காகங்களையும் உண்ண அழைக்கும். அப்படி சுற்றத்தாரையும் தானே அழைத்துத் தனக்குக் கிடைத்த செல்வத்தை அவர்களும் அனுபவிக்கச் செய்கிற குணமுள்ளவர்க்கே துணைப்பலமும் அதிகப்படும்.

**528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**
**அதுநோக்கி வாழ்வார் பலர்.**

(ஒரு குடும்பி தன்னுடைய சுற்றத்தார் அனைவரையும் சரிசமானமாக நடத்தலாம். ஆனால் ஓர் அரசன்) தன் சுற்றமாகிய துணைவர்கள் எல்லாரையும் ஒரே மாதிரியாக நடத்திவிடாமல் அவரவர்கள் பதவிக்குத் தக்கபடி வரிசைகள் செய்ய வேண்டும். அதனால் அநேகர் அரசனை விரும்பித் துணைப்பலமாகச் சூழ்ந்திருப்பார்கள்.

**529. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்**
**காரணம் இன்றி வரும்.**

(அப்படி நடந்துகொண்டாலும்,) தனக்குச் சுற்றமாக இருந்து தான் ஒரு தவறு செய்யாமலும் தன்னைவிட்டுப் பிரிந்து போகிறவர்களும் உண்டு.

**530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்திருந்து எண்ணிக் கொளல்.**

(அப்படிப் பிரிந்துபோனவர்கள் மீண்டும் தன்னிடம் வந்தால்,) தன்னுடன் உறவாக இருந்து தன்னைவிட்டுப் பிரிந்துபோன ஒருவன் ஏதாவது ஒரு காரணத்துக்காக மீண்டும் தன்னுடன் சேரவந்தால், அரசன் நுணுக்கமாகவும் நிதானத்தோடும் ஆராய்ந்து எண்ணிப் பார்த்துத்தான் அவனைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

# 54. பொச்சாவாமை

**531. இறந்த வெகுளியின் தீதே சிறந்த**
**உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.**

(நல்ல நிலைமையில் இருக்கும்போது யாரும் தம்முடைய கடமைகளை மறந்துவிடுவது வழக்கம். அதனால்,) குற்றமற்ற இன்பங்களே யானாலும் அவற்றை அனுபவிக்கிற மகிழ்ச்சியினால் கடமைகளை மறந்துவிடுவது அளவு கடந்த கோபத்தினால் உண்டாகும் தீமைகளைவிட அதிகத் தீமையை உண்டாக்கிவிடும்.

**532. பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை**
**நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.**

(எப்படியெனில்,) தொடர்ச்சியான தரித்திரம் ஒருவனுடைய அறிவைச் சிறுகச் சிறுக அழித்துவிடுவதைப் போல, தொடர்ச்சியான இன்பத்தில் கடமைகளை மறந்து விடுவது ஒருவனுடைய புகழைச் சிறுகச்சிறுக அழித்துவிடும்.

**533. பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுவுலகத்து**
**எப்பால்நூ லோர்க்கும் துணிவு.**

கடமைகளை மகிழ்ச்சியில் மறந்து விடுபவர்களுக்குப் புகழால் வரக்கூடிய நன்மைகள் இல்லை. இது உலகத்தில் எந்த நாட்டிலும் அறிவாளிகள் அனைவரும் கண்ட உண்மை.

**534. அச்ச முடையார்க்கு அரணில்லை ஆங்கில்லை**
**பொச்சாப் புடையார்க்கு நன்கு.**

(வேறு குற்றங்கள் செய்யாவிடினும் கடமைகளை மறந்திருப்பதே ஒருவனைக் கெடுத்து விடும்.) பயங்கொள்ளிகள் எவ்வளவு பாதுகாப்பான இடத்திலிருந்தாலும் அவர்களுடைய பயமே அவர்களைக் குலைத்து விடும். அதுபோல் எவ்வளவு சுகத்திலிருந்தாலும் கடமைகளை மறந்திருக்கும் குற்றமே ஒருவனைக் கெடுத்துவிடும்.

**535. முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை**
**பின்னூறு இரங்கி விடும்.**

(ஏனென்றால்,) இன்ப காலத்தில் தன் கடமைகளை மறக்கிறவன் பின்னால் வரக்கூடிய துன்பங்களை உணர்ந்து முன்னெச்சரிக்கை செய்ய

முடியாத குற்றமுடையவன். அக்குற்றத்தால் பின்னால் துன்பங்கள் வந்தே தீரும். அதனால் அவன் நொந்தே போவான்.

**536. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை**
**வாயின் அதுவொப்பது இல்.**

(அதனால்,) எப்போதும் யாரிடத்திலும் அவரவர்க்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வதை மறந்து விடாமல் இருக்கும் குணம் ஒருவனுக்கு இருக்குமானால் அதற்கு இணையான சிறப்பு வேறில்லை.

**537. அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்**
**கருவியால் போற்றிச் செயின்.**

(அப்படிப்பட்டவன் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியும்.) கடமைகளை மறந்துவிடாமை என்ற கருவியைக் கொண்டு கவனத்துடன் காரியம் செய்பவனுக்கு முடியாத காரியம் ஒன்றுமில்லை.

**538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது**
**இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.**

(தினசரி கடமைகளை மறந்துவிடாமல் இருப்பதோடு புகழும் புண்ணியமும் உண்டாக்கக்கூடிய விசேட காரியங்களையும் மறந்து விடக்கூடாது.) புகழ்தரக்கூடிய நல்ல காரியங்களையும் மறந்துவிடாமல் செய்து கொண்டிருக்க வேண்டும். அப்படிச் செய்யாது இகழ்ந்தவர் களுக்குப் (புண்ணியம் இல்லாததால்) பின்வரும் பிறவிகளுக்கு நன்மையில்லை.

**539. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்**
**மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.**

(ஒவ்வொருவரும்) தாம் மகிழ்ச்சிக் காலத்தில் களிப்படையும்போது அப்படிப்பட்ட மகிழ்ச்சியால் கடமைகளை மறந்து கெட்டுப்போனவர் களுடைய சரித்திரங்களை எண்ணிப் பார்க்க வேண்டும்.

**540. உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்**
**உள்ளியது உள்ளப் பெறின்.**

(ஆகையினால்,) நினைவிலிருக்க வேண்டிய நல்ல காரியங்களை மறந்துவிடாமல் சிந்தனை செய்து கொண்டேயிருந்தால் நினைத்ததை நினைத்தபடி முடிக்கலாம்.

# 55. செங்கோன்மை

**541. ஒர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.**

(அரசனுடைய செங்கோல் என்பது) ஒரு வழக்கை நிதானமாகக் கூர்ந்து கேட்டுப் பாரபட்சம் இல்லாமல் நடுவு நிலைமை காத்து, அவ்வழக்கைப்பற்றி விசாரிக்க வேண்டியவர்கள் யாராக இருந்தாலும் அவர்களை விசாரித்து அறிந்த பின் தீர்ப்புச் செய்வதே செங்கோல் முறை.

**542. வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.**

(அரச நீதியினால்தான் சமுதாயம் சுகமாக வாழ முடியும்.) உலகத்திலுள்ள எல்லா உயிர்களின் நல்வாழ்வும் மழையைப் பொறுத்து அமையும், அதைப்போல் ஒரு நாட்டிலுள்ள எல்லாக் குடிமக்களின் நல்வாழ்வும் அந்நாட்டின் மன்னவனுடைய செங்கோன்மையைப் பொறுத்தது.

**543. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.**

(எப்படியெனில்) அந்தணர்கள் ஓதும் வேதம் முதலிய ஞான நூல்களின் அறிவு மக்களிடையே பரவுவதற்கும், அதனால் நாட்டில் அறங்கள் சரியாக நடப்பதற்கும் ஆதரவாக இருப்பது அரசாட்சியின் செங்கோன்மை.

**544. குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.**

(அறிவையும் அறங்களையும் பாதுகாப்பதோடு அரசன் குடிகளின் அன்பையும் ஆதரவையும் அடைய வேண்டும்.) தன்னுடைய குடிமக்களின் விருப்பத்தை அனுசரித்து அரசாட்சி நடத்தும் பெரிய நாட்டின் மன்னவனுடைய பாதங்களிற் பணிந்து மக்கள் அவனை வணங்கி வாழ்த்துவார்கள்.

**545. இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு.**

(அப்படிப்பட்ட ஆட்சியில் தர்மங்கள் மிகுவதால்,) நீதி நெறிமுறைப்

படி அரசு நடத்துகிற மன்னவனுள்ள நாட்டில் பருவ விளைபொருள்களும் சரியாக இருக்கும்.

**546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின்.**

(அரசனுக்கு) வெற்றி தருவது அவனுடைய ஆயுத பலம் அல்ல. ஆட்சிமுறைதான்; அதுவும், அந்த ஆட்சிமுறை நீதி நெறி தவறாத செங்கோலாக இருந்தால்தான்.

**547. இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.**

(அப்படிப்பட்ட மன்னவனைக் காப்பது அவனுடைய செங்கோல் அறமே.) நாட்டிலுள்ள மக்களையெல்லாம் காப்பவன் மன்னவன். தர்மங்களுக்கு முட்டில்லாமல் அரசாட்சி செய்வதால் அந்த மன்னவனைக் காப்பது அவனுடைய செங்கோல் முறையே.

**548. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்.**

(நீதி செலுத்துவதில் அரசன் தயை தாட்சணியமின்றிக் கண்டிப்பாக இருக்கவேண்டும்.) ஓர் அரசன் தன் பதவிக்கு எண்ணப்பட்ட தன்மையோடு குற்றங்களை விசாரித்துக் கண்டிப்பான நீதி செலுத்தாமல் இரக்கம் காட்டுவ தனாலேயுங்கூடச் செங்கோன்மை கெட்டுப்போகும்.

**549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.**

(ஏனெனில், குற்றம் செய்தவர்களைத் தண்டிக்காமல் விடுவது அரசன் தன் கடமையில் தவறுவதாகும்.) தன் குடிகளுக்குத் துன்பம் வராதபடி தீமைகளைத் தடுத்துப் பாதுகாப்பதற்காகக் குற்றம் செய்கிறவர்களை அரசன் தண்டிப்பது தவறன்று. அதுதான் அரசன் செய்யவேண்டிய வேலை.

**550. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனோடு நேர்.**

கொலை செய்யும் பாதகர்களை அரசன் அப்புறப்படுத்தி விடுவது, பயிர்களைப் பாதுகாக்கக் களையெடுப்பது போலாகும்.

# 56. கொடுங்கோன்மை

**551.** ***கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு***
***அல்லவை செய்தொழுகும் வேந்து.***

(கொடுங்கோன்மையாவது) குடிகளைத் துன்பப்படுத்திக்கொண்டு அரசனுக்குத் தகாத காரியங்களைச் செய்து வாழும் வேந்தன் கொலை பாதகர்களைவிடக் கொடியவன்.

**552.** ***வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்***
***கோலொடு நின்றான் இரவு.***

அதிகார பலத்தோடு கூடிய ஓர் அரசன் குடிகளிடத்தில் திடீரென்று வழக்கமில்லாது பொருள் கேட்பது ஆயுத பலத்தோடு மறைந்துநின்ற வழிப்பறிக்காரன் திடீரென்று தோன்றி, 'உன்னிடம் உள்ளதையெல்லாம் போடு' என்று கொள்ளையடிப்பதற்குச் சமானம்.

**553.** ***நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்***
***நாடொறும் நாடு கெடும்.***

(குடிகளின் நிலைமையை விசாரித்தறியாமல் எதையும் செய்வதும் கொடுங்கோலாகும்.) நாள்தோறும், விசாரிக்க வேண்டியவற்றை விசாரித்து, நியாயம் வழங்காத கொடுங்கோல் மன்னவனுடைய நாடு நாளுக்கு நாள் சீரழியும்.

**554.** ***கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்***
***சூழாது செய்யும் அரசு.***

(மேலும்,) அரசுக்குரிய முறை கெட்டு அமைச்சர்களுடன் ஆலோசிக்காமல் தன் இச்சைப்படி ஆட்சி நடத்துகிற கொடுங்கோல் அரசன் தன் செல்வச் சிறப்பையும் குடிகளுடைய அபிமானத்தையும் ஒருமிக்க இழந்து விடுவான்.

**555.** ***அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே***
***செல்வத்தைத் தேய்க்கும் படை.***

(எப்படியென்றால்,) கொடுங்கோல் ஆட்சியினால் துன்பமடைந்து பொறுக்க முடியாமல் குடிமக்கள் அழுது வடிக்கின்ற கண்ணீரே அந்த ஆட்சியின் செல்வத்தை அழித்து விடக்கூடிய ஆயுதமாகும்.

**556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்**
**மன்னாவாம் மன்னர்க் கொளி.**

(அதனால்,) அரசனுக்கு அமையவேண்டியது நீதி தவறாத செங்கோல் பெருமைதான். அது இல்லையென்றால், புகழ் பிரகாசிக்காது.

**557. துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்**
**அளியின்மை வாழும் உயிர்க்கு.**

(குடிகளைத் துன்புறுத்தாவிட்டாலும் குடிகளுடைய துன்பத்தில் அனுதாபம் காட்டாதிருப்பதும் கொடுங்கோன்மையைச் சார்ந்தது தான்.) உலகத்துக்கு மழையில்லாமை எப்படியோ அப்படிப்பட்டதே அரசனுடைய அன்பில்லாமை குடிமக்களுக்கு.

**558. இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா**
**மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

(குடிகளுடைய உடலுக்கும் உடைமைக்கும் பாதுகாப்பளிக்கத் தவறுவதும் கொடுங்கோன்மை.) காவல் செய்யாத மன்னனுடைய ஆட்சியில் ஏழையாக இருப்பதைவிடச் செல்வமுடையவனாக இருப்பதே அதிக அபாயமுள்ளது.

**559. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்.**

(குடிகளுக்குப் பாதுகாப்பில்லாதது போல், தர்மங்களுக்குப் பாதுகாப்பில்லாதது கொடுங்கோன்மை. தர்மங்கள் இல்லாத கொடுங்கோல் ஆட்சியில்) அரசன் முறை தவறி ஆட்சி நடத்தினால் அந்த நாட்டில் வானமும் தன்னுடைய பெருமை பொருந்திய முறை தவறி மழை பொழிய மறுத்துவிடும்.

**560. ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
**காவலன் காவான் எனின்.**

காக்கவேண்டிய முறையில் அரசன் குடிகளையும் அறங்களையும் காக்கத் தவறினால் அந்த நாட்டில் பசு இனத்தால் அடையக்கூடிய பலன்களும் அறிவினால் நடக்கக்கூடிய கல்வி கற்றல், பொது நலவேள்வி செய்தல், செய்வித்தல், கொடுப்பது, வாங்குவது ஆகிய ஆறு தொழில்களும் அவற்றிற்கான அறிவும் இல்லாது போகும்.

# 57. வெருவந்த செய்யாமை

**561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.**

(குற்றவாளிகளைத் தண்டிக்கும்பொழுது) குற்றத்தைத் தக்கபடி விசாரித்து மறுபடியும் அவர்கள் குற்றம் செய்யாதிருப்பதைக் கருதி அளவுக்கு அதிகப்படாமல் தண்டிப்பதுதான் வேந்தனுடைய தன்மை.

**562. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்.**

(பலமாகக் கண்டித்தாலும் மெதுவாகத் தண்டிக்க வேண்டும்.) தன்னுடைய அரசாட்சி நெடுநாளைக்குத் தன்னை விட்டு நீங்காமல் இருக்க விரும்புகிற மன்னன் வேகமாகக் கையை ஓங்கிப் பயமுறுத்தினாலும் அடிக்கும் போது மெல்ல அடிக்கவேண்டும்.

**563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்**
**ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.**

(அப்படியின்றிக்) குடிகள் நடுங்கும்படியாகத் தண்டித்து ஆட்சிபுரியும் கொடுங்கோல் மன்னவன், நிச்சயமாக வெகு விரைவில் கெட்டுப்போவான்.

**564. இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்**
**உறைகடுகி ஒல்லைக் கெடும்.**

(எப்படியெனில்,) 'அரசன் கொடியவன்' என்று குடிகள் நொந்துபேசும் கெட்ட பெயர் வாங்கும் மன்னனுடைய அரசாட்சிக்காலம் குறுகி விரைவில் கெடும்.

**565. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்**
**பேஎய்கண் டன்னது உடைத்து.**

(மேலும், குடிமக்கள் ஏதேனும் குறை சொல்லிக் கொள்ள) காணக் கிடைப்பதே அரிதாகி, காணக்கிடைத்தாலும் கடுகடுத்த முகம் காட்டுகிற அரசன் எவ்வளவு ஆடையாபரண அலங்காரமுள்ளவனாக இருந்தாலும் அவனைப் பார்ப்பது ஒரு பேயைக் காண்பது போன்றதே.

**566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்**
**நீடின்றி ஆங்கே கெடும்.**

(காணக்கிடைக்காவிட்டாலும் இனிய முகம் காட்டாவிட்டாலும்

பாதகமில்லை. அதற்கு மேலும்) கடூரமான வார்த்தைகளும் இரக்கமில்லாத தன்மையும் உள்ள அரசன் எவ்வளவு பெரிய செல்வச் சிறப்புக்கள் உள்ளவனானாலும் அவனுடைய செல்வாக்கு விரைவில் அழிந்துபோகும்.

**567. கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் அரம்.**

(அதோடு) கடூரமான வார்த்தைகளும் பேசி, இரக்கமும் காட்டாமல், அதற்கு மேலும் அளவுக்கு மீறிய தண்டனையும் அளித்தால் அது அந்த அரசனுடைய வல்லமைகளைத் தேய்த்து ஒடித்துவிடக்கூடிய அரம் போன்றது.

**568. இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்**
**சீறின் சிறுகும் திரு.**

(எந்தக் குற்றத்தைத் தண்டிப்பதானாலும் குற்றத்தின் இனம், குற்றம் செய்தவனுடைய இனம் முதலிய) இனத்தின் அளவாக ஆராயாமல் ஒருவேந்தன் தன்னுடைய கோபத்தின் அளவாக மிதமிஞ்சிய தண்டனை செய்தால் அவனுடைய ஆட்சி அழிந்துவிடும்.

**569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.**

(ஏனெனில், குடிகள் நடுங்கும்படியான செயல்களால்) எச்சரிக்கை யில்லாமல் நடந்து கொள்வதால் குடிகளிடம் மனத்தாபம் வளர்ந்து கொண்டே வந்து திடீரென்று எதிர்ப்பு வந்துவிடுகிற சமயத்தில் குடிகளுடைய ஆதரவில்லாமல் உடனே கெட்டுப்போவான்.

**570. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது**
**இல்லை நிலக்குப் பொறை.**

(கொடுங்கோல் அரசாட்சியைவிட மக்களைத் துன்புறுத்துவது வேறில்லை.) அரசு முறை அறியாத மூடர்கள் நடத்தும் துன்பந்தரும் அரசாட்சியைவிடப் பூமிக்கும் பாரம் வேறில்லை.

# 58. கண்ணோட்டம்

**571. கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை**
**உண்மையான் உண்டிவ் வுலகு.**

தாட்சிண்ணியம் என்ற மிகப் பெரிய நற்குணம் மக்களுக்குள் இருப்பதால்தான் இந்த உலக சமுதாயம் நடந்துவருகிறது.

**572. கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.**

(ஏனெனில்,) உலக வாழ்க்கை நடைபெறுவதே ஒருவருக்கொருவர் தாட்சிண்ணியம் காட்டுவதால்தான். அந்தக் குணம் இல்லாத மனிதர்கள் உண்மையாகவே பூமிக்குப் பாரந்தான்.

**573. பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

(தாட்சிண்ணியம் இல்லாத வாழ்க்கை பயனற்றது.) இராக தாளங்களோடு பொருந்தப் பாடுவதற்கு முடியாத பாட்டினால் என்ன பயன்? அதைப்போல் ஒருவரைப் பார்த்தவுடனே அவருடைய தார தம்மியத்தை அறிய முடியாத கண்களால் பயனென்ன?

**574. உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

(கண்ணின் பயன் என்னவெனில்,) அளந்து அறியக் கூடிய தன்மையோடு, எல்லாப் பக்கங்களிலும் பார்வையைச் செலுத்தி, பார்வை யினாலேயே நிலைமைகளை ஆராய்ந்து கொள்ளச் செய்ய முடியாத கண்கள் முகத்தில் இருந்து என்ன பயன்?

**575. கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்**
**புண்ணென்று உணரப் படும்.**

(கண்ணின் சிறப்பே, கண்டவுடன் தரமறிந்து தாட்சிண் ணியம் காட்டுவதற்குத்தான்.) கண்களுக்குச் சிறப்பு, கண்ணோட்டமென்னும் தாட்சிண்ணியம். அது இல்லாத கண்கள் வெறும் புண்களே.

**576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ**
**டியைந்துகண் ணோடா தவர்.**

(மேலும்,) கண்ணிருந்தும் கண்ணை ஒட்டி ஆராய்ந்தறிய

முடியாதவர்கள், கால்களிருந்தும் ஓடித்திரிந்து ஆராய்ந்து அறிந்துகொள்ள இடம்விட்டுப் பெயர முடியாமல் நின்ற நிலத்தோடு நிற்கிற மரத்துக்கே ஒப்பானவர்கள்.

**577. கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்**
**கண்ணோட்டம் இன்மையும் இல்.**

ஆகையினால் தாட்சிண்ணிய குணம் இல்லாதவர்கள் பிறருடைய தராதரத்தைக் கண்டறிய முடியாத குருடர்கள். ஆராய்ந்தறியக்கூடிய கண்களை உடையவர்கள் தாட்சிண்ணியம் இல்லாமல் நடந்துகொள்ள மாட்டார்கள்.

**578. கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு**
**உரிமை உடைத்திவ் வுலகு.**

(ஆனால் கண்டவர்களுக்கெல்லாம் தாட்சிண்ணியம் காட்டினால் நியாயம் தவறிக் காரியமும் கெட்டுப்போகாதா என்றால் உண்மைதான். காரியம் கெடாமல் கண்ணோட்டமும் செய்வது மிகவும் கடினமே. ஆனாலும், அப்படிச் செய்கிறவர்களும் உண்டு.) காரியமும் கெடாமல் தாட்சிண்ணியமும் காட்டி உபகாரம் செய்யக் கூடிய மகான்கள் உண்டு. அவர்களுக்கு இவ்வுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

**579. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்தாற்றும் பண்பே தலை.**

(தாட்சிண்ணியம் காட்டுவதென்பது தனக்கு வேண்டியவர்களுக்குச் சலுகை காட்டுவது. ஆனால்,) தாம் தண்டிக்க வேண்டியவர்களிடத்திலும் தாட்சிண்ணியம் காட்டிப் பொறுத்துக்கொள்ளும் குணமே மிகவும் சிறந்தது.

**580. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.**

(அதைவிடச் சிறந்த தாட்சிண்ணிய குணமுள்ள தியாகிகள் அதனால் தமக்கு அபாயம் வருமென்றாலும் பொருட்படுத்த மாட்டார்கள்.) பல பேருக்கான நன்மை வரும் என்றால் தாட்சிண்ணியத்தை விரும்பு கின்றவர்கள், விஷத்தை ஊற்றிக் கொடுத்தாலும் அதை உண்டுவிடச் சம்மதிப்பார்கள்.

# 59. ஒற்றாடல்

**581. ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்**
**தெற்றென்க மன்னவன் கண்.**

வேவுகாரர்கள் மூலமாக அப்போதைக்கப்போதுள்ள நிலைமைகளை அறிந்துகொள்வதும் சிறந்த அரசியல் நூல்களை ஆராய்ந்து கொள்வதும் ஆகிய இவை அரசனுக்கு இரண்டு கண்கள் என்பதைத் தெளிவாக அரசன் அறியவேண்டும்.

**582. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்**
**வல்லறிதல் வேந்தன் தொழில்.**

எல்லாரிடத்திலும் நடக்கிற எல்லா நிகழ்ச்சிகளையும் உடனுக்குடன் அறியவேண்டியது அரசனுடைய கடமை.

**583. ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்**
**கொற்றங் கொளக்கிடந்தது இல்.**

(அப்படி அறிந்துகொள்ளத்தான் ஒற்றர்கள்.) ஆகையால் ஒற்றர்கள் மூலமாக அறியவேண்டிய சேதிகளை அவ்வப்போது இரகசியமாக அறிந்துகொள்ளாத அரசன் எந்தக் காரியத்திலும் வெற்றிபெற முடியாது.

**584. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதா் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று.**

(முக்கியமாக ஓர் அரசன்) தன்னுடைய நாட்டில் அங்கங்கே தன்னுடைய பிரதிநிதிகளாக அரச காரியங்களைச் செய்கிற உத்தியோகஸ்தர்கள் சரியாக நடந்து கொள்கிறார்களா என்பதையும், தனக்கு நட்பாக உள்ளவர்கள் நட்புக் கெடாமல் இருக்கிறார்களா என்பதையும், தன்னை விரும்பாதவர்களாகப் பகைமை கொண்டு தீங்கு செய்ய முயல்கின்றவர்கள் எவரேனும் உண்டா என்பதையும், அறிய வேண்டிய முறையில் எல்லாரைப் பற்றியும் தெரிந்துகொள்வதே ஒற்றறிதல்.

**585. கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்**
**உகாஅமை வல்லதே ஒற்று.**

தன்னை யாரும் சந்தேதிக்க முடியாதபடி மாறு வேடத்துடன் அச்சமில்லாமல் எங்கும் சென்று தான் இன்னான் என்பதையும், தான் வந்த காரியம் இன்னது என்பதையும் வெளிப்படுத்தி விடாதபடி உளவுகளை அறிந்து வரக்கூடியவனே ஒற்றன்.

**586. துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து**
**என்செயினும் சோர்விலது ஒற்று.**

பற்றற்றவராக நடந்துகொண்டு தீரவிசாரித்து அறிந்து யாராவது சந்தேகித்து என்ன செய்தாலும், ஏமாந்து இரகசியத்தை வெளியிட்டு விடாமல் இருக்கக்கூடியவர்களே ஒற்றர்கள்.

**587. மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை**
**ஐயப்பாடு இல்லதே ஒற்று.**

(மேலும்,) தனக்கு விளங்காதவற்றைக் கேள்விகள் போட்டுத் தெரிந்துகொள்ளக்கூடிய வல்லமை உள்ளவனாகி, தெரிந்தவற்றைச் சந்தேகத்துக்கு இடமில்லாதபடி தெரிந்து வரக்கூடியவனே சரியான ஒற்றனாவான்.

**588. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல்.**

(அரசனானவன்) ஓர் ஒற்றன் உளவறிந்துவந்து சொன்ன சேதி களையும் வேறோர் ஒற்றனைக் கொண்டு அதே சேதிகளை விசாரித்து வரச்செய்து அதன் பிறகே ஏற்றுக்கொள்ளவேண்டும்.

**589. ஒற்றெற் றுணராமை ஆள்க உடன்மூவர்**
**சொல்தொக்க தேறப் படும்.**

(அதற்கு மேலுங்கூட) ஒரே காரியத்தைப் பற்றி விசாரிக்கத் தனித்தனியே மூன்று ஒற்றர்களை ஏவி, அந்த மூவரும் அதே காரியத்துக்கு அனுப்பப்பட்டதை அவர்கள் அறியாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். அந்த மூவரும் தனித்தனியே அறிந்துவருகிற சேதிகளையெல்லாம் சேர்த்துப் பார்த்து அரசன் உண்மையை அறியவேண்டும்.

**590. சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்**
**புறப்படுத்தா னாகும் மறை.**

(அரசன் தன்னுடைய) ஒற்றர்களைப் பாராட்டி வெகுமதியளித்துச் சிறப்புச் செய்வதானாலும் அதைப் பிறர் அறியும்படி செய்யக்கூடாது. அப்படிச் செய்வது இரகசியங்களைப் பகிரங்கப்படுத்துவதாகும்.

# 60. ஊக்கம் உடைமை

**591. உடைய ரெனப்படுவது ஊக்கம் அஃதில்லார்**
**உடையது உடையரோ மற்று.**

ஊக்கம் உடையவர்கள்தாம், ஒன்று உடையவர்கள் என்று சொல்லத் தகுந்தவர்கள். ஊக்கம் இல்லாதவர்கள் மற்ற எதை உடையவர்களாக இருந்தாலும் உடையவர்கள் ஆவார்களா? மாட்டார்கள்.

**592. உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை**
**நில்லாது நீங்கி விடும்.**

(ஏன் என்றால்,) ஊக்கம் என்ற உள்ளத்திலிருக்கிற உடைமைதான் எப்போதும் நீங்காமல் தன்னிடமே இருக்கக்கூடிய உடைமை. வெறும் பொருள் உடைமை. நிலையற்றது; ஒருவனை விட்டு வேறொருவனிடம் போய் விடக்கூடியது.

**593. ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்**
**ஒருவந்தம் கைத்துடை யார்.**

உண்மையாக ஊக்கமுடையவர்கள் தமக்குள்ள பொருட் செல்வத்தை யெல்லாம் இழந்துவிட்டாலும், அதற்காக வருத்தப்படமாட்டார்கள்.

**594. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
**ஊக்க முடையா னுழை.**

உறுதியான ஊக்கமுடையவன் இருக்கிற இடத்தை நாடி, வழி விசாரித்துக்கொண்டு செல்வம் தானாகவே அவனிடம் போய்ச்சேரும்.

**595. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனையது உயர்வு.**

தண்ணீர் மட்டத்தின் அளவுக்குத்தான் தாமரை மலரின் தண்டு நீளும். அதைப்போல் மக்களுடைய ஊக்கத்தின் அளவுக்குத் தான் அவர்களுடைய வாழ்க்கைச் சிறப்புக்கள் உயரும்.

**596 உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது**
**தள்ளினும் தள்ளாமை நீர்த்து.**

ஊக்கம் கொள்ள வேண்டுமென்பதெல்லாம் உயர்ந்த நல்ல காரியங் களுக்குத்தான். மற்றக் கீழான ஆசைகளுக்கு ஊக்கம் வேண்டியதில்லை.

ஏனெனில், கீழான எண்ணங்கள் விலக்கினாலும் விலக்க முடியாதபடி இயல்பாகவே மனிதப் பிறவியில் இருக்கின்றன.

597. சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றும் களிறு.

(ஊக்கமுடையவர்கள் உயர்ந்த காரியங்களை முயலும் போது இடையூறுகளுக்கு அஞ்சிவிடமாட்டார்கள்.) யானையானது தன்னுடைய உடலில் அம்பு புதைந்து புண்படப்பட முன்னிலும் அதிக உறுதியோடு எதிர்க்கும். அதைப்போல ஊக்கமுடையவர்கள் தம்முடைய முயற்சி களுக்கு இடையூறு வந்தாலும் பின்வாங்காமல் முன்னிலும் ஊக்கத்தோடு முயல்வார்கள்.

598. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.

(அப்படிப்பட்ட ஊக்கமில்லாதவர்கள் சிறப்புக்களை உடையவர்கள் என்ற பெருமை அடைய முடியாது.) ஊக்கம் இல்லாதவர்கள் நல்லவர்கள் என்ற புகழையும் அதனால் வரும் இன்பங்களையும் அடைய முடியாது.

599. பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(ஊக்கமுடைமை என்பது மன வலிமையேயன்றி உடல் வலிமை யல்ல.) மிகப் பெரிய உடலும் கூர்மையான தந்தங்களும் உள்ளதானாலும் ஒரு யானை (ஊக்கக் குறைவால்) ஊக்கம்மிகுந்த புலியின் தாக்குதலுக்கு அஞ்சும்.

600. உரமொருவற்கு உள்ள வெறுக்கை அஃதில்லார்
மரம்மக்க ளாதலே வேறு.

(ஆகையினால்,) ஒருவனுக்கு வலிமை என்பது மன வலிமையான ஊக்கமுடைமைதான். அது இல்லாதவர்கள் மனமில்லாத மரத்துக்கு ஒப்பானவர்களே. மனிதர்கள் என்ற பெயர்தான் அவர்களுக்கும் மரத்துக்கும் உள்ள வித்தியாசம்.

# 61. மடியின்மை

**601. குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும்**
**மாசூர மாய்ந்து கெடும்.**

குறைவற்ற புகழ்உள்ள குடித்தனமும், சோம்பல் என்ற குற்றம் அதனுள் புகுந்துவிட்டால் அதன் புகழ் ஒளி இழந்து மங்கி மறைந்துவிடும்.

**602. மடியை மடியா ஒழுகல் குடியைக்**
**குடியாக வேண்டு பவர்.**

(அதனால்,) தாம் பிறந்த குடித்தனம் ஒளியிழந்து மறைந்து கெட்டுப் போகாமலிருக்க விரும்புகிறவர்கள் சோம்பலை ஒழித்துக் கடமைகளைச் செய்தொழுக வேண்டும்.

**603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த**
**குடிமடியும் தன்னினும் முந்து.**

(ஏனெனில்,) சோம்பேறித்தனம் மிகுந்துள்ள மூடன் பிறந்த குடித் தனம், அவனால் அவன் மடிவதற்கு முன்னால் குடிமுழுகிப் போய்விடும்.

**604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து**
**மாண்ட உஞற்றி லவர்க்கு.**

(எப்படியென்றால்,) சோம்பலில் ஒடுங்கிக் குடும்பத்துக்குப் பெருமை யுண்டாக்கும் காரியங்களைச் செய்யாமலிருப்பவர்களுடைய குடும்பத்தின் பெருமை கெட்டுப் போவது மட்டுமல்ல; அவர்கள் குற்றமான பல காரியங்களையும் செய்யத் தலைப்படுவார்கள்.

**605 நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்.**

(நல்ல வாழ்க்கை நடத்த விரும்புகிறவர்கள் விலக்க வேண்டிய குற்றங்களில் சோம்பலும் ஒன்று. அக்குற்றங்களாவன:) காரியம் செய்வதில் தாமதம், கடமைகளை மறந்திருத்தல், சோம்பல், மிகுந்த தூக்கம் ஆகிய நான்கும் கெட்டுப்போகிறவர்கள் ஆவலோடு அணிந்து கொள்ளும் ஆபரணங்கள்.

**606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்**
**மாண்பயன் எய்தல் அரிது.**

(ஏற்கெனவே சிறப்புக்கள் உள்ளவரானாலும் சோம்பேறிகள் அந்தச்

சிறப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ள முடியாது.) உலக மக்களின் நன்மதிப்பை அடைந்தவர்களானாலும் சோம்பலுள்ளவர்கள் அந்த நன்மதிப்பினால் அடையக்கூடிய பெரும் பயன்களை அடைய மாட்டார்கள்.

**607. இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து**
**மாண்ட உஞற்றி லவர்.**

(சோம்பலை மேற்கொண்டால் அந்த நன்மதிப்புக் கெட்டுப்போகிறது.) சோம்பிவிடுவதனால் முன் நன்கு மதித்த உலக மக்கள் இவர்களிடம் எதிர்பார்த்த நல்ல காரியங்களை இவர்கள் செய்ய முடியாதவர்களாகி அந்த நன்மதிப்பை இழந்து இழித்துப்பேசும் வசைமொழிகளைக் கேட்க வேண்டிய அவமதிப்புக்கு ஆளாவார்கள்.

**608. மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு**
**அடிமை புகுத்தி விடும்.**

(பொதுக் காரியங்களைச் செய்யச் சோம்பினால் ஊரார் அவமதிப்போடு முடியும். ஆனால் குடும்பக் காரியங்களில் சோம்பினால்,) ஒருவன் தன் குடும்பக் காரியங்களில் சோம்பலுள்ளவனாக இருப்பானாகில் அக்குற்றம் அவனுடைய பகைவர்களுக்கும் ஏவல் செய்து பிழைக்க வேண்டிய அடிமையாக்கிவிடும்.

**609. குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்**
**மடியாண்மை மாற்றக் கெடும்.**

(சோம்பலில்லாமல் உழைக்கிற ஒருவன் கெட்டுப் போன குடித்தனத்தையும் ஈடேற்ற முடியும்.) ஒரு குடும்பத்துக்கு வந்துவிட்ட பல துன்பங்களும், அந்தக் குடும்பத்திலுள்ள ஒருவன் சோம்பலுக்கு இடம் கொடுக்காமல் உழைத்து மாற்றினால் நீங்கிவிடும்.

**610. மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
**தாஅய தெல்லாம் ஒருங்கு.**

(சோம்பலில்லாத ஓர் அரசன் முடியாத காரியத்தையும் முடிக்கலாம்.) சோம்பல் இல்லாத அரசன் திருமால் தாவி அளந்த பூலோகம் தேவலோகம் ஆகிய இரண்டையும் சேர்ந்து அரசாளலாம்.

## 62. ஆள்வினை உடைமை

611. அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(ஒரு காரியம் செய்து அது கைகூடாவிட்டால்,) அது செய்வதற்கு முடியாத காரியம் என்று தளர்ந்துவிடாமல் இருக்க வேண்டும். மீண்டும் மீண்டும் முயற்சி செய்தால் வெற்றி கிடைக்கும்.

612. வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

(எந்தக் காரியத்தையும் குறை வேலையாக விடக் கூடாது.) ஒரு காரியத்தைச் செய்துகொண்டிருக்கும்போது இடையில் விட்டு விடுகிறவனை உலகத்தாரும் விட்டு விடுவார்கள்; ஆதலால், காரியத்தைத் தொடங்கியபின் இடையில் அதை விட்டுவைக்கக் கூடாது.

613. தாளாண்மை என்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னுஞ் செருக்கு.

(உலகத்தில் சிறந்த காரியங்கள் நடந்தேறுவதெல்லாம் விடாமுயற்சியால்தான்.) உலகத்துக்கு உபகாரமான காரியங்களைச் செய்தவர்களுடைய புகழெல்லாம் விடாமுயற்சி என்ற பெருங்குணத்தில் அடங்கியதே.

614. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(விடாமுயற்சி இல்லாதவர்கள் உபகாரிகளாயிருக்க முடியாது.) விடாமுயற்சி இல்லாதவன் உபகாரியாக முடியும் என்பது, பயங்கொள்ளியான பேடி ஒருவன் வாளேந்திப் பகைவரை வெல்ல முயல்வதைப்போல் பயனற்றதாகும்.

615. இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.

(பரோபகாரியின் அடையாளம் விடாமுயற்சிதான்.) தனக்குச் சுகபோகங்கள் வேண்டுமென்று ஆசைப்பட மாட்டான். எந்நேரமும் காரியம் செய்வதிலேயே ஆசை உள்ளவனாக இருப்பான். அப்படிப் பட்டவன் தன்னுடைய உற்றார் உறவினருடைய துன்பங்களைப் போக்கி அவர்களைத் தாங்கி நிற்கும் தூண் போன்றவன்.

**616. முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.**

(ஆதலால், விடாமுயற்சியுடன் காரியம் செய்ய வேண்டும். இல்லாவிடில்,) அடுத்தடுத்து முயற்சி செய்கிறவர்களுக்குச் செல்வம் அதிகப்படும். முயற்சியில்லாதவர்களுக்கு உள்ள செல்வம் குறைந்து வறுமையும் வந்துவிடும்.

**617. மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்.**

(ஏன் என்றால்,) முயற்சியில்லாத சோம்பேறியிடத்தில் மூத்தவளாகிய மூதேவி தங்கியிருப்பாள்; சோம்பல் இல்லாதவனுடைய விடாமுயற்சியில் தாமரையாளாகிய செல்வமகள் வீற்றிருப்பாள் என்று அறிவறிந்த மேலோர்கள் சொல்லுவார்கள்.

**618 பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி.**

(அறிவுடையவன் முயற்சியற்றவனாக இருப்பது பெருங் குற்றமாகும்.) புத்திகூர்மை இல்லாதிருப்பது யார்க்கும் குற்றமன்று. ஆனால் புத்திக்கூர்மை இருந்தும், அறிய வேண்டியதை அறிந்தும் முயற்சி இல்லாதிருப்பது குற்றம்.

**619. தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.**

தெய்வ சகாயம் இல்லாததால் ஒரு காரியம் முயற்சி செய்தும் முடியாமற் போகலாம். ஆனாலும், எவ்வளவுக்கெவ்வளவு முயற்சி செய்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு உடலுழைத்த பலனாவது இல்லாமற் போகாது.

**620. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்.**

மனந்தளராமல் இடைவிடாது முயற்சி செய்கிறவர்கள் ஊழ் வினைகளையும் வென்றுவிட முடியும்.

# 63. இடுக்கண் அழியாமை

**621. இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல்.**

இடையூறு வரும்போது சிரித்துவிடுக; இடையூறுகளை வென்று அடக்கக்கூடியது சிரிப்பதைப் போன்று வேறில்லை.

**622. வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்.**

கடலைப் போன்ற பெரிய துன்பமும் அறிவுடையவர்களுடைய மனவலிமையினால் நினைத்தவுடன் மறைந்துவிடும்.

**623. இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு**
**இடும்பை படாஅ தவர்.**

(அறிவுடையவர்கள் இடையூறுகளால் துன்பப்படாமல் இருப்பார்கள். அதோடு,) இடையூறுகளைக் கண்டு துன்பப்படாத மன உறுதியுடைய அந்த அறிவாளிகள் தங்களிடம் வந்த இடையூறுகளே துன்பப்படும்படி செய்துவிடுவார்கள்.

**624. மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற**
**இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.**

(எப்படியென்றால்,) இடையூறுகள் அதிகமாகும் போதெல்லாம் ஓர் ஏற்றத்தில் பெரும்பாரத்தை உதைத்து இழுக்கும் பொதிமாட்டைப்போல் ஊன்றி நிற்கக்கூடிய உறுதியுடையவனிடம் வந்த துன்பங்களே துன்பமடையும்.

**625. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற**
**இடுக்கண் இடுக்கட் படும்.**

(அதற்கென்று தனி முயற்சி செய்யாமலும்) மனங்கலங்காத இயல்புடையவனுக்கு அடுக்கடுக்காகப் பல துன்பங்கள் வந்தாலும், அத்துன்பங்கள் ஒன்றையொன்று துன்பப்படுத்திக் கொள்ளுமேயல்லாமல் அவனை ஒன்றும் செய்யமாட்டா.

**626. அற்றேமென்று அல்லற் படுபவோ பெற்றேமென்று**
**ஓம்புதல் தேற்றா தவர்.**

(அதுதான் இடுக்கணழியாமை என்பது. அப்படிப்பட்டவர்கள்)

வெற்றி அடைந்துவிட்டோம் என்று அகந்தை கொள்ள மாட்டார்கள்; தோல்வி வந்துவிட்டாலும் துன்பப்பட மாட்டார்கள்.

**627. இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்**
**கையாறாக் கொள்ளாதாம் மேல்.**

(துன்பம் வந்துவிட்டால் மனம் அழியாமல் இருக்கச் செய்கிற அறிவு எப்படிப்பட்டதென்றால்,) மனிதனுடைய உடம்பு துன்பங்களுக்கு இலக்காவது இயற்கை என்பதை உணர்ந்து துன்பம் வந்தால் தளர்ந்து விடாமல் இருக்கிற அந்த அறிவுதான் மேலான அறிவு.

**628. இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்**
**துன்பம் உறுதல் இலன்.**

(அப்படி) இன்பங்களில் ஆசை கொள்ளாமல் துன்பம் வருவது இயற்கைதான் என்று எண்ணுகிறவன் துன்பத்தால் பாதிக்கப்பட மாட்டான்.

**629. இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்.**

(துன்பம் வந்தால் நோகாமல் இருப்பது எப்படி யென்றால்,) இன்பம் வருகிறபோது மகிழ்ச்சியில் மயங்கி விடாமல் இருந்தால் இடையூறு வருகிறபோதும் துன்பத்தால் நொந்து போகாமல் இருக்க முடியும்.

**630. இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்**
**ஒன்னார் விழையுஞ் சிறப்பு.**

(இன்பத்தில் மயங்காமலிருந்தால் துன்பம் பாதிக்காது. அப்படி யிருப்பது சிறந்த குணம். அதைவிடச் சிறந்த குணம் உண்டு. அது என்னவெனில்,) துன்பத்தையே இன்பமாக அனுபவிப்பது. அந்தக் குணம் பகைவர்களாலும் பாராட்டத் தக்க பெருமை உடையது. (அதுதான் 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று முதலில் சொல்லப்பட்டது.)

# 64. அமைச்சு

**631. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்**
**அருவினையும் மாண்டது அமைச்சு.**

(ஒருகாரியத்தை முடிப்பதற்கு வேண்டிய) சாதனங்களையும் பருவக்காலத்தையும், செயல் நுணுக்கங்களையும், செயல்முறைகளையும் நன்றாக ஆராய்ந்தறிந்து சொல்லக் கூடியவர்களே மந்திரிகள்.

**632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு**
**ஐந்துடன் மாண்டது அமைச்சு.**

தைரியம், குடிப்பிறப்பின் மானம், அரசியல் கல்வியறிவு, விடாமுயற்சி ஆகிய இவற்றோடு பஞ்சதந்திரங்களின் அறிவும் சேர்ந்த பெருமைகளே சிறந்த மந்திரிகளின் தகுதிகள்.

**633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்**
**பொருத்தலும் வல்லது அமைச்சு.**

(அரசனுக்கும் அரசாட்சிக்கும் தீங்கு தரக்கூடிய சகவாசங்களை) நீக்குவதும், (நல்ல சகவாசங்கள் விட்டுப் போகாமல்) பாதுகாப்பதும், நல்ல புது உறவுகளைச் சேர்த்து வைப்பதும் செய்யத் திறமையுள்ளவர்களே மந்திரிகள்.

**634. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்**
**சொல்லலும் வல்லது அமைச்சு.**

(மேலும்,) செய்ய வேண்டிய காரியத்தை அறிந்தவர்களாகவும், தெரியாதவற்றை ஆராய்ந்து தெரிந்துகொண்டு செய்கிறவர்களாகவும், நிச்சயமான ஒரே யோசனையைச் சொல்லும் திறமையுடையவர்களாகவும் அமைந்தவர்களே மந்திரிகளாக இருக்கத் தகுந்தவர்கள்.

**635. அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்**
**திறனறிந்தான் தேர்ச்சித் துணை.**

(அதனுடன்) தர்மாதர்மங்களைச் சீர்தூக்கி, நிறைந்த அறிவுடன் பொருத்தமான யோசனை சொல்லுகிறவனாகவும் எந்த நேரத்திலும் தன்னுடைய அரசனுடைய வலிமைகளின் கணக்கறிந்தவனாகவும் உள்ளவனே சரியான மந்திரி.

**636. மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்**
**யாஉள முன்னிற் பவை.**

(சுருதியறிவும் யுக்தி அறிவும் உள்ளவருக்கு அனுபவ வெற்றியும் எளிதாகும்.) நூல்களின் ஆராய்ச்சியோடு சொந்த புத்திக்கூர்மையும் சேர்ந்துள்ளவர்களை எதிர்த்து வெல்லக் கூடிய சூழ்ச்சிகள் என்ன இருக்கின்றன?

**637. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து**
**இயற்கை அறிந்து செயல்.**

(அப்படி நூல் அறிவோடு மதிநுட்பம் என்கிற சுருதியும் யுக்தியும் ஒத்த பின்பும் அவை அனுபவத்துக்குப் பொருந்துமா என்பதையும் அறிய வேண்டும்.) ஆராய்ந்து செய்ய வேண்டியதை அறிந்துகொண்ட பின்னும் அப்போதுள்ள உலக நடைக்கு அக்காரியம் ஒத்துக்கொள்ளுமா என்பதையும் அறிந்து செய்யவேண்டும் (என்ற யோசனையுள்ளவனே மந்திரி).

**638. அறிகொன்று அறியான் எனினும் உறுதி**
**உழையிருந்தான் கூறல் கடன்.**

(அரசாட்சிக்குப் பொறுப்பாளி மந்திரியே. ஆனதால்,) அறிய வேண்டிய எதையும் அறியாதவனாக அரசன் இருந்தாலும் உறுதியான நல்ல ஆலோசனைகளைச் சொல்ல வேண்டியது பக்கத்தில் இருந்து கொண்டிருக்கும் மந்திரியின் கடமை.

**639. பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்**
**எழுபது கோடி உறும்.**

(தவறான ஆலோசனை சொல்லிவிடக்கூடிய மந்திரி இருக்கக்கூடாது.) தப்பான ஆலோசனை சொல்லி விடக் கூடிய மந்திரி அரசனுக்குப் பக்கத்தில் இருப்பது எழுபதுகோடி பகைவர்கள் சூழ்ந்து கொண்டதற்குச் சமானம்.

**640. முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்**
**திறப்பாடு இலாஅ தவர்.**

(தப்பான யோசனை சொல்லுகிற மந்திரியால் அபாயம் வந்துவிடும். திறமையில்லாத மந்திரியால் நல்ல காரியமும் கெட்டுப்போகும்.) சரியானபடி ஆராய்ந்து ஆலோசித்திருந்த காரியத்தையும், காரியத் திறமையில்லாத மந்திரிகள் அது முடியாதபடி கெடுத்து விடுவார்கள்.

# 65. சொல்வன்மை

**641. நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்**
**யாநலத்து உள்ளதூஉம் அன்று.**

நாக்கு நல்லதாக உள்ளவன் எனப்படும் குணம் ஒரு செல்வம். அதிலுள்ள நன்மை வேறு எந்தச் செல்வத்திலும் இல்லை.

**642. ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்**
**காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.**

நன்மையும் தீமையும் பேசுகின்ற சொல்லைப் பொறுத்துவரும்; ஆகவே, குற்றமான சொற்களைப் பேசிவிடாதபடி நாக்கை அடக்கிக் கவனத்தோடு காத்துக் கொள்ளவேண்டும்.

**643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாஞ் சொல்.**

(நல்ல சொற்களையும் நல்ல முறையில் பேச வேண்டும்.) கேட்பவர்களை வசீகரிக்கக்கூடியதாகவும் பகைவர்களும் கேட்டு மகிழ்ச்சி கொள்ளக்கூடியதாகவும் பேசுவதுதான் சொல்வன்மை என்பது.

**644. திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்**
**பொருளும் அதனினூஉங்கு இல்.**

(அப்படிப்பேசுவதற்கு அறிந்துகொள்ள வேண்டியது என்னவெனில்,) சொல்லுகிற சொல்லின் அர்த்தத்தையும், சொல்லுகிற சமய சந்தர்ப்பத்தையும், அது உண்டாக்கக்கூடிய பயனையும் அறிந்து சொல்ல வேண்டும். அப்படிப் பேசுவதைவிடத் தர்மமும் இலாபமும் உள்ளது வேறில்லை.

**645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை**
**வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.**

(அதனால் பேசுவதற்குமுன்,) சொல்லப்போகிற சொல்லைவிட இன்னொரு சொல் சிறந்ததாக இல்லாதபடி சொல்லைப் பொறுக்கிப் பேசவேண்டும்.

**646. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்**
**மாட்சியின் மாசற்றார் கோள்.**

(வழக்காடப் பேசினாலும் இனிமையாகப் பேச வேண்டும்.) தாம்

சொல்ல வேண்டியதைப் பிறர்விரும்பும்படி இனிமையாகச் சொல்லுவதும், பிறர் சொல்லுவதில் பயனுள்ளவற்றை ஏற்றுக் கொள்வதும் தர்க்கம் பேசுவதன் திறமையில் குற்றமற்ற பேச்சாளரின் கொள்கை.

**647. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை**
**இகல்வெல்லல் யார்க்கும் அரிது.**

(அந்த முறையில்) பேச வல்லவனாகவும் சொல்ல வேண்டியதை இடையே மறந்து தடுமாறாதவனாகவும் எதிர்வாதத்திற்கு அஞ்சாதவனாகவும் இருக்கிற ஒருவனை வாதத்தில் வெல்லுவது யார்க்கும் முடியாது.

**648. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்.**

(யாரோடு எதற்காகப் பேசினாலும் மேற்சொன்ன முறையில்) எப்போதும் இனிமையாகவே பேசக் கூடியவர்கள் இருந்தால் அவர்கள் சொன்ன வேலையை உலகத்தார் உடனே செய்வார்கள்.

**649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற**
**சிலசொல்லல் தேற்றா தவர்.**

(இனிமையாகப் பேசுவதோடு ஒரு சபையில் பேசுகிறவன் சுருங்கச் சொல்லவேண்டும்.) சபையில் குற்றமற்ற சில வார்த்தைகளில் பேசத் தெரியாதவர்கள்தாம் நெடுநேரம் நீட்டிப் பலப்பல சொல்ல ஆசைப்படுவார்கள்.

**650. இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது**
**உணர விரித்துரையா தார்.**

நன்றாக அறிந்தவைகளையும் பிறருக்குப் புரியும்படி சொல்லத் தெரியாவதர்கள் உண்டு. கற்றறிந்ததை மற்றவர்கள் புரிந்துகொள்ளும்படி விளங்கச் சொல்லத் தெரியாதவர்கள் கொத்துக் கொத்தாகப் பூத்தும் வாசனையில்லாத மலர்களுக்கே சமானம்.

# 66. வினைத்தூய்மை

**651. துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்.**

(ஒருவனுடைய) துணைவர்கள் நல்லவர்களாக இருந்தால் காரியத்தில் வெற்றியும் செல்வ பலமும் உண்டாகும். ஆனால் செய்யப்புகும் காரியம் குற்றமற்ற நல்ல காரியமாக இருந்தால் விரும்பத் தகுந்த எல்லா நன்மைகளும் உண்டு.

**652. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.**

(ஆகையினால்,) செய்கிறவனுக்குப் புகழும் எல்லாருக்கும் நன்மையும் உண்டாகாத காரியங்களை எப்போதும் விலக்க வேண்டும்.

**653. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்.**

மேலும் மேலும் சிறப்படைய விரும்புகின்றவர்கள், உள்ள சிறப்பையும் அழித்துவிடக் கூடிய காரியங்களை விலக்க வேண்டும்.

**654. இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.**

தடுமாற்றமில்லாத அறிவுடையவர்கள் வறுமையுற்றுத் துன்பம் அடைந்துவிட்டாலும் இகழத்தக்க காரியங்களைச் செய்ய மாட்டார்கள்.

**655. எற்றென்று இறங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.**

(இகழத்தக்க காரியம் எதுவென்றால்,) ('ஐயோ!' என்று யாரும் துன்பப்படுகிற எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது. தவறிச் செய்து விட்டாலும் மறுபடியும் அப்படிச் செய்யாதிருப்பது நல்லது.

**656. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.**

பெற்று வளர்த்த தாய் உணவின்றிப் பசியால் வாடினாலும் அவள் பசியை ஆற்றுவதற்காகவுங்கூடப் பெரியோர்கள் பழியான காரியம் என்று சொல்லியுள்ள துன்பச் செயல்களைச் செய்யக்கூடாது.

**657. பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்**
**கழிநல் குரவே தலை.**

(ஏனெனில்,) பழி மிகுந்த தீய காரியங்களைச் செய்து அதனால் அடைகிற மிகுந்த செல்வத்தைவிடப் பழியில்லாமல் மிகுந்த ஏழையாக இருப்பதே மேல்.

**658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்**
**முடியந்தாலும் பீழை தரும்.**

(பெரியோர்களாலும் நீதி நூல்களாலும் பழியென்று) வெறுத்து விலக்கப்பட்ட காரியங்களை நாமும் வெறுத்து விலக்க வேண்டும். அப்படி விலக்காமல் அவற்றைச் செய்தால் அப்போதைக்கு அவை வெற்றிகரமாக முடிந்தாலும் பின்னால் நிச்சயமாகத் துன்பம் வரும்.

**659 அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்**
**பிற்பயக்கும் நற்பா லவை.**

(எப்படியெனில்,) பிறரைத் துன்பப்படுத்தி அழஅழ அவர்களிடமிருந்து பறித்த செல்வமெல்லாம் அதைப் போலவே தம்மைப் பிறர் துன்பப் படுத்தித் தாம் அழ அழத் தம்மைவிட்டுப் போய்விடும். ஆனால் பிறரைத் துன்புறுத்தாமல் நல்ல வழியில் சம்பாதித்த செல்வத்தை இழந்து விட்டாலும் மீண்டும் தம்மிடம் வந்து சேர்ந்துவிடும்.

**660. சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்**
**கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.**

(பாவச் செயல்களால் சம்பாதிக்கிற செல்வம்) துன்பப்படுத்திப் பறித்துப் பணம் சேர்த்துப் பூட்டிவைப்பது, வேக வைக்காத பச்சை மண்பாண்டத்தில் தண்ணீரை ஊற்றி மூடிவைப்பதைப் போன்றது.

## 67. வினைத்திட்பம்

**661.** ***வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்***
***மற்றைய எல்லாம் பிற.***

காரிய உறுதி என்பது காரியத்தைச் செய்கிறவனுடைய மன உறுதிதான். மற்ற உறுதிகள் எல்லாம் அந்த உறுதிக்கு ஈடாகமாட்டா.

**662.** ***ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்***
***ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.***

(ஆராய்ச்சியுள்ள அறிவுடையவர்கள் வினைத்திட்பம் என்று கொள்ளுவது எதுவென்றால்,) பிறருக்குத் துன்பம் உண்டாக்கும் காரியங்களைச் செய்யாதிருப்பதும், தமக்குத் துன்பம் வந்தால் தளர்ந்து விடாமல் காரியம் செய்வதும் ஆகிய இரண்டும் சேர்ந்த மனவலிமைதான் வினைத்திடடம்.

**663.** ***கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்***
***எற்றா விழுமந் தரும்.***

(செய்யப்புகுந்துவிட்ட ஒரு காரியத்தின்) முடிவு காண அதைப் பூர்த்தி செய்வதுதான் ஆண்மை. இடையில் காரியத்தை நிறுத்திவிடுவது அக்காரியம் முடியாமல் போகக்கூடியபடி தீராத துன்பங்களை உண்டாக்கிவிடும்.

**664.** ***சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்***
***சொல்லிய வண்ணம் செயல்.***

(வினைத்திட்பம் உள்ளவர்கள் வாயால் சொன்னபடி காரியமும் செய்வார்கள்.) ஒரு காரியத்தைச் செய்வதாகச் சொல்லிவிடுவது எல்லார்க்கும் சுலபம். ஆனால் சொன்னபடி முடிப்பதுதான் அரிது.

**665.** ***வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்***
***ஊறெய்தி உள்ளப் படும்.***

(வினைத்திட்பம் என்ற பெருங்குணத்தின் உச்சத்தை யாரிடத்தில் காணலாம் என்றால்,) கொண்ட கொள்கைக்காக ஓர் அரசனையும் எதிர்த்து, அவனால் பல துன்பங்களையும் அடைந்து அவற்றைச் சகித்துக்கொண்டு தம் கொள்கையில் வெற்றி பெற்றுக் கீர்த்தியடைந்தவர் களுடைய மன உறுதி போற்றத் தகுந்தது.

**666. எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.**

(அப்படிப்பட்ட தூய வினைத்திட்பமுடையவர்கள் நினைத்ததை நினைத்தபடி முடிக்கக் கூடியவர்கள்.) உண்மையான மனோதிடம் உடையவர்கள் எண்ணின காரியத்தை எண்ணியபடி முடிப்பார்கள்.

**667. உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து.**

(அப்படிப்பட்ட மனவைராக்கியமுள்ளவர்கள் உருவத்தில் வெகு சிறியவர்களாகவும் அழகில்லாதவர்களாகவும் இருக்கலாம். அதனால், அவர்கள்) உருவத்தைக் கண்டு அசட்டை செய்துவிடக் கூடாது. பெரிய ரதம் ஓடும்போது அது கவிழ்ந்துவிடாதபடி காக்கின்ற வெகு சிறிய அழகில்லாத கடையாணிகளைப்போல அவர்கள் உலக தர்மங்கள் கவிழ்ந்துவிடாதபடி காக்க வல்லவர்கள்.

**668. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கங் கடிந்து செயல்.**

(அவர்களைப் பின்பற்றி) நல்லகாரியம் என்று தெளிவாகத் தெரிந்து மேற்கொண்டுவிட்ட காரியத்தைப் பூர்த்தி செய்யும் மன உறுதியுடன் ஓய்வின்றி உழைக்க வேண்டும்.

**669. துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.**

(அதனால்,) துன்பப்பட நேரிட்டாலும் பின்வாங்காமல் உலகத்துக்கு இன்பம் உண்டாக்கக்கூடிய நல்ல காரியங்களை வைராக்கியத்தோடு செய்யவேண்டும். அதுதான் வினைத்திட்பம்.

**670. எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு.**

(ஆகையினால்,) வேறு என்னென்ன பலங்கள் இருந்தாலும் மனோபலம் இல்லாதவர்களை உலகம் மதிக்காது.

## 68. வினைசெயல்வகை

**671. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு**
**தாழ்ச்சியுள் தங்குதல் தீது.**

(ஒரு காரியத்தைச் செய்யப் புகுமுன் ஆலோசிக்க வேண்டும்.) ஆலோசிப்பதன் நோக்கம் அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டுமா வேண்டாமா என்று தீர்மானம் செய்வதற்காகத்தான். செய்யத் தீர்மானித்தபின் தாமதிப்பது தீங்கானது.

**672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க**
**தூங்காது செய்யும் வினை.**

(ஆனால் எல்லாக் காரியங்களும் உடனே செய்யக் கூடியனவாக இருக்கமாட்டா. அதனால்,) நிதானமாகச் செய்ய வேண்டிய காரியத்தை நிதானித்துச் செய்ய வேண்டும். உடனே செய்யவேண்டிய காரியத்தில் தாமதம் கூடாது.

**673. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்**
**செல்லும்வாய் நோக்கிச் செயல்.**

வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் (மேற்கொண்ட காரியத்தைச்) செய்துவிடுவது நல்லது. அந்த வாய்ப்பு இல்லாதபோது முன் எண்ணியபடி காத்திருந்து செய்ய வேண்டும்.

**674. வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீயெச்சம் போலத் தெறும்.**

ஆலோசித்துப் பார்த்தால், மேற்கொண்ட காரியத்தைப் பூர்த்தி செய்யாமல் மிச்சம் விட்டுவைப்பதும், பகைமையைத் தீர்த்துவிடாமல் மிச்சம் விட்டுவைப்பதும் நெருப்பை அவிக்கும்போது முற்றிலும் அவித்துவிடாமல் ஒரு பொறி நெருப்பை மிச்சம் விட்டு விடுவது போலப் பின்னால் பெருந்துன்பம் உண்டாக்கும்.

**675. பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்**
**இருள்தீர எண்ணிச் செயல்.**

(ஒவ்வொரு காரியத்தையும்) அதன்நோக்கம், அதற்கு வேண்டிய சாதனங்கள், செய்யத் தகுந்த பருவக்காலம், செய்யவேண்டிய செயல்முறை நுணுக்கம், தக்க இடம் ஆகிய ஐந்தையும் சந்தேகத்துக்கு இடமில்லாமல் ஆராய்ந்து அறிந்துகொண்ட பிறகுதான் செய்யவேண்டும்.

**676. முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்**
**படுபயனும் பார்த்துச் செயல்.**

(அந்த ஐந்தும் பொருந்திய பிறகும்) காரியம் முடிவுறுமா அல்லது அதற்கு இடையூறுகள் வந்து கெட்டுப்போகுமா, கெடாமல் முடிந்தாலும் உடனே கிடைக்கக்கூடிய பலன்கள் அதற்காகப் பட்ட துன்பங்களுக்குத் தகுந்தனவாக இருக்குமா என்பவனவற்றையும் ஆராய்ந்து செய்யவேண்டும்.

**677. செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை**
**உள்ளறிவான் உள்ளம் கொளல்**

காரியம் செய்யப்புகுந்தவன் செய்யவேண்டிய முதற் காரியம், அந்தக் காரியத்தின் உறவுகளை அறிந்தவர்களுடைய உதவியைத் தேடிக் கொள்வதே.

**678. வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று.**

காரியத்தின் அந்தரங்கங்களை அறிந்த அனுபவக்காரன் அறிவைத் தேடிக்கொள்வது, பழகின யானையைக் கொண்டு புதுக்காட்டு யானையைப் பிடிப்பதைப் போன்றது.

**679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே**
**ஒட்டாரை ஒட்டிக் கொளல்.**

பகைவர்களை வெல்லுவதற்குத் துணைவர்களைத் தேடி அவர்கள் உதவிக்காக அவர்கள் மகிழும்படி பல உபகாரங்களைச் செய்து கொண்டிருப்பதை விடப் பகைவர்களையே நண்பர்களாக்கிக் கொள்வது விரைவில் பலனளிக்கும்.

**680. உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்**
**கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

(தம்மிலும் வலிமை மிகுந்தவர்கள் பகை கொண்டு வந்துவிட்டால், அவர்களை எதிர்ப்பது மூடத் தனம்.) இடம், பொருள், ஏவல்களிற் குறைந்தவர்கள் தம்மைச் சேர்ந்தவர்கள் பயத்தால் நடுங்குவதைக் கண்டு அவர்களுக்கு அழிவு வராதிருப்பதற்காகத் தம்மினும் வலிமையுள்ளவர் களை எதிர்க்காமல் பணிந்துபோவார்கள். அதற்காக அவர்களைப் பிறர் குறை கூறினாலும் பொறுத்துக் கொள்வார்கள்.

# 69. தூது

**681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.**

தூது சென்றுபேசக்கூடியவனுடைய தகுதிகள் எவை யென்றால், தூது அனுப்புகிறவர்களிடத்தில் அன்புடையவனாகவும் நல்ல குடும்பத்தில் பிறந்தவனாகவும், அரசர்கள் விரும்பும்படி நடந்துகொள்ளக் கூடியவனாகவும் இருப்பதே.

**682. அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று.**

தூது செல்கிறவர்களுக்கு இருக்கவேண்டிய இன்றியமையாத மூன்று தகுதிகள் என்னவெனில், தூது சொல்லப் போகிற காரியத்தில் ஆர்வம், அந்தக் காரியத்தை விவரமாக அறிந்திருப்பது, தூது சென்ற காரியத்தைச் சொல்லும்போது, தேர்ந்தெடுத்த சொற்களைப் பேசும் நாவன்மை ஆகியவை.

**683. நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.**

வேற்றரசரிடம் தூது சென்று அவர்களுடைய சபையில் விவாதிக்க நேர்ந்தால், அரசியல் நீதி நூல்களிலும் வல்லவனாகப் பேசக்கூடியவனே வெற்றிகரமான தூதுவனாவான்.

**684. அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.**

(குறைந்தபட்சமாக,) தூது செல்லவேண்டிய காரியத்தைப் பற்றிய அறிவு, யாவரும் மதிக்கத் தகுந்த கம்பீரமான உருவம், ஆராயச்சியுள்ள படிப்பு இந்த மூன்றும் யாரிடத்தில் நிறைந்திருக்குமோ அவனைத் தூதனாக அனுப்ப வேண்டும்.

**685. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது.**

(இதுவரை சொல்லப்பட்டது தூது அனுப்புகிறவன் கவனிக்க வேண்டியது. இனித் தூதுவன் கவனிக்க வேண்டியது இதுவே;) சொல்ல வேண்டியதை ஒழுங்காகக் கோத்துச் சொல்லி சொல்லத்தகாத குற்றமான

சேதிகளைச் சொல்லிவிடாமல் விலக்கி வேற்றரசருக்கு மகிழ்ச்சி தரும்படி பேசி நல்ல பயன் உண்டாகச் செய்கிறவனே தூதன்.

**686. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்கது அறிவதாம் தூது.**

(மேலும்,) தூதாகப் போன இடத்திலுள்ள நிலைமையை அறிந்து யாரிடத்தும் அஞ்சாமல் சொல்லவேண்டியதைத் தெளிவாகச் சொல்லி, சமயோசிதமாக நடந்துகொள்ளத் தெரிந்தவனே நல்ல தூதன்.

**687. கடனறிந்து காலம் கருதி இடனறிந்து**
**எண்ணி உரைப்பான் தலை.**

(தான் மேற்கொண்ட காரியத்தில் தனக்குள்ள) கடமைகளை விட்டுவிடாமல் காலத்தையும் இடத்தையும் அனுசரித்து அவற்றிற்குத் தக்கபடி சிந்தித்துப் பேசுகிறவனே சிறந்த தூதன்.

**688. தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு.**

(அதற்கு வேண்டிய குணங்கள்) குற்றமற்ற எண்ணம், தனக்குத்தானே பாதுகாப்பான ஆலோசனை சொல்லிக் கொள்ளக்கூடிய தன்மை, சமயோசிதமான செயல் முறையைத் தானாகவே நிச்சயித்துக் கொள்ளும் திறமை ஆகிய இந்த மூன்று குணங்களும் சேர்ந்திருப்பது தூது பேசுகிறவனுடைய சிறப்பு.

**689. விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன்.**

(மேலும், தன்னுடைய அரசன்) சொல்லியனுப்பிய சேதியை வேற்றரசர்களிடம் சொல்லும்போது குற்றமாக எதையும் வாய்தவறியும் சொல்லிவிடாத திடமுள்ளவனே நல்ல தூதன்.

**690. இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு**
**உறுதி பயப்பதாம் தூது.**

தனக்கு மரணம் வருவதானாலும், தன்னாலான எல்லா முயற்சி களையும் மிச்சமில்லால் செய்து, தன்னுடைய அரசனுக்கு நன்மை உண்டாக்கி வைப்பதே தூதனுடைய கடமை.

# 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

**691. அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க**
**இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.**

வலிமையுள்ள பதவி வகிக்கும் அரசர்களிடத்தில் நெருங்கிப் பழக வேண்டியவர்கள், குளிர்காய்கிறவர்கள் நெருப்பண்டை இருப்பதுபோல மிகவும் அருகில் போய் விடாமலும் தூரமாக விலகிவிடாமலும் இருக்க வேண்டும்.

**692. மன்னர் விழைப விழையாமை மன்னரால்**
**மன்னிய ஆக்கந் தரும்.**

(அரசனோடு இருக்கும் ஒருவன்) அரசன் ஆசைப்படுகிற பொருள்களி லெல்லாம் தானும் ஆசைப்படாமல் இருப்பது அரசனால் பாராட்டப் படும். அதனால் பல நன்மைகள் உண்டு.

**693. போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கும் அரிது.**

(பல மனிதர்களுக்குச் சிற்சில கெட்டபழக்கங்கள் உண்டு. அவற்றை அடக்குவது கடினமாக இருக்கும். ஆயினும் அரசனுடன் இருக்கும்போது) அடக்கிக் கொள்ளக் கடினமான பழக்கங்களையும் அடக்கி எச்சரிக்கை யாக நடந்து கொள்ள வேண்டும். இல்லாவிடில் அரசனுக்குக் கெட்ட அபிப்பிராயம் உண்டாகிவிடும். அதை மாற்ற யாராலும் முடியாது.

**694. செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்**
**ஆன்ற பெரியா ரகத்து.**

(அதனுடன்,) மிகவும் மதிக்கத்தகுந்த அரசனுக்கு அருகில், பிறருடன் காதோடு இரகசியம் பேசுவதும் அதையொட்டிக் கலகலத்துச் சிரிப்பதும் அடியோடு நீக்க வேண்டியவை.

**695. எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை**
**விட்டக்கால் கேட்க மறை.**

(அரசனுடன் பேசும்போது) சொல்லுகிற நியாயங்களில் எதையேனும் அரசன் சரியாகப் புரிந்துகொள்ளாமலோ அல்லது கவனமாகத் தொடர்ந்து கேட்காமலோ இருந்துவிட்டால், அதைப் பற்றிச் சபையில் கேட்டுவிடாமல் பின் மறைவிடத்தில் தனித்துக் கேட்கவேண்டும்.

***696. குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில***
***வேண்டுப வேட்பச் சொலல்.***

(எதைச் சொன்னாலும்) அரசனுடைய நோக்கத்தை உணர்ந்து அவனுக்கு வெறுப்பில்லாத சமயம் பார்த்து அணுகி, அவன் கேட்ட பின்பு சொல்ல வேண்டியதை அவனுக்கு மகிழ்ச்சியுண்டாகச் சொல்ல வேண்டும்.

***697. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்***
***கேட்பினும் சொல்லா விடல்.***

(அப்படிச் சொல்வதிலும் காரியத்துக்கு வேண்டிய அளவோடு) விரும்பத் தகுந்தவற்றை மட்டும் சொல்லி விரும்பத்தகாதவற்றை அரசன் கேட்டாலும் சொல்லாமல் விட்டுவிட வேண்டும்.

***698. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற***
***ஒளியோடு ஒழுகப் படும்.***

(எப்போதும் அரசனுடைய பதவிக்குச் செலுத்த வேண்டிய மரியாதையோடு நடந்துகொள்ளவேண்டும்.) அரசன் வயதில் இளையவன் என்றோ சொந்தக்காரன் என்றோ அசாக்கிரதையாக இருந்துவிடாமல் அரசனுடைய பதவிக்குத் தகுந்த மரியாதைகளுடன் நடந்துகொள்ள வேண்டும்.

***699. கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்***
***துளக்கற்ற காட்சி யவர்.***

(அரசன் தம்முடன் எவ்வளவு சகசமாகப் பழகினாலும்,) தெளிந்த அறிவுடையவர்கள், 'நாம் அரசனுக்கு மிகவும் பிரியமுள்ளவர்கள் ஆகிவிட்டோம்' என்று எண்ணிக் கொண்டு தகாதமுறையில் அரசனிடம் நடந்துகொள்ள மாட்டார்கள்.

***700. பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்***
***கெழுதகைமை கேடு தரும்.***

(நெடுநாள் பழகியிருந்தாலும்) 'அரசனுக்கு நாம் நெடுநாளைய நண்பர்தாமே' என்று எண்ணிக்கொண்டு முறை தவறி நடந்துகொள்ளும் உரிமை கெடுதி உண்டாக்கும்.

# 71. குறிப்பறிதல்

***701.* *கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்***
***மாறாநீர் வையக்கு அணி.***

வாயால் சொல்லிக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிற இன்னொருவனுடைய முகத்தைக் கண்டே அவனுடைய மன விருப்பத்தை அறிந்து அதன்படி நடந்து கொள்ளக்கூடிய ஒருவன், எக்காலத்திலும் உலகத்தைக் கடல் சூழ்ந்திருக்கின்ற உண்மையைப் போல் என்றும் சமுதாயத்திற்கு ஓர் ஆபரணம் போன்றவன்.

***702. ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்***
***தெய்வத்தோ டொப்பக் கொளல்.***

(அப்படிப்பட்ட அபூர்வ மனிதனை) இன்னொருவனுடைய மனத்திலுள்ளதை (அவன் வாயாற் சொல்லாமலும் முகக்குறிகளால்) சந்தேகத்துக்கு இடமின்றி உள்ளபடி அறிந்து கொள்ளக்கூடிய ஒருவனைத் தெய்வத்துக்குச் சமான மாகத்தான் மதிக்க வேண்டும்.

***703. குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்***
***யாது கொடுத்தும் கொளல்.***

ஒருவனுடைய முகக் குறிகளிலிருந்தே அவனுடைய கருத்தை அறியக் கூடியவர்களை என்ன சம்பளம் கொடுத்தானாலும் காரியக்காரராக அமர்த்திக்கொள்ள வேண்டும்.

***704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை***
***உறுப்போ ரனையரால் வேறு.***

(ஏனெனில்,) வாயாற் சொல்லாமலே குறிப்பறிந்து காரியம் செய்யக் கூடியவர்களுக்கு மற்ற காரியஸ்தர்கள் சமமானவர்களா? ஆக மாட்டார்கள். முற்றிலும் வேறுபட்டவர்களே.

***705. குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்***
***என்ன பயத்தவோ கண்.***

(ஒருவன் முகத்தைக்) குறிப்பாகப் பார்த்தவுடனேயே அவனுடைய நோக்கத்தைக் கண்டுகொள்ள முடியாவிடில் உடலின் உறுப்புகளில் கண்கள் இருந்து பயனென்ன?

**706. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்.**

(ஒருவரைப் பார்த்தாலேயே அவருடைய மனநிலையைக் கண் எப்படி அறிய முடியும் என்றால்,) தன் எல்லைக்குள் அடுத்த பொருள்களின் வடிவத்தை ஒரு பளிங்குக் கல்லானது காட்டுவதுபோல ஒருவனுடைய மனத்தில் மிகுந்துள்ள உணர்ச்சியை அவன் முகம் காட்டிவிடும்.

**707. முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்**
**காயினும் தான்முந் துறும்.**

(உள்ளத்தில் உள்ளதையெல்லாம் முகம் காட்டாவிடினும் அப்போது மனத்தில் மிகுந்துள்ளது இன்பமா துன்பமா என்பதையாவது நிச்சயமாகக் காட்டிவிடும்.) முகத்தைக் காட்டிலும் மனத்தை அறியக்கூடிய அங்கம் வேறு உண்டா? மனம் மகிழ்ச்சி அடைந்தாலும் வருத்தம் அடைந்தாலும் அதை முகந்தான் முதலில் (அறிந்து) காட்டும்.

**708. முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி**
**உற்ற துணர்வாரப் பெறின்.**

(ஒருவனுடைய முகம் அவனுடைய மனம் இன்பப் படுவதையோ துன்பப்படுவதையோ காட்டுவதைத் தொடர்ந்து) ஒருவனுடைய உள்ளத்தை ஊகித்தறிந்து விடக்கூடிய தனித்திறமை உள்ளவர்கள் அவனுடைய முகத்தைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தால் அதுபோதும் குறிப்பறிய!

**709. பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்**
**வகைமை உணர்வாரப் பெறின்.**

(மனிதனுக்குக் கண்களால் அடையும் பயன் வெறும் பார்ப்பது மட்டுமல்ல. பார்த்த பொருள்களின் தன்மைகளையும் ஆராய்ந்து அறிவிக்கக்கூடியது கண். அதனால்,) கண்களின் இயல்பையும் அவற்றாலடையும் பயன்களின் வகைகளையும் அறிந்தவர்களுக்குப் பகைவனையும் நண்பனையும் அவர்களுடைய கண்களே அவர்களுக்குச் சொல்லிவிடும்.

**710. நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்**
**கண்ணல்லது இல்லை பிற.**

(ஆகையினால்,) எண்ணிப் பார்த்தால், கூரிய அறிவுடையவர்கள் எதையும் அளந்தறியும் கருவி அவர்களுடைய கண்களைத் தவிர வேறில்லை.

# 72. அவை அறிதல்

**711. அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.**

வார்த்தைகளைக் கோத்துப் பேசத் தெரிந்தவர்கள் தம்முடைய பிரசங்கம் குற்றமற்றதாக இருக்க விரும்பினால், தாம் பேசுகின்ற சபையில் உள்ளவர்களின் தரத்தை அறிந்து கொண்டு அதற்குத் தகுந்த ஆலோசனையோடு பேசவேண்டும்.

**712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.**

பிரசங்கத்தைக் கொண்டு செலுத்தத் தெரிந்தவர்கள் தம்முடைய பேச்சினால் நல்ல பயன் உண்டாக வேண்டுமென்று விரும்பினால், பேச்சின் இடையிடையே தம்முடைய சொற்பொழிவைச் சபை ஆர்வத்தோடு சுவைக்கிறதா என்பதை அறிந்துகொண்டு அதற்கிணங்க உணர்ந்து பேசவேண்டும்.

**713. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல்.**

சபையை அறிந்துகொள்ளாமல் பிரசங்கம் செய்கிறவர்கள் பிரசங்க முறையை அறிந்தவர்களும் அல்லர்; அது ஒரு சாமர்த்தியமும் அன்று.

**714. ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல்.**

அறிவாளிகள் கூடியுள்ள சபையில் மிகுந்த அறிவாளி என்ற புகழுடையும்படி பேசவேண்டும். அறிவு குறைந்த சாதாரண மக்கள் கூடியுள்ள இடத்தில் அவர்களைவிடச் சாதாரண மனிதனாகப் பேசவேண்டும்.

**715. நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.**

தன்னைவிட அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவர்கள் கூடியுள்ள சபையில் அவர்கள் விரும்புவதற்கு முன் பேசமுற்படாமலிருக்கிற அடக்கம் நல்ல குணங்களிலெல்லாம் நல்ல குணம்.

**716. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு.**

(இல்லையானால் அது ஒழுக்கம் கெட்டதாகும்.) விரிந்த கல்வி யறிவுள்ள பிரசங்கத்தைக் கேட்டு அனுபவிக்கக்கூடிய முதியோர்கள் கூடிய சபையில் அந்தக் குற்றம் செய்வது (பதற்றம் காட்டுவது) ஒழுக்கத்தில் தவறுவதேயாகும்.

**717. கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து.**

(கற்றார் சபையில் பேசும் பழக்கம் பேச்சுத் திறனை அதிகப்படுத்தும்.) பிரசங்கம் செய்கிறவர்கள் குற்றமில்லாமல் பேசுகின்றார்களா என்பதை அறியக்கூடியவர்கள் நிறைந்த சபையில் பேசினால்தான் கற்றறிந்த கல்வியின் சிறப்பு அதிகப்பட்டுப் பிரகாசமடையும்.

**718. உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.**

(எப்படியென்றால்,) உணர்ந்து அனுபவிக்கும் தன்மை உள்ளவர் களுக்கு முன்னால் பேசிப் பழகுவது, வளரும் பயிருள்ள பாத்திக்குள் நீர் பாய்ச்சுவதைப் போன்றது.

**719. புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.**

(அதனால் கல்வியறிவும் உணருந்தன்மையும் உள்ள்வர்கள் நிறைந்த) நல்ல சபையோர் மெச்சும்படி கல்வியறிவோடு பேசத்தெரிந்தவர்கள், கல்வியும் உணர்ச்சியும் குறைவான கூட்டங்களில் அந்தக் கல்வித் திறமுள்ள பேச்சை மறந்தும் பேசிவிடக்கூடாது.

**720. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்.**

(ஏனென்றால்,) உயர்ந்த கல்வியறிவு நிறைந்த கருத்துக்களை அவற்றை அனுபவிக்கக்கூடிய கல்வியறிவில்லாதவர்கள் கூட்டத்தில் பேசுவது, சாக்கடையில் அமிர்தத்தைக் கொட்டிவிடுவதற்குச் சமானம். ஆதலால், தம்முடைய இனமான கற்றறிந்தார் அல்லாதவர் கூட்டத்தில் அவற்றைப் பேசுவது வீணானது.

# 73. அவை அஞ்சாமை

**721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**தொகையறிந்த தூய்மை யவர்.**

(எந்தச் சபையில் யார் பேசினாலும் சபைக்கூச்சம் வருவதுண்டு. அதிலும், கற்றவர் சபையைக் கண்டால் அந்தக் கூச்சம் அச்சமாகிவிடும். அதனால்,) தாம் பேசுகின்ற சபை வல்லவர்கள் கூடிய சபை என்று சபையின் வகையை அறிந்த பின்பும் அதில் வாய் குழறாமல் பேசக் கூடியவர்களே குற்றமில்லாமல் பேசத் தெரிந்தவர்களாவார்கள்.

**722. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

(கற்றார் முன் அச்சமின்றிப் பேசக்கூடியவர்கள்தாம் கற்றவர்கள்.) கற்றறிந்தார் சபையில் தாம் கற்றதைத் தடுமாற்றமின்றிச் சபை ஏற்றுக் கொள்ளும்படி சொல்லத் தெரிந்தவர்களே கற்றவர்களால் கற்றவராக மதிக்கப்படுவார்கள்.

**723. பகையகத்துச் சாவார் எளியர் அரியர்**
**அவையகத்து அஞ்சா தவர்.**

(சபைக் கூச்சமில்லாமல் பேசத் தெரிந்தவர்கள் வெகு சிலரே.) போர்க் களத்தில் பகைவர்களுக்கு அஞ்சாமல் உயிர் விடக்கூடியவர்கள் பலபேர் உண்டு. ஆனால் சபையில் அச்சமில்லாமல் பேசக்கூடியவர்கள் வெகு சிலரே.

**724. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற**
**மிக்காருள் மிக்க கொளல்.**

கற்றவர் சபையில் தாம் கற்றதைச் சபையோர் ஏற்றுக்கொள்ளும்படி கூசாமல் பேசுவதும், தம்மைவிட அதிகமாகக் கற்றவரிடம் (விவாதிக்க நேர்ந்தால்) அவர்கள் அதிகமாகக் கற்றுள்ளதை ஏற்றுக் கொள்வதுமே அவையஞ்சாமை.

**725. ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா**
**மாற்றம் கொடுத்தற் பொருட்டு.**

கற்றறிந்தார் சபையில் விவாதிக்கும்போது, சபைக்கு அஞ்சாமல், தம்முடன் விவாதிக்கிறவருக்கு எதிர்மொழி சொல்லுவதற்காகச் சொல்ல

வேண்டியதை மட்டும் ஒழுங்கு முறைக்கு ஒத்த அளவோடு கண்டித்துப் பேசவேண்டும்.

**726. வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு.**

(அப்படிச் சபையில் அச்சமில்லாமல் விவரிக்க முடியாதவர்கள் எவ்வளவு நூல்களைப் படித்திருந்தாலும் என்ன பயன்?) தைரியம் இல்லாதவர்கள் வாளெடுத்து என்ன பயன்? அதைப்போல் கற்றவர் சபையில் அஞ்சாமல் பேச முடியாதவர்கள் பல நூல்களைப் படித்திருந்தும் என்ன பயன்?

**727. பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல்.**

(மேலும்,) கற்றவர்கள் கூடிய சபையில் பேசப்பயப்படுகிறவர் கற்ற கல்வி எவ்வளவு சிறந்ததானாலும் அது பகைவர்கள் கூடிய இடத்தில் பயங்கொள்ளியான ஒரு பேடியின் கையில் மிகக் கூர்மையான சிறந்த வாள் இருப்பதைப் போன்றதே.

**728. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.**

(அதனால்,) கற்றவர்கள் கூடிய நல்ல சபையில் நன்றாகப் பேசத் தெரியாதவர்கள் பல நூல்களைப் படித்திருந்தாலும் பயனற்றவர்களே ஆவார்கள்.

**729. கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார்.**

கல்வியறிவு இருந்தும் கற்றவர்கள் சபையில் பேச அஞ்சுகிறவர்கள், கல்வியே இல்லாதவர்களைவிடக் கீழானவர்கள் என்று சொல்லவேண்டும்.

**730. உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.**

(ஆகையினால்,) சபைக்கு அஞ்சித் தாம் கற்ற கல்வியைப் பிறருக்குப் பயனுண்டாகும்படி சொல்ல முடியாதவர்கள் இருந்தும் இல்லாததற்குச் சமானம்.

# 74. நாடு

**731. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு.**

வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருள்கள் விளையக்கூடிய வயல் நிலங்களும், அந்த நிலங்களில் பாடுபடத்தக்க உழவாளிகளும், குற்றமற்ற வழிகளில் செல்வத்தைப் பெருக்கக் கூடிய வணிகரும் சேர்ந்துள்ளதே நல்ல நாடு.

**732. பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**
**ஆற்ற விளைவது நாடு.**

பல பொருள்களும் கிடைக்கக்கூடிய இயற்கை வளமுள்ள இடம் என்று யாரும் விரும்பி நாடி வரக் கூடியதாகவும், குறைந்த உழைப்பினால் மிகுந்த விளைச்சல் தரக்கூடியதாகவும் உள்ளதே நல்ல நாடு.

**733. பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு**
**இறையொருங்கு நேர்வது நாடு.**

(அதனுடன் பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய குடிமக்கள் உள்ளதாகவும் இருக்கவேண்டும்.) பல பொறுப்புக்கள் ஒருமிக்க திடீரென்று வந்துவிட்டாலும் அவற்றைத் தாங்கி நின்று சமாளிப்பதற்காக, வழக்கமில்லாத புது வரிகளையும் மற்ற உதவிகளையும் சேர்த்து அரசனுக்குக் கொடுக்கச் சம்மதிக்கிற குடிகளை உடைய நாடே நல்ல நாடு.

**734. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா தியல்வது நாடு.**

(அப்படித் திடீரென்று வரக்கூடிய பொறுப்புக்கள் எவை என்றால்,) நீடித்த உணவுப் பஞ்சமும் தொற்று நோய்களும் அன்னியர்களின் படையெடுப்பும் வராதபடி நடத்தப்படுகிற நாடே நல்ல நாடு.

**735. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு.**

(மேலும்,) குடிகளுக்குள் பல கட்சிகளும், நாட்டைப் பாழாக்கி விடக்கூடிய உள்நாட்டுத் துரோகிகளும், அரசாங்கத்தை அலைக்கழிக்கும் இரகசியக் கும்பல்களின் கொலை மிகுந்த அராஜகமும் இல்லாததே நாடு.

**736. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா**
**நாடென்ப நாட்டின் தலை.**

(தன்னளவில் ஒரு கெடுதி வராமல் இருந்தும்,) பிற நாட்டாரால் ஒரு கெடுதி வந்துவிட்டாலும், அதைச் சரிசெய்து கொள்ள வேண்டிய இயற்கை வளங்கள் குறையாமலிருக்கிற நாடு மற்ற நாடுகளுக்கெல்லாம் சிறந்த நாடு எனப்படும்.

**737. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.**

(அந்த இயற்கை வளங்கள் பல:) மழைநீர், கிணற்றுநீர் என்ற இருவகை நீர் வளமும் அவற்றிற்கு வாய்ப்புத்தரும் மலை வளமும், பலமான பாதுகாப்புக்களும் ஒரு நாட்டிற்குச் சிறப்பளிக்கும் அங்கங்கள்.

**738. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்**
**அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.**

ஒரு நாட்டிற்கு முக்கியமாக அமைய வேண்டிய வளங்கள் ஐந்து. (அவை:) நோயுண்டாக்காத (நீரும் காற்றும் உள்ள) இயல்பு, பொருளாதார பலம், விளை பொருள்களின் மிகுதி, (உடலுக்கும் உடைமைக்கும்) பாதுகாப்பு ஆகிய ஐந்துமே ஒரு நாட்டிற்குச் சிறப்பளிப்பவை.

**739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளந்தரு நாடு.**

(சுருங்கச் சொன்னால்,) தேடியலைந்து தவிக்காமல் வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் எளிதில் கிடைக்கக்கூடிய நிலப்பகுதியே நல்ல நாடு; அப்படியின்றி மிகவும் முயன்று தேடியலைந்துதான் வாழ்க்கை வசதிகளைச் செய்துகொள்ள முடியும் என்ற இடங்கள் நாடுகளல்ல.

**740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்தமை வில்லாத நாடு.**

(நல்ல அரசும் அமைந்தால்தான் அது நாடு,) அப்படி எல்லா வளங்களும் பொருந்தி வாழ்க்கை வசதி எளிதாகக் கிடைக்கக் கூடியதானாலும், நல்ல அரசாட்சி அமையப் பெறாத நாடு பயனற்றதேயாகும்.

# 75. அரண்

**741. ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்**
**போற்று பவர்க்கும் பொருள்.**

பிற நாட்டின்மீது படையெடுப்பவர்க்கானாலும், பிற நாட்டார் படையெடுப்புக்கு அஞ்சித் தம்மைக் காத்துக் கொள்பவர்க்கானாலும் கோட்டை இன்றியமையாத பொருள்.

**742. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
**காடும் உடையது அரண்.**

(கோட்டையானது எப்படி இருக்க வேண்டுமென்றால்,) கோட்டை யானது ஆழமான நீருள்ள அகழியோ, திடல்களோ, மலைகளோ, மரமடர்ந்த காடுகளோ சூழ்ந்ததாக இருக்கவேண்டும்.

**743. உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்**
**அமைவரண் என்றுரைக்கும் நூல்.**

(கோட்டைச் சுவர்கள்) எளிதில் ஏற முடியாத உயரமும், (வீரர்கள் தங்கி நின்று காவல் புரிய வசதியுள்ள) அகலமும், (துளைத்துவிட முடியாத) உறுதியும், பகைவர்கள் அறிந்து கொள்ள முடியாத எந்திர தந்திர இரகசியங்களும் ஆகிய இந்த நான்கும் பொருந்திய சுவர்கள் உள்ளதாக இருப்பதே கோட்டையென்று அதைப் பற்றிய நூல்கள் சொல்லும்.

**744. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை**
**ஊக்கம் அழிப்பது அரண்.**

காவல் புரிய வேண்டிய வாசல் குறுகியதாகவும், உள்ளே அகன்ற இடமுள்ளதாகவும், நெருங்கிய பகைவர்கள் செய்கிற முயற்சிகளை யெல்லாம் கெடுத்துவிடக் கூடியதாகவும் இருப்பது கோட்டை.

**745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்**
**நிலைக்கெளிதாம் நீரது அரண்.**

(பகைவர்கள் நெடுநாள் முற்றுகை செய்தாலும்,) பகைவர் கைப்பற்ற முடியாதபடி உணவுப் பொருள்கள் ஏராளமாக உள்ளதாகவும் உள்ளே இருப்பவர்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா வசதிகளும் நிறைந்த தாகவும் இருப்பதே கோட்டை.

**746. எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லாள் உடையது அரண்.**

(சண்டையோ முற்றுகையோ இல்லாத காலங்களிலுங்கூட) எல்லாத் தளவாடங்களும் உள்ளதாக, அந்தந்த வேலைக்கு அந்தந்த இடத்தில் இருக்க வேண்டிய பயிற்சி பெற்ற ஆட்களும் எப்போதும் உள்ளதாக இருப்பதுதான் கோட்டையாகும்.

**747. முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண்.**

(யுத்தம் மூண்டு முற்றுகை வந்துவிட்டால்) முற்றுகை செய்யும் பகைவர்கள் நெருங்க முடியாதபடி அவர்களை ஓடச் செய்து, உள்ளிருப்பவர்கள் இருக்கும் இடத்தைப் பகைவர்கள் அறிய முடியாதபடி மறைக்கக்கூடியதாகி, பகைவரால் கைப்பற்ற முடியாத உபாயங்கள் அமைந்ததே கோட்டை.

**748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வது அரண்.**

முற்றுகையைத் திறமையுடன் நடத்தி, கோட்டைக்குள் புகுந்து விட்டவர்களையும் உள்ளிருக்கும் வீரர்கள் பிடித்துக் கொள்ளக்கூடிய இரகசிய அமைப்புக்களும் உள்ளதாக இருப்பது கோட்டை.

**749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்டது அரண்.**

உள்ளே புகுந்தவர்களுடன் போர் புரிய நேர்ந்தால் அவர்கள் ஒருமிக்கக் கவிழ்ந்துவிடக்கூடிய தந்திரமுள்ள வேலைப்பாடுகள் அமைந்த பெருமையுள்ளதாக விளங்கக் கூடியதே கோட்டையாகும்.

**750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண்.**

எப்படிப்பட்ட எந்திர தந்திரப் பெருமையுள்ளதாக இருந்தாலும், அந்த எந்திர தந்திர வேலைப்பாட்டின் உளவுகளை அறியாத அயலாருக்குப் பயனற்றனவாகப் போய்விடக்கூடிய சிறப்புக்கள் அமைந்தது கோட்டையாகும்.

# 76. பொருள் செயல்வகை

**751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்லது இல்லை பொருள்.**

மதிக்கத் தகாதவர்களையும் மதிக்கச் செய்கிற செல்வத்தைவிட மக்கள் தேடவேண்டிய பொருள் வேறொன்றும் இல்லை.

**752. இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு.**

(ஏனென்றால்,) பணமில்லாதவர்களை எல்லாரும் அலட்சியம் செய்வார்கள்; பணம் உள்ளவர்களை எல்லாரும் பெருமைப் படுத்துவார்கள்.

**753. பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்**
**எண்ணிய தேயத்துச் சென்று.**

(அதுமட்டுமல்லாமல்,) செல்வம் என்னும் விளக்கு மட்டும் கையிலிருந்தால், அதை உடையவன் எந்தத் தேசத்துக்குப் போனாலும் அவனுக்கு வழிகாட்டவும் அவனிடம் பிரகாசமுண்டாக்கவும் அது தப்பாமல் உதவும்.

**754. அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள்.**

(அப்படிப்பட்ட செல்வம் நல்ல வழியில் சம்பாதிக்கப்பட்டதானால்,) குற்றமற்ற வழிகளில் சம்பாதிக்கப்பட்ட செல்வம் அந்தக் குற்றமற்ற தன்மைக்குத்தக்கபடி தருமப்பலன்களைக் கொடுக்கும்; இன்பங்களையும் அனுபவிக்க உதவும்.

**755. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார் புரள விடல்.**

(அதனால் மேலோர்கள்) அருள் வழியிலும் அன்பு வழியிலும் வராத செல்வப் பெருக்கத்தை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

**756. உறுபொருளும் உல்கு பொருளும் தன்ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்**

அரசுரிமையினால் அரண்மனையிலும் பொக்கிஷத்திலும் உள்ளனவாகக் கிடைத்த செல்வமும், குடிகளிடத்தில் வரிகள் மூலமாக

வாங்கும் செல்வமும், நாட்டில் குற்றம் செய்கிறவர்களிடத்தில் அபராதமாக வசூலிக்கிற பணமும் அரசனுக்குப பொருள் செயல்வகையான வருவாய்கள்.

757. அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.

(பொதுவாகப் பொருள்கள் வசதி மக்களிடம் சரியாக இருந்தால்தான் சமுதாயத்தில் அன்பும் அருளுமான அறங்கள் நடைபெறும்.) அன்பிலிருந்து உதிக்கின்ற அருள் என்ற சிசு, செல்வம் என்ற சக்தியுள்ள செவிலித் தாயால்தான் வளர்ந்து வாழும்.

758. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று
உண்டாகச் செய்வான் வினை.

(தன் கையில் பொருள் உள்ளவன் அரிய காரியத்தையும் எளிதாகச் செய்து முடிக்கலாம்.) பொருள் என்ற ஒன்றைத் தன் கையில் வைத்துக் கொண்டு முயற்சி செய்கிறவனுடைய காரியம், உயரமான இடத்தில் இருந்துகொண்டு யானையுடன் போர்புரிவதைப்போல் (அபாயமின்றி) வெற்றிதரக்கூடியது.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல்.

(ஆகையால், செல்வத்தை முயற்சி செய்து சம்பாதிக்க வேண்டும். ஏனென்றால்,) பகைவர்களுடைய கர்வத்தை அடக்குவதற்கு அதைவிடக் கூர்மையான ஆயுதம் வேறில்லை.

760. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு.

(ஆனால் அந்தச் சம்பாதனை அருளோடும் அன்போடும் நல்ல வழிகளில் வரவேண்டும்.) நல்ல வழிகளில் சம்பாதிக்கப்பட்ட செல்வம் நிரம்ப உள்ளவர்களுக்கு அறம், பொருள், இன்பம் என்ற மூன்று லட்சியங்களில் மற்ற இரண்டு லட்சியங்களாகிய அறமும் இன்பமும் சேர்ந்தாற் போல் எளிதில் கைகூடும்.

# 77. படைமாட்சி

**761. உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை.**

(சேனைக்கு வேண்டிய) எல்லாப் பகுதிகளும் அமைந்த தாக இடையூறுகளுக்கு அஞ்சாமல் முன்னேறி வெல்லக் கூடிய சேனை அரசனுடைய செல்வங்களிலெல்லாம் சிறந்தது.

**762. உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது.**

யுத்தம் மூண்டுவிட்டபோது துன்பங்களுக்கு அஞ்சாமல் போர் புரியக்கூடிய தைரியம், யுத்தம் இல்லாத சமாதான காலங்களிலும் யுத்தப் பயிற்சி செய்துகொண்டே இருக்கிற சேனைக்கல்லாமல் மற்றவர்களுக்கு வராது.

**763. ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.**

(போர்புரியும் பயிற்சியில்லாதவர்கள் எவ்வளவு திரளாகக் கூடினாலும் அக்கூட்டம் சேனையாகாது. எதுபோல் என்றால்,) கணக்கற்ற எலிகள் சமுத்திரம்போல் கூடிப் பகைமை காட்டி யுத்தக்கூச்சல் போட்டாலும், நாகப்பாம்பு ஒரு சீற்றம் சீறினால் அத்துணை பெரிய எலிக்கூட்டமும் உடனே கலைந்துவிடும்.

**764. அழிவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.**

(அதனால்,) அணிவகுப்புக் கலையாமலும், பகைவர்களுடைய பயமுறுத்தலுக்கு அஞ்சி ஓடிவிடாமலும் இருக்கப் பயிற்சி கொடுக்கப்பட்டு உண்டாகிற மன உறுதியுடையதே சேனை எனப்படும்.

**765. கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.**

(அப்படிப் பழகிக்கொண்டே இருப்பதனால்,) எமனே சினங்கொண்டு தன்மீது வந்தாலுங்கூட அணிவகுப்புக் கட்டுக் கலையாமல் சேர்ந்து நின்று எதிர்க்கும் திறமை கூடியுள்ளதுதான் சேனை.

**766. மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்**
**எனநான்கே ஏமம் படைக்கு.**

அச்சமற்ற தன்மை, (வீரருக்குத் தகாத பழி பாவங்களைச் செய்துவிடக் கூடாதென்ற) மானமுடைமை, (பார்த்தவர்கள் மதிக்கும்படியாக அணிவகுப்புடன்) கம்பீரமான வழிநடை, மேற்கொண்ட போரை நடத்த வேண்டிய (திட்டத்திலும் முறையிலும்) தெளிவான அறிவு ஆகிய இந்த நான்கும் ஒரு சேனையின் பெருமைக்குப் பாதுகாப்புக்கள்.

**767. தாா்தாங்கிச் செல்வது தானை தலைவந்த**
**போா்தாங்கும் தன்மை யறிந்து.**

யுத்தத்தில் அப்போதைக்கப்போது ஏற்படுகிற நிலைமைக்குத் தக்கபடி மாற்றி மாற்றி அணிவகுத்துக் கொண்டு பகைவர்மேற் செல்லத் தெரிந்ததுதான் சேனை.

**768. அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை**
**படைத்தகையால் பாடு பெறும்.**

போர் புரியும் மனஉறுதியும் உடலுறுதித் திறமைகளும் படை வீரர்களிடம் இல்லாவிட்டாலும், சேனை அதன் படைப் பயிற்சிக் கட்டுப் பாட்டின் தன்மையினால் மட்டுமே சிறப்படையும்.

**769. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்**
**இல்லாயின் வெல்லும் படை.**

படைவீரர்களுக்குத் தகாத அற்பத் தனங்களும், (ஏதாவது முறையை நீக்காததால் அரசன்மீது கொண்டுள்ள) நீங்காத மனவருத்தமும், (ஊதியம், உணவு, உடை, தளவாடங்கள் முதலியவை குறைவான) தரித்திரமும் இல்லாதபடி பார்த்துக்கொண்டால் சேனை வெற்றிதரும்.

**770. நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை**
**தலைமக்கள் இல்வழி இல்.**

(மேற்சொன்ன அமைவுகளெல்லாம் பொருந்தி) போர்ச் சேவகர்களின் எண்ணிக்கை மிகுந்திருந்தாலும் சரியான படைத்தலைவர்கள் இல்லா விடில் சேனை பயனற்றதாகும்.

# 78. படைச்செருக்கு

*771. என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை*
*முன்நின்று கல்நின் றவர்.*

(ஒரு வீரன் போர் தொடுக்குமுன் எதிரிக்கு இவ்விதம் எச்சரிக்கை செய்வான்:) பகைவர்களே! என்னுடைய அரசனை எதிர்த்து நிற்க வேண்டாம்! என்னுடைய அரசனை எதிர்த்து இறந்துபோய் கல்நாட்டப் பெற்றவர்கள் பலர்.

*772. கான முயலெய்த அம்பினில் யானை*
*பிழைத்தவேல் ஏந்தல் இனிது.*

காட்டில் அஞ்சி வெகுதூரத்தில் ஓடுகின்ற முயலைக் குறி தவறாமல் கொன்றுவிட்ட அம்புக்கு உடையவனாக இருப்பதை விட, அச்சமின்றி எதிர்க்கக்கூடிய பலமுள்ள யானையை அருகில் சென்று தாக்கிக் குறி தவறித் தோற்றுவிட்ட வேலாயுதத்துக்கு உடையவனாக இருப்பது வீரனுக்கு இன்பமளிப்பது.

*773. பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்*
*ஊராண்மை மற்றதன் எஃகு.*

சிறந்த ஆண்மை என்பது அச்சமற்ற தன்மையே எனப்படும். ஓர் அவசியம் நேரிடும்போது போர் புரிவதைக் கொண்டு செலுத்தி வெல்ல வேண்டிய ஆற்றல் அந்தப் பேராண்மைக்கு ஒரு கருவியேயாகும்.

*774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்*
*மெய்வேல் பறியா நகும்.*

தன் கையிலிருந்த வேலை ஒரு யானையின் உடலிற் பாய்ச்சி உடலிற் பதிந்த வேலோடு யானை ஓடிவிடத் திரும்பி வந்த வீரன் தன்னுடைய முதுகில் கட்டியிருந்த வேறொரு வேலை இழுத்து எடுத்துக்கொண்டு மீண்டும் யானையைத் தாக்க விரும்பி மகிழ்ச்சி கொள்வான்.

*775. விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்*
*ஒட்டன்றோ வன்க ணவர்க்கு.*

வேலைக் கொண்டு குத்தினாலும் அச்சமற்ற ஒரு வீரன், திறந்த கண்களைச் சிமிட்டமாட்டான். அப்படிச் சிமிட்டுவதை, அவன் போரில் தோல்வியடைந்து முதுகு காட்டி ஓடுவதற்குச் சமானமாகக் கருதுவான்.

**776. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து.**

படைச் செருக்குடைய வீரன் தான் போர் புரிந்த நாட்களை எண்ணிப் பார்த்து, அவற்றுள் குற்றமற்ற புண்களாகிய முகப்புண், மார்புப்புண் என்பனவல்லாது வேறு இடங்களில் புண்பட்ட நாட்கள் இருக்குமானால், அந்த நாட்களைத் தனக்கு மாசுண்டாக்கிய நாட்களாக மதிப்பிடுவான்.

**777. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
சுழல்யாப்புக் காரிகை நீர்த்து.**

தம்மைப் பற்றிய சரித்திரம் புகழ் சூழ்ந்ததாக இருக்க வேண்டும் என்பதை விரும்பி உயிரை விட்டுவிடவும் அஞ்சாதவர்களுடைய கால்களுக்கு வீரகண்டை அணிவிப்பது பெருமை தரத்தக்கது.

**778. உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர்.**

(அப்படிப்பட்டவர்கள்) அவசியமான சமயத்தில் உயிர் கொடுக்கவும் அஞ்சாத வீரர்கள், அரசன் தமக்கு வருத்தம் உண்டாக்கிவிட்டாலும் கடமையில் குறைந்துவிட மாட்டார்கள்.

**779. இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்.**

('உயிரையும் கொடுப்பேன்' என்று சேனையில் சேரும் போது) செய்து கொடுத்த சத்திய சபதத்தைக் காப்பதற்காக உயிரைத் துறக்கக்கூடிய படை வீரர்களை யார்தாம் குற்றங்கூறி ஏளனம் செய்வார்கள்?

**780. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து.**

நாட்டைக் காக்கும் அரசனும் அழுது கண்ணீர் விடும்படி ஒரு வீரனுடைய உயிர்விடப் பெற்றால், அப்படிப் பட்ட மரணம் கெஞ்சிக் கேட்டாயினும் அடையத்தக்கது.

# 79. நட்பு

***781. செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்***
***வினைக்கரிய யாவுள காப்பு.***

சினேகத்தைவிடத் தேடிச் செய்து கொள்ளவேண்டிய சிறப்புடையது வேறு என்ன இருக்கிறது, அதைப்போலக் காரியத்திற்குச் சிறப்பான பாதுகாப்பும் வேறு என்ன உண்டு?

***782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்***
***பின்நீர பேதையார் நட்பு.***

நல்லவர்களுடைய சினேகம் பிறைச் சந்திரனைப் போல் நாளுக்கு நாள் வளரும். மூடர்களுடைய சினேகம் சந்திரன் தேய்வதைப்போல் நாளுக்குநாள் குறைந்துவிடும்.

***783. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்***
***பண்புடை யாளர் தொடர்பு.***

(மேலும்,) அறிவு நிறைந்த நயமான ஒரு நூலைப் படிக்கப் படிக்க அதன் சிறப்பு அதிகமாகப் புலப்படுவது போல, நல்ல குணமுள்ளவர் களுடைய நட்புப் பழகப் பழக இன்பம் அதிகரிக்கும்.

***784. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்***
***மேற்சென்று இடித்தற் பொருட்டு.***

ஒருவரோடொருவர் நட்புக் கொள்வது இன்பமானவற்றைப் பேசிச் சிரித்து மகிழ்வதற்கு மட்டுமல்ல; ஒருவர் ஒரு குற்றம் செய்தால் மற்றவர் அதை எடுத்துக் காட்டி இடித்துத் திருத்துவதற்கேயாம்.

***785. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்***
***நட்பாம் கிழமை தரும்.***

(உண்மையான நட்பு ஒருவரை யொருவர் அடிக்கடி சந்தித்து, சல்லாபிப்பதனால் மட்டும் உண்டாகிவிடாது. பின் எதனால் என்றால்,) நட்புப் பொருந்துவது அடிக்கடி சந்தித்துப் பழகுவதைப் பொறுத்ததன்று. ஒத்த உணர்ச்சி இருந்தால் அதுவே நட்பின் உரிமைகளை உண்டாக்கும்.

***786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து***
***அகநக நட்பது நட்பு.***

(உணர்ச்சிகள் பொருந்தாமல் கூடிக் குலவுவதால் மட்டும் உண்டாகிற

உறவு நட்பாகாது.) முகமும் முகமும் மகிழ்ந்துவிடுவது மட்டும் நட்பாகிவிடாது. நெஞ்சமாகிய அகமும் அகமும் ஒத்து மகிழும்படி பொருந்துகின்ற உறவுதான் நட்பு.

***787. அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்***
***அல்லல் உழப்பதாம் நட்பு.***

(அப்படி உள்ளமும் உள்ளமும் ஒத்த நட்பின் தன்மை என்ன வென்றால்,) நண்பன் தீமை தரக்கூடிய வழிகளில் காரியம் செய்யும்போது (அவற்றினின்றும் அவனை விலகச் செய்து) நல்ல மார்க்கத்தில் திருப்புவதும், அவனுக்கு ஒரு துன்பம் வந்துவிட்டால் உடனிருந்து அத்துன்பத்தில் பங்கு கொள்வதுந்தான் நட்பு.

***788. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே***
***இடுக்கண் களைவதாம் நட்பு.***

(நல்ல நண்பன் துன்பக்காலத்தில் எவ்விதம் உதவுவான் என்றால்,) இடுப்பிலுள்ள ஆடை நழுவிவிட்ட ஒருவனுடைய கை அவனறியாமலும் உடனே ஆடையை அணைத்து மானம் காப்பதைப்போல, நண்பனுக்குத் துன்பம் வந்துவிட்டதை அறிந்த அக்கணமே அவன் அறியாமலும் தானே ஓடித் துன்பத்தை நீக்குவதுதான் நட்பாகும்.

***789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி***
***ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.***

(அப்படிப்பட்ட உதவிகளைச் சலிப்பின்றி அவசியம் ஏற்பட்ட போதெல்லாம் செய்வதே சிறந்த நட்பு.) சிநேகம் என்பதற்குச் சிறப்பான இருப்பிடம் எதுவென்றால், மனங் கோணாமல் அவசியமான போதெல்லாம் உதவிபுரிந்து, தாங்கி நிற்கும் தன்மைதான்.

***790. இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று***
***புனையினும் புல்லென்னும் நட்பு.***

(அப்படிப்பட்ட உயர்ந்த நண்பர்கள் தாம் செய்யும் உதவிகளை விளம்பரப்படுத்திக் கொள்ளமாட்டார்கள்.) இவர் எனக்கு இப்படிப்பட்ட அன்பர், நான் இவருக்கு இப்படிப்பட்ட அன்புடையவன் என்று சொல்லிக்கொண்டாலும் அது நட்பின் பெருமையைக் குறைத்துவிடும்.

# 80. நட்பாராய்தல்

**791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.**

சினேகத்தை அனுசரித்து நடந்துகொள்ளுகிறவர்களுக்கு ஒருவரைச் சினேகராகக் கொண்டபின் அவரை விட்டுவிடுவது என்பது முடியாத காரியம். அதனால் ஆராய்ந்தறியாமல் தீயவர்களுடன் நட்புக் கொள்வதை விடக் கெடுதியுண்டாக்குவது வேறில்லை.

**792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும்.**

(ஆகையினால்,) பலமுறை ஆராய்ந்து நண்பரைத் தேர்ந்தெடுக்காமல் செய்துகொள்ளும் தீய நட்பு ஒருவனுக்கு அவன் சாகிறவரைக்கும் துன்பம் தந்து கொண்டிருக்கும்.

**793. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.**

(ஆராய்ந்து நட்புக் கொள்வதென்றால், ஒருவனை நண்பனாக நம்பிவிடுவதற்கு முன்னால் அவனுடைய) நல்ல குணத்தையும், அவன் பிறந்த குடும்பத்தின் தன்மையையும், அவனுக்குள்ள குற்றங்களையும், அவன் எப்போதும் பழகி வருகிற சகவாசங்களையும் ஆராய்ந்து அறிந்துகொண்ட பிறகே நட்பாகக் கொள்ளவேண்டும்.

**794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.**

(மேற்சொன்ன எல்லாவற்றையும் ஆராய முடியா விட்டாலும்,) நல்ல குடும்பத்தில் பிறந்தவனாகவும் தன் மட்டில் பழிபாவங்களுக்கு அஞ்சி நடக்கிறவனாகவும் இருப்பவனை விலைகொடுத்தாயினும் நட்பாக்கிக் கொள்ளவேண்டும்.

**795. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.**

(இடித்துக்கூறி நல்லறிவு சொல்லக்கூடியவர்கள் நட்பு விரும்பத்தக்கது.) குற்றத்தை எடுத்துக்காட்டி (நம் குற்றத்தை நாமே உணர்ந்து) வருந்தும்படி நல்ல முறையில் பேசி நியாயவாதம் செய்து அறிவுறுத்த வல்லவர்களுடைய நட்பைத் தெரிந்தெடுத்துக்கொள்ளவேண்டும்.

**796. கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை**
**நீட்டி அளப்பதோர் கோல்.**

(உண்மையான நட்பைத் துன்பக் காலத்தில்தான் நன்றாக அளந்துவிட முடியும்.) துன்பக்காலத்தினாலும் ஒரு நன்மை உண்டு; நண்பர்களைச் சரியாக அளந்தறியத் துன்பக் காலந்தான் சரியான அளவுகோல்.

**797. ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்**
**கேண்மை ஒரீஇ விடல்.**

(அப்படி அளந்து பார்த்து அதில் தேறாமல் துன்பக் காலத்தில் உதவாத) மூடர்களுடைய உறவை நீக்கிவிடுவது ஒருவனுக்கு இலாபமுள்ள காரியம் எனப்படும்.

**798. உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க**
**அல்லற்கண் ஆற்றுப்பார் நட்பு.**

(அப்படி நீக்கப்பட்டவர்கள் அவர்களாகவே மறுபடியும் வந்தாலும் நண்பராக நம்பிவிடக் கூடாது.) மனதைக் குறுக்கக்கூடிய அற்பக் காரியங்களை நினைக்கவும் கூடாது. அதைப்போலத் துன்பக் காலத்தில் உதவாது போனவர்களுடைய நட்பை ஏற்றுக் கொள்ளக்கூடாது.

**799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை**
**உள்ளினும் உள்ளம் சுடும்.**

(ஏனென்றால்,) துன்பக் காலத்தில் கைவிட்டவர்களுடைய உறவு அழிவையே உண்டாக்கும். அவர்களைப் பற்றிக் குளிர்ச்சியான காலை நேரத்தில் நினைத்தாலும் மனம் கொதிப்படையும்.

**800. மருவுக மாசற்றார் கேண்மைஒன் றீத்தும்**
**ஒருவுக ஒப்பிலார் நட்பு.**

(ஆகையினால் நட்புக்களை ஆராய்ந்து பார்த்துக்) குற்றமற்றவர் களுடைய நட்பை விட்டுவிடாமல் அணைத்துக் கொள்ளவேண்டும்; பொருத்தமற்றவர்களுடைய நட்பை ஏதேனும் ஒருவிலைகொடுத்தாவது விலக்கிவிட வேண்டும்.

# 81. பழைமை

**801. பழைமை எனப்படுவது யாதெனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

பழைய நண்பர்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்றால், நீண்ட நாள் நட்பினால் உண்டான உரிமைகளைக் கெடுத்துவிடாமல் நடந்து கொள்ளவேண்டும்.

**802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு**
**உப்பாதல் சான்றோர் கடன்.**

(ஏனெனில்,) நட்புக்கு அடையாளம் ஒருவரிடம் ஒருவர் கொண்டாடும் உரிமை. அந்த உரிமை கெட்டுப்போகாமல் தக்கபடி நடந்துகொள்ள வேண்டியது நல்லவர்களுடைய கடமை.

**803. பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை**
**செய்தாங்கு அமையாக் கடை.**

பழைமை பற்றி ஒருவர் இன்னொருவருக்காக ஒரு காரியத்தைச் செய்துவிட்டால் அதை அப்படியே ஒத்துக்கொள்வது தான் முறை. இல்லாவிட்டால் பழகிய நட்பு என்பதனால் என்ன பயன்?

**804. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்**
**கேளாது நட்டார் செயின்.**

உரிமையினால் பழைய நண்பர்கள் ஒரு காரியத்தைக் கேளாமல் செய்து, அக்காரியம் நன்றாக முடிந்துவிட்டால் கேளாது செய்ததில் மகிழ்ச்சியடைவார்கள் (என்பது சகசந்தான்).

**805. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க**
**நோதக்க நட்டார் செயின்.**

பழைய நண்பர்கள் உரிமை கொண்டு கேளாமல் செய்த காரியம் துன்பமுண்டாக்கத் தக்கதாகி விட்டால் அதை அறியாத்தனத்தால் செய்துவிட்டதாகக் கொள்வது ஒன்றொடல்லாமல், அவர்கள் மிகுந்த உரிமையுடையவர்கள் என்பதையும் கருதிப் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

**806. எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்**
**தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.**

(ஏனெனில்,) பழைய நட்பு என்ற நியாயத்தின் வரம்புக்கு உட்பட்டவர்கள் பழைய நண்பர்களால் தமக்கு நஷ்டம் வந்துவிட்டாலும் அவர்களை விட்டுவிட மாட்டார்கள்.

**807. அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்.**

பழைமை பற்றிய நண்பர்கள் வேண்டுமென்றே அழிவு தரக்கூடிய காரியத்தைச் செய்துவிட்டாலும் வழிவழியாக அன்பு பற்றித் தொடர்ந்து வரும் நட்பை மதிக்கிறவர்கள் அவர்களிடம் அன்பற்று நடந்துகொள்ள மாட்டார்கள்.

**808. கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாளிழுக்கம் நட்டார் செயின்.**

(பழைமை நட்பை மதிக்கிறவர்கள் தம்முடைய நண்பர்களைப்பற்றி யாராவது குற்றம் சொன்னாலும் காது கொடுக்க மாட்டார்கள்.) பழகிய நண்பர்களைப் பற்றிப் பிறர் குற்றங்கூறினாலும் கேட்க விரும்பாத நட்புக் குணத்திற் சிறந்தவர்கள் தம் நண்பர்கள் தவறு செய்துவிட்டால் அதைத் தம்முடைய பொல்லாத காலம் என்று பொறுத்துக் கொள்வார்கள்.

**809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையும் உலகு.**

(அதனால்,) உறவு விடாமல் பல காலமாகப் பழகிவரும் நண்பர்களுடைய தொடர்பை, அவர்கள் குற்றம் செய்து விட்டாலும் விட்டுவிடாமல் நட்புப் பாராட்டுகிறவர்களை உலகத்தார் பாராட்டுவார்கள்.

**810. விழையார் விழையப் படுப பழையார்கண்**
**பண்பின் தலைப்பிரியா தார்.**

பழைய நண்பர்கள் குற்றம் செய்துவிட்டாலும், அவர்களிடத்தில் எப்போதும் போலவே அன்பு விடாமல் நடந்துகொள்பவர்கள் பகைவர்களாலும் பாராட்டப்படுவார்கள்.

# 82. தீ நட்பு

**811. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.**

கள்ளைக் குடிப்பதுபோல் களிப்புண்டாக்கக் கூடியதாக இருக்குமானாலும் நல்ல குணம் இல்லாதவர்களுடைய உறவை வளரவிடுவதைக் காட்டிலும் தளர விடுவது நல்லது.

**812. உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.**

(பண்பில்லாதவர் இலக்கணம் இது.) ஒரு நன்மை வேண்டிய போது நட்புக் கொண்டாட வந்து அது தீர்ந்தவுடன் விட்டுப் போய் விடுகிற பொருந்தாதவர்களுடைய நட்பை அடைந்தாலென்ன? இழந்தாலென்ன?

**813. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.**

(ஏனெனில்,) இலாபத்தைக் கருதி நண்பர்களைப்போல் நடிக்கிறவர்கள் பணத்தைக் கருதி காதலிபோல் நடிக்கிற வேசிகளுக்கும், திருடுவதற்காக யோக்கியர்களைப்போல் காணப்படுகிற கள்வருக்கும் ஒப்பாவார்கள்.

**814. அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை.**

(சமயத்துக்கு உதவாதவரும் விலக்கப்பட வேண்டியவர் களாவர்.) யுத்தக்களத்தில் ஓட்டமற்று நின்றுவிடுகிற பயிற்சியில்லாத குதிரையைப் போல் சமயத்தில் அபாயத்தில் விட்டுவிடுகிற நண்பர் பலபேர் உடனிருப்பதை விடத் தனியே இருப்பதே நல்லது.

**815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.**

பாதுகாப்புக்குத் துணை வருவதாக வாக்குறுதி செய்திருந்தும் வராமல் இருந்துவிட்ட இழிகுணத்தாரின் அற்ப சகவாசத்தை அடைவதைவிட அடையாமல் இருப்பதே நல்லது.

**816. பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்.**

(அறிவில்லாத முட்டாள்களின் உறவும் தீயது.) மூடனுக்கு நெருங்கிய நண்பன் என்று சொல்லிக் கொள்வதைவிட, அறிவாளியின் மனத் தாபமுடையவனாக இருப்பது கோடி மடங்கு நல்லது.

**817. நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும்.**

(பழிப்புக்கிடமான வாழ்க்கையுடையவர்களுடைய நட்பும் மிகவும் தீமையானது.) நிந்தனைக்குரிய வகையைச் சேர்ந்தவர்களுடைய நட்பை விடப் பகைவர்களால் பத்துக்கோடி மடங்கு நன்மை உண்டு.

**818. ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.**

(தெரியாத காரியத்தைத் தெரிந்தவர்கள்போல் வந்து கெடுத்துவிடக் கூடியவர்களுடைய நட்பும் சிறுகச் சிறுக விட்டுப்போவதே நல்லது.) முடியக்கூடிய எளிய காரியத்தையும் முடியாமல் செய்துவிடக்கூடிய திறமையற்றவர்களுடைய உறவைப் பேசாமல் விட்டுவிடவேண்டும்.

**819. கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.**

(சொல்வது ஒன்று செய்வது வேறொன்றாக உள்ளவர்களுடைய உறவு மிகவும் தீய நட்பு.) செய்வது ஒன்று சொல்லுவது வேறு என்ற நடத்தை உள்ளவர்களுடைய உறவு கனவிற்கூடத் துன்பமுண்டாக்கும்.

**820. எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு.**

(மிகவும் குறிப்பாக விலக்க வேண்டிய தீ நட்பு இதுதான்;) வீட்டுக்குள் தனித்திருக்கும்போது கொஞ்சிக் குலவிப் புகழ்ந்துவிட்டு வெளியே போய்த் தூற்றுகிறவர்களைப் பக்கத்திற்கூட நெருங்க விடக்கூடாது.

## 83. கூடா நட்பு

**821. சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை**
**நேரா நிரந்தவர் நட்பு.**

பகைவராக இருந்தவர்கள் திடீரென்று கலந்து நட்பாட வந்தால், அது தக்க சமயம் பார்த்து நம்மை நசுக்குவதற்குப் பட்டடைக் கல்லென்று எச்சரிக்கை கொள்ள வேண்டும்.

**822. இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்**
**மனம்போல வேறு படும்.**

(ஏனெனில்,) நண்பரைப்போல நடிக்கும் நண்பரல்லாத பகைவர் நட்புக் கொண்டாடுவது, மனைவியைப் போலவே நடிக்கும் மனைவியல்லாத வேசியின் மனம்போல் வேறு நோக்கமுள்ளதாக இருக்கும்.

**823. பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்**
**ஆகுதல் மாணார்க்கு அரிது.**

மகிழ்ச்சியுண்டாகும்படி பல நல்ல வார்த்தைகளைப் பேசி உறவாடினாலும் (திடீரென்று நட்புக் கொண்டாட வரும்) பகைவர்களுடைய எண்ணம் நல்லதாக இருக்க முடியாது என்பதை ஊகிக்க வேண்டும்.

**824. முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா**
**வஞ்சரை அஞ்சப் படும்.**

மனத்தில் தீங்கு செய்வதையே நினைத்துக்கொண்டு முகத்தளவில் இனிமையாகச் சிரிக்கின்ற கபடமுள்ள பகைவர்களை அச்சமின்றி நட்பாகக் கொண்டுவிடக் கூடாது.

**825. மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்**
**சொல்லினால் தேறற்பாற்று அன்று.**

(அன்றியும்,) மனத்திற்கு ஒவ்வாதவராகிய பகைவரை அவர்கள் எவ்வளவு நல்ல வார்த்தைகளைப் பேசினாலும் அந்தப் பேச்சைக்கொண்டு நம்பிவிடக்கூடாது.

**826. நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்**
**ஒல்லை உணரப் படும்.**

(சிறிது கவனம் செலுத்தினால் பகைவர்கள் இனிமையாகப் பேசி நட்புக் கொள்ள வந்த நோக்கத்தைக் கண்டு கொள்ளலாம்.) நண்பர்களைப்போல நன்மைகளையே பேசினாலும் பகைவர்களுடைய பேச்சின் உட்கருத்தை எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

**827. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்**
**தீங்கு குறித்தமை யான்.**

வில் வணங்குவது பாணத்தைப் பாய்ச்சித் தீங்கு செய்வதற்கே. அதைப்போல் பகைவர்கள் வணங்கிப் பேசுவது தீமை செய்யக் கருதியே. ஆதலால், அவர்கள் வணக்கத்தை நம்பிவிடக்கூடாது.

**828. தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்**
**அழுதகண் ணீரும் அனைத்து.**

(அவர்களுடைய சொல் வணக்கமுள்ளதாக இருப்பது மட்டு மல்லாமல் அவர்களுடைய உடலும் வணங்கிக் கைகளும் கும்பிடும்; கண்ணீரும் விடுவார்கள். ஆனால்,) பகைவர்கள் கும்பிடுவதற்குக் கூப்புகின்ற கைகளுக்குள்ளேயும் கொலைக்கருவி மறைத்து வைக்கப் பட்டிருக்கும். அவர்கள் அழுது வடிக்கின்ற கண்ணீரிலும் கெட்ட எண்ணம் மறைந்திருக்கும்.

**829. மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து**
**நட்பினுள் சாப்புல்லற் பாற்று.**

(அதுமட்டுமல்ல. அவர்கள் தம்மையே இகழ்ந்து நம்மைப் புகழ்ந்து பேசுவார்கள்.) தம்மைத் தாமே அதிகப்படியாக இகழ்ந்து கொண்டு நம்மைப் புகழ்ந்து பேசுகின்ற அவ்வஞ்சகரை அவர்களுடைய பேச்சில் மயங்கி மகிழ்ந்து நட்பாக நம்பிவிடுவது தற்கொலை செய்துகொள்வதற்குச் சமானம்.

**830. பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு**
**அகநட்பு ஒரீஇ விடல்.**

பகைவன் நட்புக் கொண்டாட வருகிற சமயங்களில் முகத்தளவில் மட்டும் நட்புக் கொண்டாடி, மன நட்பாக நம்பிவிடுவதை நீக்க வேண்டும்.

# 84. பேதைமை

**831. *பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு***
***ஊதியம் போக விடல்.***

முட்டாள்தனம் என்பது எதுவென்றால், தீமையைப் பிடித்துக் கொண்டு நன்மையை விட்டுவிடுவது.

**832. *பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை***
***கையல்ல தன்கட் செயல்.***

முட்டாள்தனங்களிளெல்லாம் அதிக முட்டாள்தனம் எதுவென்றால், தீமையான காரியத்திலேயே அதிக ஆசை கொண்டு நடந்துகொள்வது.

**833. *நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்***
***பேணாமை பேதை தொழில்.***

(முட்டாள்தனத்தின் அடையாளங்கள் இவைதாம்:) பழி பாவங் களுக்குக் கூசாமை. நன்மை தீமைகளை ஆராயாமை, அன்பில்லாமை, எந்தக் கொள்கையையும் கடைப்பிடித்துக் காரியம் செய்யாமை இவை முட்டாள் நடத்தைகள்.

**834 *ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்***
***பேதையின் பேதையார் இல்.***

பல நூல்களைப் படித்திருந்தும், படித்ததை உணர்ந்திருந்தும், படித்த அறிவைப் பிறருக்கு உபதேசம் செய்தும், தான் அக்கல்வியறிவுக்கு ஏற்றபடி அடங்கி நடக்காத முட்டாளைவிடப் பெரிய முட்டாள் யாருமில்லை.

**835. *ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்***
***தான்புக் கழுந்தும் அளறு.***

(முட்டாள்தனம் எந்தப் பாவத்தையும் கூசாமல் செய்து விடும். ஆகையால்,) முட்டாள்தனம் உள்ளவன் இனி வரும் ஏழு பிறவிகளிலும் அனுபவிக்க வேண்டிய நரக வேதனைகளை இந்த ஒரு பிறப்பிலேயே உண்டாக்கிக் கொள்வான்.

**836. *பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்***
***பேதை வினைமேற் கொளின்.***

முட்டாள், செய்யத் தெரியாத காரியத்தைச் செய்யத் தெரிந்ததாக மேற்கொள்வான். அதனால் அவன் செய்யத் தெரியும் என்று சொன்னது

பொய்யாவது மட்டுமல்லாமல், அந்தக் காரியம் மற்றவர்களும் பின் சரிசெய்ய முடியாதபடி சிக்குண்டாகிக் கெட்டுப்போகும்.

**837. ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை**
**பெருஞ்செல்வம் உற்றக் கடை.**

முட்டாள் ஒருவன் பெருஞ்செல்வத்தை அடைந்தாலும் அதனால் அவனுக்கு அன்னியமானவர்களே வயிறார உண்ண, உறவினர்களும் நண்பர்களும் பட்டினி கிடப்பார்கள்.

**838. மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்**
**கையொன்று உடைமை பெறின்.**

(அது மட்டுமல்ல.) முட்டாள் கையில் பொருளும் கிடைத்துவிட்டால் அது பைத்தியம் பிடித்த ஒருவன் கள்ளையும் குடித்துவிட்டதுபோல (ஆடிப் பாடித் திரிந்து எதை வேண்டுமானாலும் செய்துவிடும்.)

**839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்**
**பீழை தருவதொன்று இல்.**

(அந்த வெறி பிடித்த செயல்கள் சிற்சில சமயங்களில் வெகு இனிமையானவையாகவும் இருக்கும். ஆனாலும்,) முட்டாள்களின் உறவினால் மிகுந்த இன்பங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிற சமயங்களிலும் அவர்களை விட்டுப்பிரிவது துன்பம் தரக்கூடியதாக இருக்காது.

**840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல்.**

(நல்லவர்கள் முட்டாளின் சகவாசத்தை அசுத்தமாகக் கருதுவர்.) அறிவாளிகள் கூடியுள்ள சபையில் ஒரு முட்டாள் புகுவது, கழுவாமல் அசுத்தமுள்ள கால்களைச் சுத்தமான ஆலயத்துக்குள் வைப்பதைப் போன்றது.

# 85. புல்லறிவாண்மை

***841.*** ***அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை***
***இன்மையா வையாது உலகு.***

*தரித்திரத்தில் தரித்திரம் அறிவில்லாத தரித்திரமே. மற்ற எது இல்லாத தரித்திரத்தையும் உலகம் குற்றமாக இகழ்வதில்லை.*

***842.*** ***அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்***
***இல்லை பெறுவான் தவம்.***

*அறிவில்லாதவன் மனமார ஒருவனுக்கு ஒன்றைக் கொடுத்து விட்டால், அது வாங்கிக் கொண்டவனுடைய புண்ணியப் பலனேயன்றி வேறொன்றுமல்லை.*

***843.*** ***அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை***
***செறுவார்க்கும் செய்தல் அரிது.***

*அறிவில்லாதவர்கள் தாமே தமக்குச் செய்துகொள்ளும் துன்பத்தைப் போலத் தாம் தம்முடைய பகைவர்களுக்குக் கூடச் செய்ய முடியாது.*

***844.*** ***வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை***
***உடையம்யாம் என்னும் செருக்கு.***

*(புல்லறிவாண்மை என்னும்) அறிவின்மை எதுவென்றால், எல்லாம் தெரிந்ததாக எண்ணிக்கொள்ளும் அகங்காரம்.*

***845.*** ***கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற***
***வல்லதூஉம் ஐயம் தரும்.***

*புல்லறிவாளன் தனக்குப் பயிற்சியில்லாத காரியங்களையும் பயிற்சி பெற்றவன்போல் மேற்கொண்டு கெடுத்து விடுவான். அதனால் அவன் நன்றாகப் பயின்று திறமையோடு செய்யத் தெரிந்துள்ள வேலையிலும் அவனைப் பிறர் சந்தேகிப்பார்கள்.*

***846.*** ***அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்***
***குற்றம் மறையா வழி.***

*புல்லறிவாளன் தனக்குப் பழக்கமில்லாத வேலையைப் பழகி யிருப்பதாகச் சொல்லிவிட்ட பொய்யை மறைக்க முயலும் மாதிரியே, அவனிடத்திலுள்ள மற்ற எல்லாக் குற்றங்களும் வெளியாகிவிட வழி உண்டாகும்.*

**847. அருமறை சோரும் அறிவிலான் செய்யும்**
**பெருமிறை தானே தனக்கு.**

(அற்ப புத்திக்காரன் சிறந்த அறவுரைகளையும் அலட்சியம் செய்து, தன்னுடைய அற்ப அறிவே அதைவிடச் சிறந்ததாகப் பெருமை பேசிக் கொள்வான்.) புல்லறிவாளன் தர்மசாத்திரங்களில் சொல்லப்படும் மெய்யறிவு, போதனைகளை அழித்துப் பேசி அதற்காகத் தன்னைத்தானே புகழ்ந்து கொள்வான்.

**848. ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்**
**போஒம் அளவுமோர் நோய்.**

(புல்லறிவாளன்,) தெரிந்தவர்கள் சொன்னாலும் கேட்க மாட்டான்; தானாகவும் தெரிந்துகொள்ளமாட்டான். அவனுடைய உயிர் போகும் வரை அவனுக்கும் பிறருக்கும் துன்பமுண்டாக்கிக் கொண்டேயிருப்பான்.

**849. காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்**
**கண்டானாம் தான்கண்ட வாறு.**

(அற்ப புத்திக்காரன் ஒன்றும் அறியாத நல்லவர்களையும் கெடுத்து வைப்பான்.) நல்லறிவுகளைத் தானே அறியாதவனாகிய புல்லறிவாளன் அறியாத ஒருவனுக்கு அறிவு சொல்லுவது எப்படி முடியுமென்றால், ஒன்றும் அறியாத அந்த நிரபராதியும் இந்தப் புல்லறிவாளனைப் போன்ற அற்ப புத்திக்காரனாகவே மாறிவிடுவான்.

**850. உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து**
**அலகையா வைக்கப் படும்.**

(ஒன்றும் அறியாத நல்லவர்களையும் கெடுப்பதற்காகவே, உலகத்தில் அறிவிற் சிறந்தவர்கள் அனுபவித்துச் சொல்லி உலகத்தார் நம்புகிற உண்மைகளையெல்லாம் புல்லறிவாளன் மறுப்பான். அதனால்,) புல்லறிவாளன் அறிவாளிகள் உண்மையென்று சொன்னதையெல்லாம் இல்லையென்று மறுப்பான். அவனை, உலகத்தை மருட்டி வசப்படுத்துகிற ஒரு பிசாசு என்றே சொல்லவேண்டும்.

## 86. இகல்

***851. இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.***

(இகல் என்பது வெளியில் பகைமை காட்டாமல் மனத்தில் வைத்திருக்கிற மனத்தாபமாகிய பகைமைக் குணம்.) குரோதம் என்பது எல்லா மனிதர்களுக்கும் 'விரோதம்' என்கிற அன்பின்மையை உண்டாக்கி அதை வளரச் செய்கிற ஒரு வியாதி.

***852. பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.***

(வெளிப்படையான பகைமையை விடக் குரோதம் கண்ணியக் குறைவானது.) பகைமையினால் தண்டிக்க வேண்டி ஒரு தீமையைச் செய்தாலும் செய்யலாம். ஆனால் மனத்தில் குரோதம் வைத்துத் தீமை செய்யாதிருக்கும் குணம் மிகவும் சிறந்தது.

***853. இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும்.***

(மனத்தில் குரோதம் உண்டாகிவிட்டால் நீக்குவது கடினந்தான். நீக்கிவிட்டால்,) தீர்க்க முடியாத வியாதியைப் போன்ற குரோதத்தை நீக்கிவிட்டால், அது நிச்சயமாகக் குற்றமற்ற புகழுடைய நல்வாழ்வை உண்டாக்கும்.

***854. இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.***

(அது மட்டுமன்றித்) துன்பங்களிலெல்லாம் கொடிய துன்பமாகிய மனத்தாபம் என்ற துன்பத்தை நீக்கிவிட்டால் அதுவே இன்பங்களி லெல்லாம் சிறந்த இன்பமாகும்.

***855. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர்.***

(மனத்தாபம் உண்டாகி அதைப் பின் நீக்கவேண்டு மென்பதைவிட) மனத்தாபத்துக்கு மனத்தில் இடமே கொடுக்காமல் அதை விலக்கி நடந்துகொள்ளும் வல்லமையுள்ளவர்களுக்குக் கோபம் உண்டாக்க யாராலும் முடியாது.

**856. இகலின் மிகலினிது என்பவன் வாழ்க்கை**
**தகவலும் கெடலும் நணித்து.**

(மனத்தாபத்துக்கு இடங்கொடுப்பதே கோபத்துக்குக் காரணம். அதனால்,) மனத்தாபத்தை அடக்காமல் அதை மீறவிடுவதனால் உண்டாகிற கோபத்தைப் பாராட்டுகிறவ னுடைய வாழ்க்கை விரைவில் துன்பமும் நாசமும் அடைந்துவிடும்.

**857. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்**
**இன்னா அறிவி னவர்.**

(ஏனென்றால்,) மனத்தாபம் கொண்டுவிட்டதனால் அறிவு கெட்டுப் போனவர்கள் அந்த மனத்தாபம் மிஞ்சும்போது கோபம் வந்துவிடுவதனால் எந்த விஷயத்திலும் உண்மையை அறிய முடியாதவர்களாகி விடுகிறார்கள்.

**858. இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை**
**மிகலூக்கின் ஊக்குமாம் கேடு.**

(ஆகையினால்,) மனத்தாபத்துக்கு மனத்தில் இடங் கொடுக்காமல் ஒதுக்கிவிடுவதுதான் வல்லமை. அதைமீற விட்டுக் கோபங்கொள்வதனால் கேடுண்டாவது நிச்சயம்.

**859. இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை**
**மிகல்காணும் கேடு தரற்கு.**

(நன்மை வருவதோ தீமை வருவதோ இந்தக் குரோத மனப்பான்மை இல்லாமையையும் இருப்பதையும் பொறுத்தது.) ஒருவனுக்கு நல்வாழ்வு வருவது அவனிடத்தில் குரோத புத்தி இல்லாத காலத்தில்தான்; கேடு வரும்போது அது மிகுந்திருக்கும்.

**860. இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்**
**நன்னயம் என்னும் செருக்கு.**

(சுருங்கச்சொன்னால்,) எல்லாத் துன்பங்களும் உண்டாவது குரோதத்தால்தான். எல்லா நல்ல பலன்களையும் உண்டாக்கும் பெருமை வருவது நட்புக் குணத்தால்தான்.

# 87. பகைமாட்சி

**861. வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா**
**மெலியார்மேல் மேக பகை.**

(தம்மினும் வலிமை குறைந்தவர்களைத் துன்புறுத்துகிறவனுக்குப் பகைவர்கள் அதிகமாவார்கள். அதனால்) தம்மைவிட மெலிந்தவர் களிடத்தில் தமக்குள்ள பகைமையைக் கொண்டு செலுத்தாமல் தம்மினும் வலிமை மிகுந்தவர்களாகத் தம்மைத் தாக்க வருகிறவர்களை எதிர்த்தடிக்கும் வலிமையை வளர்த்துக் கொள்ளவேண்டும்.

**862. அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்**
**என்பரியும் ஏதிலான் துப்பு.**

அன்பில்லாதவன் துணையில்லாதவனாகவும் தானே வெல்லக்கூடிய திறமையற்றவனாகவும் மாறிவிடுவதால் பலமுள்ள பகைவர்களை எப்படி எதிர்த்து நிற்க முடியும்?

**863. அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்**
**தஞ்சம் எளியன் பகைக்கு.**

(தம்மினும் எளியாரைத் துன்புறுத்துவது மட்டுமன்றி பகைவர் களுக்கும் எளியவனாக்கிவிடும் பிற குற்றங்கள் என்னவெனில்,) அச்சமுள்ளவனாகவும், சம யோசித அறிவில்லாதவனாகவும், நிதானமற்றவ னாகவும், கொடைமனம் இல்லாதவனாகவும் உள்ளவன் பகைவர்களிடம் அடிபணிந்து விடவேண்டிய மிக்க பலவீனன்.

**864. நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்**
**யாங்கணும் யார்க்கும் எளிது.**

(மேலும்,) எப்போதும் கோபமுள்ளவனாகவும் சொல்லிலும் செயலிலும் அளவு கடந்த பதற்றமுள்ளவனாகவும் இருப்பவன் எப்போதும் எந்த இடத்திலும் யாருக்கும் தோற்றுப்போகக்கூடிய பலவீனம் உள்ளவன்.

**865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்**
**பண்பிலன் பற்றார்க்கு இனிது.**

(வென்று விட்ட பகைவர்கள்தாம் ஒரு நல்ல காரியத்தை முடித்து விட்டதாக மகிழ்ச்சி கொள்ளும்படியான குற்றமுள்ளவன் இலக்கணம்:) நீதிநெறி முறைகளை மதிக்காதவனாகவும், நியாயத்துக்கு ஒத்த

காரியங்களைச் செய்யாதவனாகவும், பழிபாவங்களுக்கு அஞ்சாதவனாகவும், நல்ல குணமில்லாதவனாகவும் உள்ளவனைத் தோற்கடிப்பதில் அவனுடைய பகைவர்கள் மகிழ்ச்சி கொள்வார்கள்.

**866. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்**
**பேணாமை பேணப் படும்.**

கண்மூடித்தனமாகக் காரணமின்றிக் கோபிக்கிறவனும் மிதமிஞ்சிய காம இச்சை உள்ளவனும் 'பகைமை' என்ற தீமையினால் கொண்டாடப் படுகிறார்கள்.

**867. கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து**
**மாணாத செய்வான் பகை.**

மிகவும் நெருங்கியவனாக இருந்துகொண்டே கெடுதி செய்கிற துரோகியைப் பொருட் செலவு செய்தாகிலும் பகைவனாக்கி வெல்ல வேண்டும் (என்று யாரும் நினைப்பார்கள்).

**868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு**
**இனனிலனாம் ஏமாப்பு உடைத்து.**

குணமில்லாதிருப்பதோடு குற்றங்கள் அதிகமாக உள்ளவனாக இருந்தால் அவனுக்குத் துணைவர்களே இருக்க மாட்டார்கள். அதுதான் பகைவர்களுக்கு எல்லையற்ற இன்பமுண்டாக்கும்.

**869. செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா**
**அஞ்சும் பகைவர்ப் பெறின்.**

நல்லறிவும் இல்லாமல் அச்சமும் உள்ளவர்கள் கிடைத்தால் பகைவர்களுக்கு எல்லையற்ற இன்பமுண்டாகும்.

**870. கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்**
**ஒல்லானை ஒல்லாது ஒளி.**

(சுருக்கமாக,) பகைவர்களை வெல்லும் முறைகளைக் கற்றுக் கொள்ளாதவனாகவும், உடனிருப்பவர்கள் விலகிவிடும்படி எந்நேரமும் கோபிக்கிறவனாகவும், துணைவர்களைத் தேடிக் கொள்ளவும் செலவு செய்யவும் மனம் வராதவனாகவும் உள்ளவனுக்கு ஒருநாளும் வெற்றி கிடைக்காது.

# 88. பகைத்திறம் தெரிதல்

**871. பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்**
**நகையேயும் வேண்டாற்பாற்று அன்று.**

(தீமை வராவிட்டாலும் பகையினால் நன்மை வரவே முடியாது. அதனால்,) பகை என்கிற நன்மையே இல்லாத அது, விளையாட்டாகக்கூட விரும்பத்தக்கதல்ல.

**872. வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க**
**சொல்லே ருழவர் பகை.**

(பகைமையை விலக்கவே வேண்டும். முக்கியமாக,) வில்லேந்திப் போர் புரியும் படைவீரனுடன் பகைத்துக் கொண்டாலும், செல்வாக்குடைய அறிஞர்களுடன் பகைத்துக் கொள்ளக்கூடாது.

**873. ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்**
**பல்லார் பகைகொள் பவன்.**

(வில்லேருழவர் பகையானாலும்,) தனியாக இருந்து கொண்டு பலபேரைப் பகைத்துக் கொள்ளுகிறவன் பைத்தியக்காரனைவிடப் புத்தி கெட்டுப்போனவன்.

**874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்**
**தகைமைக்கண் தங்கிற்று உலகு.**

(பகைவரே இல்லாதிருப்பதுதான் நல்லது. அது முடியாமற் பிறர் தம்மீது பகைமை பாராட்டினாலும்,) பகைவரையும் நண்பராக்கிக் கொண்டு நடந்துகொள்ளும் குணமுள்ளவனுடைய பெருந்தகைமையில் தான் உலக நலம் அடங்கியிருக்கிறது.

**875. தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்**
**இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.**

(இது எல்லாருக்கும் நல்ல குணம். முக்கியமாகத் துணைப்பலம் இல்லாமல் தனியனாக இருப்பவன் கவனிக்க வேண்டியது.) துணை வலிமை இல்லாமல் தனியாக இருக்கிற ஒருவன், போர் மூண்டுவிட்டால் துணைவர்களையாவது தேடிக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பகைவர்களையேனும் நட்பாக்கிக் கொள்ளச் சமாதானம் செய்துகொள்ள வேண்டும்.

***876. தேறினும் தேறா விடினும் அழிவின்கண்***
***தேறான் பகாஅன் விடல்.***

*(அதையும் சண்டை ஆரம்பிக்கும் முன்னால் செய்ய வேண்டும்.) பகைவனை நண்பனாக்கிக் கொள்வதா அல்லவா என்பதைப் போர் மூண்டு சேதமுண்டானால் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணுவதை விட்டுவிட வேண்டும்.*

***877. நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க***
***மென்மை பகைவ ரகத்து.***

*(அதனுடன் தம்முடைய பலவீனத்தைப் பிறர் அறியவிடக்கூடாது.) ஒருவன் ஏழையாகிவிட்டதை அதை அறியாதவர்களிடத்தில் சொல்லிக் கொள்ளக்கூடாது. அதைப் போல் தன் பலவீனத்தைப் பகைவர்களிடம் காட்டிவிடக் கூடாது.*

***878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்***
***பகைவர்கண் பட்ட செருக்கு.***

*(ஆதலால், பகைவர்களால் துன்பம் அடையாமல் இருக்க வேண்டுமானால் யுத்தம் வருமுன்னாலேயே மேலே சொல்லப்பட்ட முறையில்) தனக்குள்ள பகைவரின் வகையை அறிந்து அதற்கிணங்கத் தன்னைப் பலப்படுத்திக் கொண்டு தற்காப்புக்கான காரியங்களைச் செய்து கொண்டால் பகைவர்களுடைய ஆணவம் அழிந்துவிடும்.*

***879. இளைதாக முள்மரம் கொல்க களையுநர்***
***கைகொல்லும் காழ்த்த விடத்து.***

*(பகையை முற்றவிடக்கூடாது. ஆரம்பத்திலேயே வெற்றியினாலோ நட்பினாலோ பகை இல்லாமற் செய்துவிட வேண்டும்.) முள்மரத்தை அது சிறு செடியாக இருக்கும்போதே பிடுங்கி அழித்துவிட வேண்டும். முதிர்ந்து மரமாகி விட்டபின் அதை வெட்டப்போகிறவர்கள் கையையும் அது வெட்டிவிடும்.*

***880. உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்***
***செம்மல் சிதைக்கலா தார்.***

*(பகையை விட்டுவைக்கக்கூடாது. எந்தவிதத்திலாவது தீர்த்துவிட வேண்டும். ஏனெனில்,) பகைவர்களுடைய கொற்றத்தை அடக்காதவர்கள் நிம்மதியாக வாழமுடியாது.*

# 89. உட்பகை

***881.*** ***நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்***
***இன்னாவாம் இன்னா செயின்.***

வசிக்கின்ற சொந்த இடமும் பழக்கமான தண்ணீரும்கூட நோயுண்டாக்குமானால் அவை விலக்க வேண்டிய தீமைகளே. அதைப்போல் உடனிருக்கும் உறவினர்களின் நடத்தையும் தீமை கருதியதாக இருந்தால் அவர்களும் விலக்கிவிட வேண்டிய தீயவர்களே.

***882.*** ***வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக***
***கேள்போல் பகைவர் தொடர்பு.***

வாளாயுதம்போல் (நேராகப் போரிடும் போதன்றி மற்ற காலத்தில் துன்பம் செய்ய முடியாத) புறப்பகைவர்களுக்குப் பயந்துகொண்டேயிருக்க வேண்டியதில்லை. ஆனால் நண்பனைப் போல் உடனிருந்துகொண்டு துன்பம் செய்யக் கருதுகின்ற உட்பகைவர்களைப் பற்றி எப்போதும் அச்சத்துடன் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

***883.*** ***உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து***
***மட்பகையின் மாணத் தெறும்.***

(ஆகையினால்,) உட்பகையை நீக்கித் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும். இல்லாவிடில் குயவன் மண்பாண்டத்தை அறுத்தெடுப்பதைப் போல் ஏமாந்த சமயத்தில் உட்பகை ஒருவனை அடியோடு அறுத்துவிடும்.

***884.*** ***மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா***
***ஏதம் பலவுந் தரும்.***

மனம் பொருந்தாதனால் உடனிருப்பவன் உட்பகை கொண்டு விட்டாலும், அது தனக்குத் துணைப்பலம் குறைந்து போகும்படியான பல துன்பங்களையும் உண்டாக்கும்.

***885.*** ***உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்***
***ஏதம் பலவுந் தரும்.***

உறவு முறை உள்ளவனாக (எந்த நேரத்திலும் தன் வீட்டுக்குள் வரப்போக) இருக்கக் கூடியவன் உட்பகையாகி விட்டால உயிருக்கே அபாயம் வரக்கூடிய துன்பங்களும் உண்டாகிவிடும்.

***886. ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்***
***பொன்றாமை ஒன்றல் அரிது.***

ஒன்றேபோல் சேர்ந்து காரியம் செய்ய வேண்டியவர்களுக்குள் உட்பகை தோன்றிவிட்டால் அழிவு வராமல் இருக்கவே முடியாது.

***887. செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே***
***உட்பகை உற்ற குடி.***

(நாட்டுக்கு மட்டுமல்ல; வீட்டுக்கும் அப்படியே.) உட்பகை உண்டாகிவிட்ட ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் ஒரே வீட்டிலிருந்தாலும், பாண்டங்கள் ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கப்பட்டிருந்தாலும் அவை ஒன்றோடொன்று ஒட்டாமலிருப்பதைப்போல் குடும்பத்தில் ஒற்றுமை போய்விடும்.

***888. அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது***
***உட்பகை உற்ற குடி.***

உட்பகை தோன்றிவிட்ட குடித்தனம் எவ்வளவு வலிமையுள்ள தானாலும் அரத்தால் அராவப்பட்ட இரும்பைப் போல் (குடும்பத்தில் உள்ளவர்கள்) ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக்கொள்ளச் சிறுகச் சிறுகத் தேய்ந்து முடிந்துபோகும்.

***889. எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்***
***உட்பகை உள்ளதாம் கேடு.***

(உட்பகை என்ற மன விகாரம் எவ்வளவு சிறியதாக உண்டானாலும் உடனே நீக்க வேண்டும் இல்லாவிடில்,) எள்ளின் பிளவுபோல வெகு சிறியதாக இருந்தாலும் உட்பகை நாசம் உண்டாக்கிவிடும்.

***890. உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்***
***பாம்போடு உடனுறைந் தற்று.***

(ஆகையினால்,) மனப்பொருத்தம் இல்லாத உட்பகை உள்ளவர் களுடன் சேர்ந்திருப்பது சிறு குடிசைக்குள் பாம்போடு வசிப்பதைப்போல் எந்த நிமிடத்திலும் அபாயமுண்டாக்கக்கூடியது.

# 90. பெரியாரைப் பிழையாமை

*891. ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்*
*போற்றலு ளெல்லாம் தலை.*

தம்முடைய நலங்களைப் பாதுகாத்துக்கொள்ள விரும்புகிறவர்கள் பாதுகாக்க வேண்டிய பொருள்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த பொருள் எதுவென்றால், தம்மினும் வல்லமையுள்ளவர்களுடைய திறமையைப் பயன் படுத்திக் கொள்ளத் தவறவிடாமை.

*892. பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்*
*பேரா இடும்பை தரும்.*

பெரியாருடைய ஆலோசனையைக் கேட்டுக் கொள்ளாமல் அவர்களை அலட்சியம் செய்துவிட்டால் பிறகு அந்தப் பெரியவர்களே முயன்றாலும் மாற்ற முடியாத துன்பங்கள் வந்துவிடும்.

*893. கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்*
*ஆற்று பவர்கண் இழுக்கு.*

(அதனால்,) காரியம் கெட்டுப்போக வேண்டுமானால் அந்தக் காரியத்தைப் பற்றித் தம்மைவிடத் திறமை மிகுந்த பெரியாரிடம் ஆலோசனை கேட்டுக்கொள்ளாமல் செய்ய வேண்டும். தமக்கே கெடுதி வரவேண்டுமானால் அப்பெரியாருக்குத் துன்பம் செய்ய வேண்டும்!

*894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு*
*ஆற்றாதார் இன்னா செயல்.*

வல்லமையிற் பெரியாருக்கு வல்லமையில்லாதவர்கள் துன்பம் செய்வது, எமனைக் கையைப் பிடித்துத் தம்மிடம் இழுப்பதற்குச் சமானம்.

*895. யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்*
*வேந்து செறப்பட் டவர்.*

துன்பம் தருவனவாகிய ஐம்புல ஆசைகளையும் அடக்கியாளும் மேலோராகிய சான்றோருக்கு வருத்தம் உண்டாக்கினவர்கள் எங்கே போனாலும் சுகமாக வாழ முடியாது.

*896. எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்*
*பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.*

நெருப்பினால் சுடப்பட்டாலும் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால்

தவப்பெருமையுள்ள மகான்களுக்குத் துன்பம் செய்து அதனால் உண்டாகும் பாவத் தீயினால் தொடரப்பட்டவர்கள் தப்பித்துக் கொள்ளவே முடியாது.

**897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்**
**தகைமாண்ட தக்கார் செறின்.**

(ஏனெனில்,) மனிதத் தன்மையில் உயர்ந்த (ஆன்ம பலமுள்ள) மேன்மக்கள் ஒருவனை வெறுப்பார்களானால் அவனுடைய வகை வகையான சிறப்புக்களுள்ள சுக வாழ்வும் அளவற்ற செல்வமும் எதற்கு ஆகும்?

**898. குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு**
**நின்றன்னார் மாய்வர் நிலத்து.**

(சலனமில்லாத தன்மையால் உயர்ந்து) மலைபோன்ற பெரியார்கள் மனம் நொந்து குறைவாக எண்ணிவிட்டாலும், அவர்களுக்குத் துன்பம் செய்தவர்கள் உலகத்தில் உயர்ந்து நின்றவர்களானாலும் குலத்தோடு அழிந்து போவார்கள்.

**899. ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து**
**வேந்தனும் வேந்து கெடும்.**

உயர்ந்த தவக் கொள்கையுள்ள மகான்கள் கோபித்துக் கொள்ள நேர்ந்து விட்டால் கோபிக்கப்பட்டவன் அரசனாக இருந்தாலும் அப்போதே அவன் வலிமை முறிந்து அரசாட்சியையும் இழந்துவிடுவான்.

**900. இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்.**

(அவ்வரசன் எவ்வளவு துணைப்பலம் உள்ளவன் ஆனாலும் சரி,) புலனடக்கிய உயர்ந்த ஒழுக்கமுள்ளவர்கள் வெறுத்து விட்டால் அவர்களுக்குத் தீமை செய்தவர் எவ்வளவு துணைப்பலம் உள்ளவரானாலும் தப்ப முடியாது.

# 91. பெண்வழிச் சேறல்

**901. மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது.**

மனைவியின் காம இன்பத்துக்காக, அவளுடைய விருப்பத்தின்படி நடப்பவர்கள் வாழ்க்கையின் சிறந்த பயன்களை அடைய மாட்டார்கள். காரியத்தை விரும்புகிறவர்கள் விரும்பத்தகாத நடத்தையும் அதுவேயாம்.

**902. பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.**

(மனைவி எதைச் சொன்னாலும் கேட்கக்கூடாதென்பதன்று. பின் என்னவெனில்,) ஆலோசிக்காமல் மனைவி சொன்னதையெல்லாம் சொன்னபடி செய்ய விரும்புகிறவனுடைய வாழ்க்கை, பெரிய அவமான முள்ளதாகி வெட்கத்தால் தலைகுனியச் செய்யும்.

**903. இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.**

(மனைவி மீதுள்ள ஆசையினால் அவள் சொன்னதையெல்லாம் செய்கிறவன் தலைகுனிய நேரும்.) மனைவிக்குக் கீழ்ப்படிகிற முறை கெட்ட தன்மை, நல்லவர்கள் மத்தியில் போவதற்கே கூச்சமுண்டாக்கும்.

**904. மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று.**

(மனைவிக்குக் கீழ்ப்படிகிறவனைவிட இன்னும் கீழ்த்தரமாக மனைவிக்கு அஞ்சி நடக்கிறவனும் உண்டு.) மனைவிக்கு அஞ்சி அடங்கி நடக்கும் மறுமைப் பயன் இல்லாதவன் மேற்கொள்ளும் எந்த வேலையும் வெற்றி பெறாது.

**905. இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.**

(ஏனென்றால்,) எல்லாக் காரியத்துக்கும் மனைவிக்குப் பயந்து நடக்கிறவன் நல்லவர்களுக்கு உதவி செய்யவும் பயப்படுவான். (அதனால் நல்லவர்களுடைய வாழ்த்தும் உதவியும் அவனுக்குக் கிடைக்க மாட்டா.)

**906. இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்**
**அமையார்தோள் அஞ்சு பவர்.**

(நல்லவர்களுக்கும் நல்ல காரியத்துக்குங்கூட உதவி செய்ய முடியாதபடி) மனைவியினுடைய அழகான தோள்களைத் தழுவும் காம இன்பத்தைக் கருதி அவளுக்கு அஞ்சி நடக்கிறவர்கள் தேவர்களைவிடச் சிறந்த சுகபோக வாழ்க்கை உடையவர்களானாலும் சிறப்பற்றவர்களே.

**907. பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து.**

(மனைவியிடத்தில் ஆசையினாலோ, பணிவினாலோ, அச்சத் தினாலோ எப்படியானாலும்) பெண்ணின் கட்டளைக்கு அடங்கி அவள் சொன்னபடி செய்து வாழும் ஆண்பிள்ளையைவிட நாணமுள்ள பெண்ணே சிறப்புடையவள்.

**908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்**
**பெட்டாங்கு ஒழுகு பவர்.**

மனைவியின் இச்சைப்படியே எதையும் செய்கிறவர்கள், நண்பர்களுக்கு நேரிடும் துன்பங்களைத் தீர்க்க உதவமாட்டார்கள்; வேறு எந்த நல்ல காரியமும் செய்ய முடியாதவர்களாவார்கள்.

**909. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ஏவல் செய்வார்கண் இல்.**

(அதனால்,) தர்ம காரியங்களும் பொருள் சம்பாதிக்கும் திறமையும், அவற்றால் வரும் இன்பம் முதலிய பலன்களும் பெண்ணேவல் செய்கிறவர்களுக்கு இருக்கமாட்டா.

**910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.**

(ஆகையினால்,) சொந்த அறிவின் ஆலோசனையுடன் மனோதிடமும் இருக்க வேண்டிய ஆண்மக்களுக்கு மனைவியின் பேச்சைக் கேட்டுத்தான் எதையும் செய்வது என்ற மூடத்தனம் இருக்கக்கூடாது.

# 92. வரைவின் மகளிர்

*911. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்*
*இன்சொல் இழுக்குத் தரும்.*

அன்பு காரணமாக ஆசை கொள்ளாமல், பணம் காரணமாக மட்டும் பாசாங்கு ஆசைகாட்டும் விலை மாதர்களுடைய பேச்சு இனிமையாக இருந்தாலும், அதனால் துன்பமே வரும்.

*912. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்*
*நயன்தூக்கி நள்ளா விடல்.*

(ஆதலால்,) தமக்குக் கிடைக்கக் கூடிய பணத்தின் அளவுக்குத் தக்கபடி இனிமையாகப் பேசுகிற விலை மாதருடைய ஆசை மூட்டும் தந்திரங்களை ஆராய்ந்து, அவர்களுடன் உறவு கொண்டுவிடாமல் விலக வேண்டும்.

*913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்*
*ஏதில் பிணந்தழீஇ யற்று.*

பொருளுக்காகத் தம்முடைய பெண்மையை விற்கிற வேசியரைப் புணரும் பொய்யான காமக்கலவி இருட்டு அறையில் உணர்ச்சியற்ற பிணத்தைப் பிணமென்று அறியாமல் தழுவிப் புணர்வதற்கே சமானமாகும்.

*914. பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்*
*ஆயும் அறிவி னவர்.*

அருட் செல்வமாகிய பேரின்பத்தை நாடுகின்ற அறிவு உடையவர்கள் பொருட் செல்வத்தை மட்டும் கருதுகின்ற விலைமாதருடைய அற்ப சுகத்தை மனத்தாலும் தீண்டமாட்டார்கள்.

*915. பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்*
*மாண்ட அறிவி னவர்.*

புத்திக்கூர்மையுள்ள சிறந்த அறிவாளிகள் (பொது மக்களுள் யாருக்கானாலும் விலைக்கு விற்கவென்றே) தம்மை அழகுபடுத்திக் கொள்ளும் விலைமாதரின் அற்ப சுகத்தில் சிக்கிக் கொள்ள மாட்டார்கள்.

**916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்.**

(அறிவில் சிறந்தவர்களாக இல்லாதவர்களாயினும்,) தம்முடைய உடல் நல ஆரோக்கியத்தைக் காத்துக் கொள்ளுகிறவர்கள், அழகைக் காட்டி மயக்கி அற்பசுகத்தை விலைக்கு விற்கக் கடைபரப்புகின்ற விலை மாதருடைய தோள்களைத் தழுவமாட்டார்கள்.

**917. நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்**
**பேணிப் புணர்பவர் தோள்.**

கலவியின்பத்துக்கல்லாமல் வேறொன்றாகிய பண ஆசைக்காக புணருகின்ற விலைமாதருடைய தோள்களை மனத்தை அடக்கும் திறமையில்லாதவர்களே தழுவுவார்கள்.

**918. ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு.**

பகுத்தறியும் அறிவே இல்லாதவர்களுக்கு வஞ்சகமுள்ள விலைமாதருடைய உறவு விட்டு விலக முடியாத பேய்ப் பிடிப்புப் போன்றது.

**919. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு.**

வேறு குற்றம் செய்யாமலும் வெறும் முட்டாள் தனத்தினால் விழுந்து தவிக்கிற நரகம் எதுவென்றால், பணங் கொடுக்கிற யாரையும் வரன்முறையில்லாமல் புணர்கின்ற விலைமாதரின் உறவேயாகும்.

**920. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு.**

(சுருங்கச்சொன்னால்,) இருமனமுள்ள விலைமாதரும், கள்குடியும், சூதாட்டமும் திருமகளாகிய லட்சுமியால் விலக்கப்பட்டவர்களுடைய உறவுகள்.

# 93. கள்ளுண்ணாமை

921. உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.

கள்ளாசை கொண்டவர்கள் எக்காலத்திலும் பிறரால் மதிக்கப்பட மாட்டார்கள்; உள்ள பெருமைகளையும் இழந்து விடுவார்கள்.

922. உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

(ஆகையினால்,) கள்ளைக் குடிக்க வேண்டா. அறிவொழுக்கங்களாற் சிறந்த மேன்மக்களால் மதிக்கப் படுவதை வேண்டாதவர்கள் குடித்தால் குடிக்கட்டும்.

923. ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(ஏனெனில்,) குடித்து வெறித்தவனை அவனைப் பெற்றெடுத்த தாய் பார்த்தாலும் வெறுப்பாளென்றால், ஒழுக்கத்தையே விரும்பும் நல்லவர்கள் பார்த்தால் எப்படியிருக்கும்!

924. நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

கள்ளைக் குடிப்பது என்ற மிகவும் விரும்பத் தகாத பெருங்குற்றத்தைச் செய்கிறவர்களை நாணம் என்ற அழகான பெண் தன் முகமெடுத்துக்கூடப் பார்க்காமல் அவர்கள் இருக்கும் இடத்தை விட்டுப் போய்விடுவாள்.

925. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(அப்படி நாணமற்றுப் போகும்படி செய்துவிடுகிற கள்ளை விலை கொடுத்து வாங்குவது,) பணத்தைக் கொடுத்து மெய்ம்மறதியை வாங்கிக் கொள்வது, நல்லதுகெட்டது தெரியாத மடத்தனந்தான்.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லார் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(அதனால்,) மெய்ம்மறந்த நிலையுள்ளவர்கள் யாரானாலும் செத்த பிணத்துக்கே சமானம். அதனால், கள்ளுண்டு மெய்ம்மறதியடைகிறவர்கள்

கள்ளை உண்ணுந்தோறும், பிணமாக்கிவிடுகிற விஷத்தை உண்பவர்களே யாகிறார்கள்.

**927. உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்**
**கள்ளொற்றிக் கண்சாய் பவர்.**

கள்ளைக் குடித்து நிதானமிழந்து கண் சுழலுகின்ற குடியர்கள் தினந்தினம் வீட்டுக்குள் குடித்தாலும் வீதிக்கு வந்து ஊர்க்குள் பிறர் நகைக்க மானங்கெடுவார்கள்.

**928. களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து**
**ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.**

'போதையினால் தெரியாமற் செய்துவிட்டேன்' என்று பின்னால் சொல்லச் செய்கிற குடிப்பழக்கத்தை விட்டொழிக்க வேண்டும். மனத்தில் மறைந்த வைத்திருக்கிற இரகசியங்களும் அதைப்போலவே போதையில் வெளியாகிவிடும்.

**929. களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று.**

கள்ளுண்டு மயங்கியிருக்கிறவனைச் சீர்திருத்த, நியாயங்களைச் சொல்லுவது, ஆழமான தண்ணீருக்குள் முழுகி மறைந்திருப்பவனைத் தீப்பந்தம் கொண்டு தேடுவதைப் போன்றது.

**930. கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்**
**உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.**

கள்ளுண்ணும் பழக்கமுள்ளவர்கள், கள்ளை உண்ணாதிருக்கிற சமயத்தில் கள்ளுண்டு போதையினால் தள்ளாடுகிற வேறொருவனைப் பார்க்கிற போதாவது கள்ளுண்பதனால் உண்டாகும் தடுமாற்றத்தை எண்ணிப் பார்க்க மாட்டார்களா! (அப்போது மனமாறுதல் ஏற்பட்டால் தான் உண்டு.)

# 94. சூது

**931. வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்**
**தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.**

கெலிப்பு வந்தாலும் சூதாட்டத்தை விரும்பக்கூடாது. அந்த கெலிப்பு, ஒரு மீன் இரையென்று நம்பி விழுங்கிவிடுகிற இரும்புத்தூண்டில் முள்ளைப் போன்றது.

**932. ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்**
**நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.**

(எப்படியெனில்,) ஒருமுறை கெலித்து நூறுமுறை தோற்றுவிடுகிற சூதாட்டக்காரர்களுக்குச் சுகமடைந்து வாழக்கூடிய மார்க்கங்கூட உண்டா என்ன?

**933. உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்**
**போஒய்ப் புறமே படும்.**

சூதாட்டம் ஒருவனை ஓயவிடாது. சொல்லப் போனால் பண வருவாய்க்கு வழியே இல்லாமல் உள்ளதெல்லாம் தொலைந்துபோய் அதன்பிறகே ஓயும்.

**934. சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்**
**வறுமை தருவதொன்று இல்.**

(பணத்துக்கு வழியே இல்லாமல் ஓய்ந்துவிட்ட பிறகும் சூதாட்டம் சும்மா இருக்கவிடாது.) பல குற்றங்களுக்கு ஆளாக்கி வாழ்க்கையைச் சீரழித்துவிடும். அந்தச் சூதாட்டத்தை விட மனிதனுக்குத் தரித்திரத்தை உண்டாக்குவது வேறில்லை.

**935. கவறும் கழகமும் கையும் தருக்கி**
**இவறியார் இல்லாகி யார்.**

(ஏனெனில்,) சூதாட்டக்காரரின் சகவாசத்திலும் சூதாடும் பழக்கத்திலும் மிகுந்த ஆசை வைக்கிறவர்கள் தரித்திரம் அடைந்து கெட்டே போனார்கள் (என்பது உலக அனுபவம்).

**936. அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்**
**முகடியால் மூடப்பட் டார்.**

(கெட்டுப்போவதற்கு முன்னாலும்) சூதாட்டம் என்ற மூதேவிக்குள்

சிக்கிக் கொண்டவர்கள் வயிறார உண்ண மாட்டார்கள். எந்நேரமும் ஏதாவது துன்பத்தால் கவலையுள்ளவர்களாகவே இருப்பார்கள்.

**937. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.**

இளம்பிராயத்தில் சூதாட ஆரம்பித்துவிட்டால், அது பல தலைமுறைகளாகப் பரம்பரையாக உள்ள குடும்பச் சொத்துக்களையும் நல்ல குணங்களையும் அழித்துவிடும்.

**938. பொருள்கெடுத்து பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது.**

(எப்படியெனில்,) சூதாட்டம் முதலில் செல்வத்தை அழித்து, அதனால் பொய்களையும் பேசச் செய்து, அதன் பிறகு சீவகாருணியமில்லாத செயல்களையும் செய்யத் தூண்டிப் பல துன்பங்களில் உழலச் செய்துவிடும்.

**939. உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.**

நல்ல உடை, நிரம்பிய செல்வம், வயிறார உணவு, நற்குணப் பெருமை, கற்ற கல்வி ஆகிய ஐந்தும் சூதாட்டத்தில் இறங்கியவனுக்கு இருந்தாலும் இல்லாதவைபோல அவன் அவற்றின் பயனை அடைய முடியாது.

**940. இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர்.**

(எவ்வளவு தோற்றுவிட்டாலும் சூதாட்ட ஆசைவிடாது.) உடல்நோய் அதிகரிக்க அதிகரிக்க உயிருக்கு உடம்பின் மீதுள்ள ஆசையும் அதிகரிப்பதைப்போலத் தோற்கத் தோற்கச் சூதாடுகிறவனுக்குத் சூதாட்டத்தின் மேல் ஆசை அதிகரிக்கும்.

# 95. மருந்து

**941. மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று.**

(உடல் நிலைக்காக உட்கொள்ள வேண்டிய ஆகாரங்களாகிய) காற்று, நீர், உணவு ஆகிய மூன்றில் ஒன்று மிகுந்தாலும் குறைந்தாலும் உடலுக்கு வியாதி உண்டாகும் என்பது கற்றறிந்தவர்கள் எண்ணிச் சொன்னது.

**942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின்.**

உடல் வளர்ச்சிக்காக அறுசுவைகளுடன் உண்ணப்படுகிற உணவு ஒருமுறை உண்டது முற்றிலும் சீரணமாகி விட்டதா என்பதைக் கவனித்து அடுத்தமுறை உண்டால் நோய் உண்டாகாது. ஆகவே, மருந்தே வேண்டியிருக்காது.

**943. அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுய்க்கு மாறு.**

(ஆகையினால், ஒருமுறை உண்டதற்கும் மறுமுறை உண்பதற்கும் இடையில் இருக்கவேண்டிய) கால அளவை அறிந்துகொண்டு உண்ண வேண்டும். அப்படிச் செய்வது (நல்வினைப் பயனாகக்) கிடைத்த மானிட தேகத்தை நெடுங்காலம் பயன்படுத்திக்கொள்ளும் மார்க்கம்.

**944. அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல**
**துய்க்க துவரப் பசித்து.**

உடம்புக்கு ஒத்துக்கொள்ளாத உணவுகளை ஆராய்ந்து நீக்கிவிட்டு ஒத்துக்கொள்ளக்கூடியவைகளையே மறவாமல் உண்ணவேண்டும். அவற்றையும் நன்றாகப் பசியெடுத்த பிறகே உண்ண வேண்டும்.

**945. மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்**
**ஊறுபாடு இல்லை உயிர்க்கு.**

(அப்படி உண்பதிலும்) உடம்புக்கு மாறுபடாமல் ஒத்துக்கொள்கிற உணவையும் சுவைக்காக ஆசைப்பட்டு மிதமிஞ்சி உண்பதை விலக்கி அளவோடு உண்டால், உடலுக்கும் நோய் வராது; உயிருக்கும் துன்பமில்லை.

**946. இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்**
**கழிபே ரிரையான்கண் நோய்.**

மலசலக் கழிவுகளையும் கவனித்து அதற்குத் தக்கபடி உண்கிறவனிடத்தில் தேக ஆரோக்கிய இன்பம் குடி கொண்டிருக்கும். (மலசலம் சரியாகக் கழியாமலும்) மேலும் மேலும் உண்டு வயிற்றை அடைக்கிறவனிடத்தில் நோய் குடிகொண்டிருக்கும்.

**947. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்**
**நோயள வின்றிப் படும்.**

சீரண சக்தியின் அளவுக்குத் தக்கபடி உண்ணாமல் தெரியாத்தனமாக மிதமிஞ்சி உண்டால் அளவில்லாத நோய்கள் உண்டாகும்.

**948. நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்.**

நோயை இன்னதெனக் கண்டறிந்து, நோய் வந்த காரணத்தையும் அறிந்து, நோயைத் தீர்க்கத் தெரிந்த வைத்தியனிடத்தில் தக்க பரிகாரம் செய்து கொள்ள வேண்டும்.

**949. உற்றான் அளவும் பிணியளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்.**

நோயாளியின் வயது, தேகபலம் முதலிய அளவுகளையும் நோயின் வலிமையையும் அப்போதுள்ள கால நிலைமையையும் தீர எண்ணிப் பார்த்துத் தக்கது செய்ய வேண்டியது, தொழில் கற்ற வைத்தியனுடைய வேலை.

**950. உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்று**
**அப்பால்நாற் கூற்றே மருந்து.**

(நோயாளியை வைத்தியனிடம் ஒப்படைத்தபின்) நோயாளி, வைத்தியன், மருந்து, நோயாளியின் அருகிலிருக்க வேண்டிய துணை என்ற நான்கு பகுதிகளும் சேர்ந்ததுதான் வைத்தியம். மற்றவர்கள் தலையிடக்கூடாது.

## 96. குடிமை

***951. இற்பிறந்தார் கண்அல்லது இல்லை இயல்பாகச்***
***செப்பமும் நாணும் ஒருங்கு.***

உபகார குணம், பழிபாவங்களுக்கு அஞ்சி நடக்கும் தன்மை ஆகிய இரண்டும் சேர்ந்திருப்பது வழக்கமாக நல்ல குடும்பத்தில் பிறந்தவர்களிடத்திலன்றி மற்றவர்களிடத்தில் இருப்பதில்லை.

***952. ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்***
***இழுக்கார் குடிப்பிறந் தார்.***

(மேலும்,) நல்ல குடியிற் பிறந்தவர்கள் நல்ல நடத்தை, சத்தியம், பழிக்கு அஞ்சுதல் ஆகிய மூன்றிலும் தவற மாட்டார்கள்.

***953. நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்***
***வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.***

(உண்மையான குடிப்பிறப்புக்கு அடையாளம்:) சிரிப்புத்தவழும் மலர்ந்த முகம், கேட்டதைக் கொடுக்கும் தன்மை, இனிமையான வார்த்தைகள், நிந்தனையான சொற்களைப் பேசாமை ஆகிய நான்கும் உண்மையான நற்குடிப்பிறப்புக்கு அடையாளங்கள் எனப்படும்.

***954. அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்***
***குன்றுவ செய்தல் இலர்.***

(அதுமட்டுமல்ல,) கோடானுகோடி பணம் வருவதானாலும் குடிப் பிறந்தவர்கள் கண்ணியக் குறைவான எதையும் செய்யமாட்டார்கள்.

***955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி***
***பண்பில் தலைப்பிரிதல் இன்று.***

(கோடானுகோடி வருவதானால் மட்டுமல்ல, உள்ளதெல்லாம் போய்விட்டாலும்,) பிறருக்குக் கொடுக்கக் கூடிய செல்வநிலை மிகவும் குறைந்துவிட்ட காலத்திலும், பரம்பரைப் பெருமையுள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தம்முடைய நற்குணங்களை விட்டுவிட மாட்டார்கள்.

***956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற***
***குலம்பற்றி வாழ்தும்என் பார்.***

(பிறர் தமக்குத் தீமை செய்துவிட்டாலும்,) குற்றமற்ற தம்முடைய

இனமரபைப் பின்பற்றி வாழும் குடிப்பிறந்தார் ஒருவர் மீது தமக்குள்ள கோபத்தின் காரணமாக முறை தவறியும் எதையும் செய்துவிட மாட்டார்கள்.

**957. குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்**
**மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.**

நல்லகுடியிற் பிறந்தவர்கள் குற்றம் செய்து விட்டால் அது சந்திரனிடத்திலுள்ள களங்கத்தைப்போல் உலகிலுள்ள எல்லாருக்கும் தெரிந்துவிடும்.

**958. நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்**
**குலத்தின்கண் ஐயப் படும்.**

(செல்வமிருந்தாலும் செருக்கில்லாத அன்புடைமையால்தான் குடிப்பிறப்பு விளங்கும். செல்வம் இருந்து அன்பில்லாதவனை) ஒருவன் செல்வ நலங்களுடன் சுகமாக வாழும்போது அவனிடத்தில் அன்பில்லாத தன்மை இருக்கக் கண்டால், அவன் நல்ல குடிப்பிறப்பு உள்ளவனல்லன் என்று சந்தேகிக்க இடமுண்டு.

**959. நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்**
**குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.**

ஒரு விளை நிலத்திலுள்ள பூமி சாரத்தை அந்த நிலத்திலிருந்து வெளிக்கிளம்புகிற முளையே காட்டிவிடும். அதைப்போல ஒருவனுடைய குடிப்பிறப்பை அவன் வாயிலிருந்து வெளியே வருகிற வார்த்தைகளே காட்டிவிடும்.

**960. நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்**
**வேண்டுக யார்க்கும் பணிவு.**

துன்பம் வாராத நல்வாழ்வு வேண்டுமென்றால், பழிபாவங்களுக்கு அஞ்சி நடக்க வேண்டும். நல்ல குலத்தைச் சேர்ந்தவன் என்ற பெருமை வேண்டுமென்றால் யாரிடத்திலும் வணக்கமுள்ளவனாக நடந்து கொள்ள வேண்டும்.

# 97. மானம்

961. இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.

இல்லாமல் முடியாது என்னத் தகுந்த மிகவும் அவசியமான பொருள்களானாலும், மதிப்புக் குறைவு உண்டாகும்படி வருமானால் அவற்றை ஏற்றுக்கொள்ள மறுத்துவிடுவதே மானமுடைமை.

962. சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(அதுமட்டுமல்ல,) சீரும் சிறப்பும் தரக்கூடிய செல்வம் வருவதானாலும் புகழ் தரக்கூடிய பேராண்மையான மானத்தைக் கருதுகிறவர்கள் நேர்மையற்ற காரியங்களைச் செய்யமாட்டார்கள்.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

(மானம் என்பது அகங்காரமன்று;) செல்வம் பெருகியிருக்கும்போது எல்லாருக்கும் பணிவாக நடந்துகொள்வதும், ஏழையாகிவிட்டபோது அதற்காகப் பிறருக்கு வணங்காமல் நிமிர்ந்துநின்று வறுமையைத் தாங்குவதும்தான் மானம்.

964. தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

மனிதர்கள் மானம் என்ற உயர்ந்த நிலையிலிருந்து தவறிவிட்டால் தலையிலிருந்து வேரோடு விழுந்துவிட்ட மயிருக்குச் சமானமாக மதிப்பாரற்றுப் போவார்கள்.

965. குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

குன்றிமணியளவு மிகச் சிறிய மானக்குறைவான காரியத்தைச் செய்துவிட்டாலும் மலைபோன்ற புகழுடைய மிகப் பெரிய மனிதர்களும் மதிப்பிற்குறைந்து போவார்கள்.

966. புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை.

தம்மை அவமதிக்கிறவர்களை நத்தி அவர்களுக்கு அடங்கி உயிர்

வாழ்வது புகழ்தரக்கூடியதுமன்று; புண்ணியமாக மோட்சத்துக்குக் கொண்டு போய்விடக் கூடியதும் அன்று. பின் எதற்காக அப்படியும் உயிர் வாழ்கிறார்கள்?

**967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே**
**கெட்டான் எனப்படுதல் நன்று.**

(இகழ்வாரை வணங்கி வாழ்கின்ற மானங்கெட்டவரைவிடப் பகைவர்களை வணங்கி உயிரை வைத்துக் கொண்டிருக்கிற மானங் கெட்டவர்களும் உண்டு. அவ்விதம்) ஒருவன் தன் பகைவருக்கு ஏவல் செய்து அவரிடம் வணங்கி வாழ்வமைவதைவிட அப்படிப்பட்ட நிலைமை ஏற்பட்ட உடனே இறந்துபோவது நல்லது.

**968. மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடழிய வந்த இடத்து.**

(மானம்போனபின் உயிரை வைத்திருப்பது சாகாமல் இருக்க மருந்தா?) மனிதருக்குப் பெருந்தகைமை தருகின்ற மானம் என்பது கெட்டுப்போனபின் உயிரை விட்டொழிக் காமல் வாழ்ந்திருப்பது ஊனுடலை அழியாதிருக்கச் செய்யக் கூடிய அமிர்தமா?

**969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்.**

(மானமுடையவர் தன்மை:) தன் உடலின்மீதுள்ள மயிர் தன் உடலைவிட்டு நீங்கினால் உடனே இறந்துபோகிற கவரிமானைப் போன்ற மானிகள் மானம் நீங்க நேரிட்டால் உடனே உயிரைவிட்டு விடுவார்கள்.

**970. இளிவரின் வாழாத மானம் உடையார்**
**ஒளிதொழுது ஏத்தும் உலகு.**

(அப்படி) மானக்கேடு உண்டானால் உயிரைத் துறந்துவிடுகிற மானிகளுடைய பெருமையை உலகம் வாழ்த்தி வணங்கும்.

# 98. பெருமை

**971. ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு**
**அஃதிறந்து வாழ்தும் எனல்.**

ஒருவன் தான் அரிய பெரிய காரியங்களையும் செய்து முடிக்க முடியும் என்று தன்னுடைய திறமையில் தன்னம்பிக்கையுள்ளவனாக இருப்பது புகழத்தக்கதுதான். ஆனால் அந்த நம்பிக்கை அளவு கடந்து அகங்காரமாகி விடக்கூடாது. அதனால் நல்வாழ்வு கெடும்.

**972. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்.**

(அப்படிப்பட்ட அகங்காரமில்லாத பெருமைதான் ஒருவனுக்கு சிறப்புண்டாக்குவது.) எல்லா மனிதர்களும் பிறப்பினால் ஒரே மாதிரியானவர்களே. ஆனால் அவரவர்கள் காரியம் செய்யும் திறமை வேறுபடுவதனால் சிறப்புக்கள் ஒரே மாதிரியாக அடைய முடியாது.

**973. மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்.**

(இந்த மனப்பெருமை என்பது சாதி, குலம், செல்வம், கல்வி முதலியவைகளைப் பற்றியதல்ல.) மேலான மனம் இல்லாதவர்கள் மேலான இடத்திலிருந்தாலும் மேலானவர்கள் ஆகிவிட மாட்டார்கள். கீழான மனம் இல்லாதவர்கள் கீழான இடத்திலிருந்தாலும் கீழானவர்கள் ஆகிவிட மாட்டார்கள்.

**974. ஒருமை மகளிரே போலப் பெருமையும்**
**தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.**

(பெருமை என்பது பிறப்பினால் அடையக்கூடியது அல்லவென்பது மட்டுமின்றிப் பிறருடைய உதவியால் அடையக்கூடியதுமல்ல.) பெண்களுடைய கற்பைப்போலவே பெருமை என்பதும், ஒருவன் தானே தன்னுடைய நல்லொழுக்கத்தைக் காத்து நடந்துகொண்டால்தான் உண்டாகும்.

**975. பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்**
**அருமை உடைய செயல்.**

(அப்படி) நல்லொழுக்கத்தைக் காக்கும் தன்னம்பிக்கை

உடையவர்களே செய்வதற்கரிய அசாதாரண காரியங்களையும் செய்து முடிப்பார்கள்.

**976. சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு.**

தம்மினும் பெரியவர்களை அணுகித் தமக்குத் தெரியாதவற்றைத் தெரிந்துகொள்ளும் எண்ணம், சிறுமனம் உள்ளவர்களிடத்தில் இருக்காது. (பெருந்தன்மையான மனம் படைத்தவர்களிடத்தில்தான் இருக்கும்.)

**977. இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.**

சிறப்புங்கூடத் தகுதியற்றவர்களுக்கு வந்துவிட்டால் அது அக்கிரமங்களைச் செய்வதே வேலையாக இருக்கும்.

**978. பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.**

உண்மையாகவே பெருந்தன்மையான மனமுள்ளவன் யாரிடத்திலும் பணிவாக நடந்துகொள்வான். பெருமையற்ற சிறுமனம் படைத்தவன் எப்போதும் தன்னைத்தானே புகழ்ந்து மாலைசூட்டிக் கொள்ளுவான்.

**979. பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்.**

(மேலும்,) பெருமைக் குணம் என்பது அகங்காரமே இல்லாதிருப்பது. சிறுமைக்குணம் என்பது அகங்காரமே நடத்தையாக உள்ளது.

**980. அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.**

(அதனுடன்,) பெருமைக் குணமுடையவர்கள் பிறருடைய குற்றங்களை மறைத்துக் குணங்களையே பாராட்டிப் பேசுவார்கள். சிறுமைக் குணமுடையவர்கள் பிறருடைய குணங்களை விட்டுவிட்டுக் குற்றங்களை மட்டும் சொல்லித் தீர்த்துவிடுவார்கள்.

## 99. சான்றாண்மை

**981. கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து**
**சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.**

எல்லா நல்ல குணங்களும் சேர்ந்த நிறைகுணம் என்னும் சான்றாண்மையுள்ளவர்கள் தம்முடையஅறிவுக்கு நல்ல காரியம் என்று தெரிகிற எல்லாக் காரியங்களையும் கட்டாயமாகச் செய்ய வேண்டிய கடமைகளாகவே செய்வார்கள்.

**982. குணநலம் சான்றோர் நலனே பிறநலம்**
**எந்நலத்து உள்ளதூஉம் அன்று.**

குணச்சிறப்பே சான்றோர்களுடைய செல்வம்; மற்ற செல்வங்களை அவர்கள் எந்தச் சிறப்போடும் சேர்க்க மாட்டார்கள்.

**983. அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண்.**

யாரிடத்தும் அன்புடைமை, பழிபாவங்களுக்கு அஞ்சி நடத்தல், எல்லாருக்கும் உபகாரியாக இருத்தல், தாட்சிண்ணியம் காட்டுதல், சத்தியந்தவறாமை ஆகிய ஐந்து கொள்கைகளும் சேர்ந்து தூண்களாகத் தாங்கி நிற்கிற பெரும் பொறுப்புத்தான் சான்றாண்மை.

**984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு.**

(சான்றாண்மை உள்ளவர்களாக வாழ்க்கை நடத்துவது துறவு பூண்டு தவம் செய்வதைவிடச் சிறப்புடையது. எப்படி எனில்,) தவம் செய்கிறவனுடைய சிறப்பு பிற உயிரைக் கொல்லக்கூடாது என்பது. ஆனால் சான்றாண்மையின் சிறப்பு, பிறருக்குத் தீமை தரக்கூடிய எதையும் வாயாலும் சொல்லக்கூடாது என்பதே.

**985. ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்**
**மாற்றாரை மாற்றும் படை.**

(சான்றோருக்கு, பிறருக்குத் தீமை செய்ய வேண்டிய பகைமைக் குணமே இருக்காது.) தம்மினும் மிகுந்த சிறப்புடையவர்களுடைய வல்லமைக்குப் பணிவு காட்டி நடந்து கொள்ளும் அந்தக் குணம், சான்றோர்கள் பகைவர்களையும் நண்பர்களாக மாற்றிவிடுகிற உபாயம்.

**986. சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி**
**துலையல்லார் கண்ணும் கொளல்.**

சான்றாண்மை என்னும் பொன் போன்ற குணத்தில் மாற்றறியும் உரைகல் எதுவென்றால், தமக்குச்சமானமில்லாத சிறியவர்களிடத்தில் தோற்றுப் போனாலும் அதைக் கண்ணியமாக ஒப்புக் கொள்வது.

**987. இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்தோ சால்பு.**

(சான்றாண்மை மேலும் என்ன செய்யுமென்றால்,) தமக்குத் துன்பம் செய்தவர்களுக்கும் திருப்பித் தீமை செய்யாமல் நன்மையே செய்யா விட்டால், சான்றாண்மையினால் என்ன பயன்?

**988. இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்**
**திண்மைஉண் டாகப் பெறின்.**

சான்றாண்மை என்னும் வல்லமையுள்ள ஒருவனுக்கு வறுமை இகழ்ச்சி தரக்கூடியதன்று.

**989. ஊழி பெயரினும் தாம்பெயரார் சாண்றாண்மைக்கு**
**ஆழி எனப்படு வார்.**

நற்குணங்கள் நிரம்பிய கடல் போன்ற சான்றோர்கள் யுகப்புரட்சி ஏற்பட்டு உலகங்களெல்லாம் நிலைகலங்கினாலும் தாம் தம்முடைய நிறைகுணத்தில் நிலை கலங்க மாட்டார்கள்.

**990. சான்றவர் சாண்றாண்மை குன்றின் இருநிலந்தான்**
**தாங்காது மன்னோ பொறை.**

சான்றாண்மைக் குணத்தில் குறையாத சான்றோர்கள் சிலரேயாயினும் இருப்பதனால்தான் இந்தப் பெரிய உலகம் மற்றுள்ள மக்களடங்கிய பெரும் பாரத்தைச் சுமந்து கொண்டிருக்கிறது போலும்!

# 100. பண்புடைமை

***991. எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்***
***பண்புடைமை என்னும் வழக்கு.***

*யாரிடத்திலும் பண்புடையவனாக நடந்துகொள்ளும் வழக்கம் எதுவென்றால், மிருதுவான இரக்க குணமுடையவனாக யாரும் சுலபமாகத் தன்னிடம் (எதையும் சொல்லிக்கொள்ள) அணுகக் கூடியவனாக இருப்பது என்பதுதான்.*

***992. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்***
***பண்புடைமை என்னும் வழக்கு.***

*ஒருவன் அன்புடையவன் என்று சொல்லப்படுவது, நல்ல குடியிற் பிறந்தவன் என்று போற்றப்படுவது ஆகிய இந்த இரண்டும் அவனிடத்தில் பண்புடைமை என்ற ஒழுக்கம் இருப்பதனால்தான்.*

***993. உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க***
***பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.***

*நல்ல குடும்பத்திற் பிறந்த மக்கள் தம்முடைய தாய் தந்தையருடைய முகம், கை, கால் முதலிய அங்கங்களில் ஒத்திருப்பது சரியான ஒப்பல்ல; சரியான ஒப்பு எதுவென்றால், அக்குடும்பத்தின் செல்வம் போன்ற பண்புடைமையில் ஒத்திருப்பதுதான்.*

***994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்***
***பண்புபா ராட்டும் உலகு.***

*யாருக்கும் இரக்கமுள்ளவர்களாக உதவி செய்து பயன்பட வாழ்கின்றவர்களுடைய பண்புக் குணத்தைத்தான் உலகம் பாராட்டும்.*

***995. நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்***
***பண்புள பாடறிவார் மாட்டு.***

*பிறருடைய துன்பங்களை அறிந்தவர்களான பண்புடையார், பகைவர்களுக்கும் இரக்கத்தோடு இகழாமல் உதவி செய்வார்கள். பண்புடையவர்களுக்கு விளையாட்டாகக் கூடப் பிறரை இழிவாக நடத்துவது துன்பமான காரியம்.*

**996. பண்புடையாாப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.**

(அப்படிப்பட்ட பண்புடையவர்கள் இருப்பதனால்தான்,) பண்புக் குணமுடைய மனிதர்களைப் பொறுத்துத் தான் உலகத்தில் நல்வாழ்வு நடைபெற்று வருகிறது. இல்லாவிட்டால் அந்த நல்வாழ்வு மண்ணிற் புதைந்து மறைய வேண்டியதுதான்.

**997. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.**

பண்புக் குணமே இல்லாத மனிதர்கள் அரத்தைப் போலக்கூரிய அறிவுடையவராக இருந்தாலும், பிறருடைய துன்பத்தை உணர முடியாத ஓரறிவு உயிராகிய மரத்தைப் போன்றவர்களே.

**998. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.**

(பண்புடையவர்கள் தமக்குத் துன்பம் செய்துவிட்டவர்களுக்கும் இரக்கம் காட்டுவார்கள்.) தம்முடன் நட்பில்லாதவர்களாகத் தமக்குத் துன்பம் செய்கிறவர்களிடத்திலுங்கூடப் பண்புடையவர்கள் இரக்க மில்லாமல் நடந்து கொள்ளமாட்டார்கள்.

**999. நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்.**

பண்பில்லாதவர்களாக, யாரோடும் அளவளாவி மகிழ்ந்து வாழ முடியாதவர்களுக்கு இந்தப் பெரிய உலகம் பகலிலும் இருண்டுதான் இருக்கும்.

**1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.**

அளவளாவி மகிழும் பண்புடைமை இல்லாதவனிடத்திலுள்ள பெருஞ்செல்வம் பெரிய அசுத்தமான பாத்திரத்தில் ஊற்றிவைத்துக் கெட்டுப்போன பால் போல் யாருக்கும் பயன்படாது.

# 101. நன்றியில் செல்வம்

**1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்**
**செத்தான் செயக்கிடந்தது இல்.**

மிகப்பெரிய செல்வமுடையவனாக இருந்தும் பிறருக்கும் கொடுக்காமல் தானும் அனுபவிக்காமல் செத்துப்போகிறவன் உலகத்தில் செய்தது ஒன்றுமில்லை.

**1002. பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்**
**மருளானாம் மாணாப் பிறப்பு.**

பணமிருந்தால் போதும் என்று அதை எதற்காகவும், யாரிடத்திலும் கொடுக்காமல் இறுக்கிப் பிடித்துக் கொண்டிருக்கும் புத்திகெட்டவன் சிறப்பான பிறவி எனப்படும் மனிதப் பிறவியன்று. (தாழ்ந்த பிறவியே.)

**1003. ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்**
**தோற்றம் நிலக்குப் பொறை.**

(அவன் பூமிக்குப் பாரம்.) பணத்தை சேர்த்து வைப்பதில் மட்டும் மிகுந்த ஆசையுள்ளவர்களாக அதை நல்ல காரியங்களுக்குச் செலவு செய்து புகழைத் தேடிக் கொள்ளாத மனிதர்கள் பிறப்பது பூமிக்குப் பாரம்.

**1004. எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்**
**நச்சப் படாஅ தவன்.**

(புண்ணியமும் புகழுந்தான் மனிதனுக்குச் சிறப்பு அளிப்பன. புண்ணியத்தை நம்பாவிட்டாலும் புகழையாவது தேடவேண்டும்.) ஒருவராலும் விரும்பப்படாத உலோபி தனக்குப் பின்னால் உலகம் தன்னைப்பற்றி என்ன சொல்லும் என்பதைச் சிந்திப்பதில்லையே!

**1005. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய**
**கோடிஉண் டாயினும் இல்.**

(அதனால்,) பிறருக்குக் கொடுப்பது, தாம் அனுபவிப்பது ஆகிய இரண்டும் இல்லாதவர்கள் கோடி கோடியாகச் செல்வத்தைச் சேர்த்து வைத்தாலும் அவர்களுக்கு அதனால் ஒரு பயனுமில்லை.

**1006. ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் தக்கார்க்கொன்று**
**ஈதல் இயல்பிலா தான்.**

(அந்தச் செல்வத்தைச் சேர்ப்பதிலும் துன்பம்; பாதுகாப்பதிலும்

துன்பம்; உதவியற்ற செல்வமென்று ஊரார் பழிப்பதும் துன்பம். ஆகையினால்,) தானும் அனுபவிக்காமல் தகுதியுடைய பிறருக்கும் கொடுக்காமல் சேர்த்து மட்டும் வைக்கிறவனுடைய பெருஞ்செல்வம் அவனுக்கு வெறும் துன்பந்தான்.

1007. அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

(மேலும்,) ஏழைகளுக்கு ஓர் உதவி செய்யாதவனுடைய செல்வம் வெகு அழகுடைய ஒரு பெண், அந்த அழகை அனுபவிக்கக் கணவனில்லாமல் தனியாகவே இருந்து கிழவியாகி விடுவதைப் போன்றது.

1008. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

கொடைக்குணம் இல்லாததால் யாராலும் விரும்பப்படாத பணக்காரன் நடுஊரில் விஷமரம் நிரம்பப் பழுத்திருப்பதற்கே சமானம். (ஊராருடைய வெறுப்புக்கே அவன் ஆளாவான்.)

1009. அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

(உபகார குணம் இல்லாத உலோபி) அன்புச் செயல்களுக்கும் செலவிடாமல் தானும் உண்ணாமல் தன்னையே துன்பப்படுத்திக்கொண்டு தான தர்மத்தையும் கருதாமல் சேர்த்துவைக்கிற பெருஞ்செல்வத்தை, யாரோ அன்னியர்கள் அடைவார்களேயன்றி அருகிலுள்ளவர்களுக்கு அது பயன்படாது.

1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து.

பிறருக்கு உபகாரம் செய்வதால் புகழத்தக்கவர்கள் சிறிதுகாலம் வறுமை அடைந்துவிட்டாலும், அது மேகமானது சிறிது காலம் நீரற்ற நிலையில் ஆவியாக இருப்பதைப் போன்றது.

# 102. நாணுடைமை

1011. கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

பழிபாவமான காரியத்தைச் செய்யக் கூசுவதுதான் 'நாணுடைமை'. பெண்களின் கூச்சமான நாணம் என்பது வேறு.

1012. ஊணுடை எச்சம் உயிர்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(மனிதருக்குச் சிறப்புத்தருவது அந்த நாணுடைமை தான்.) எல்லா மனிதர்களுக்கும் உணவு, உடை முதலிய மற்றவைகள் ஒரே மாதிரிதான். ஆனால் மனிதர்களைச் சிறப்புக்களில் வேறுபடுத்துவது நாணுடைமை என்னும் பழிக்கஞ்சும் குணந்தான்.

1013. ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு.

(இந்த நாணுடைமைக் குணம் எந்த அளவுக்கு இருக்கிறதோ அந்த அளவுக்கு ஒருவன் சான்றாண்மை என்ற நிறைகுணம் உள்ளவனாகிறான்.) உயிர்களெல்லாம் உடம்பை ஆதாரமாகக் கொண்டு இயங்குவன. சான்றாண்மை என்ற பெருங்குணம் பழிக்கஞ்சும் நாணுடைமை என்ற நற் குணத்தை ஆதாரமாகக் கொண்டது.

1014. அணிஅண்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணிஅன்றோ பீடு நடை.

மனிதருக்கு அழகு, பழிபாவங்களுக்கு அஞ்சி நடக்கும் நாணுடைமை யல்லவா? அது இல்லாத மனிதன் எவ்வளவு சிறப்பான வாழ்க்கை நடத்தினாலும் அவன் சான்றோரால் வெறுக்கப்படுவான் அல்லவா?

1015. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

(சான்றாண்மைக்கு ஆதாரமாகிய நாணுடைமைக்கு இருப்பிடம்:) பிறருக்குப் பழி வருவதையும் தமக்குப் பழி வருவதைப்போலவே அஞ்சி நடப்பவர்கள் 'நாணுடைமை' என்னும் நற்குணத்துக்கு இருப்பிட மானவர்கள்.

**1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்**
**பேணலர் மேலா யவர்.**

(அப்படிப்பட்ட) மேன்மக்கள் தம்முடைய சான்றாண்மைக்குப் பாதுகாப்பாகிய நாணுடைமையை விட்டுவிட்டு இந்தப் பெரிய உலகமே தமக்குப் கிடைப்பதனாலும் விரும்ப மாட்டார்கள்.

**1017. நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்**
**நாண்துறவார் நாண்ஆள் பவர்.**

(அது மட்டுமன்று;) நாணுடைமை தவறாத சான்றோர்கள் நாணத்துக்காக உயிரைவிடுவார்களேயல்லாமல் உயிரைப் பெரிதாக எண்ணி நாணத்தை விட்டுவிட மாட்டார்கள்.

**1018. பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்**
**அறம்நாணத் தக்கது உடைத்து.**

(ஆகையினால்,) இன்னொருவர் செய்தால் அது பழியான காரியம் என்று தான் சொல்லுகிற ஒரு காரியத்தைத் தான் கூசாமல் பிறருக்குச் செய்வானாயின், அவன் வாழ்க்கை அறக்கடவுளால் அருவருக்கத்தக்கது.

**1019. குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்**
**நாணின்மை நின்றக் கடை.**

ஒருவன் மற்ற ஒழுக்கங்களில் தவறிவிட்டால் அது அவன் குலப்பெருமையை மட்டுந்தான் கெடுக்கும். ஆனால் பழிபாவங்களுக்குக் கூசாதவனாகி நாணுடைமை தவறிவிட்டால், அவனுடைய நல்வாழ்வு கெட்டுப்போகும்.

**1020. நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை**
**நாணால் உயிர்மருட்டி யற்று.**

(நாணுடைமை இல்லாதவர்கள், சொந்த உணர்ச்சி யில்லாத பொம்மைகளே. பிறர் சொன்னபடி எதையும் செய்துவிடுவார்கள்.) நாணுடைமை மனத்தில் இல்லாதவர்கள் உயிரில்லாத பொம்மை, சூத்திரக் கயிற்றால் ஆட்டப்பட்டு உயிருள்ளது போல் நடிப்பதற்கே சமானம்.

# 103. குடிசெயல்வகை

**1021. கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்**
**பெருமையின் பீடுடையது இல்.**

(ஒருவன் தான் பிறந்த குடித்தனத்தைப் பெருமையுள்ளதாக்குவதற்கு) 'வேலை செய்யத் தயங்கமாட்டேன்' என்று சொல்லும் மன உறுதியைவிடச் சிறந்த உபாயம் வேறில்லை.

**1022. ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்**
**நீள்வினையால் நீளும் குடி.**

(அந்த மன உறுதிக்குத் துணையாக) விடாமுயற்சி, காரியத்துக்கு வேண்டிய அறிவு ஆகிய இரண்டும் எப்போதும் சேர்ந்திருக்கும்படி காரியம் செய்தால் குடித்தனம் உயர்வடையும்.

**1023. குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்.**

(அந்த உறுதி இருந்தால்.) குடித்தனத்தின் நிலைமையை உயர்த்துவேன் என்று உறுதிகொள்ளும் ஒருவனுக்குத் தெய்வம் தானாகவே வந்து கச்சைக்கட்டிக்கொண்டு உதவி செய்யும்.

**1024. சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்**
**தாழாது உஞற்று பவர்க்கு.**

(அந்த நம்பிக்கையுடன்) தம்முடைய குடித்தனத்தின் உயர்வுக்கான முயற்சிகளைத் தளராமல் செய்து கொண்டேயிருப்பவர்களுக்கு அந்த நோக்கம் தடையின்றித் தானாகவே பூர்த்தியாகும்.

**1025. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்**
**சுற்றமாச் சுற்றும் உலகு.**

குற்றமில்லாத வழிகளில் பாடுபட்டுத் தன் குடித்தனத்தின் உயர்வுக்காக முயற்சி செய்து வாழ்கின்றவனை உலகத்தார் உறவாகச் சூழ்ந்து உதவுவார்கள்.

**1026. நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த**
**இல்லாண்மை ஆக்கிக் கொளல்.**

ஒருவனுக்குச் சிறப்புண்டாக்கும் வல்லமை என்று சொல்லத்தக்கது

எதுவெனில், (குற்றமற்ற உழைப்பின்மூலம்) அவன் தான் பிறந்த குடும்பத்தை வலிமையுள்ளதாகச் செய்துகொள்வதே.

**1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.**

போர்க்களத்தில் வெற்றி பெறும் பொறுப்பெல்லாம் சேனையில் உள்ள போர்வீரர்களில் தைரியம் உள்ளவர்களுடைய பாரமாகவே இருப்பதுபோல், ஒரு குடும்பத்திலும் அதை வலிமையுள்ளதாக்கும் பொறுப்பெல்லாம் அக்குடும்பத்தில் திறமையுள்ளவர்களுடைய பாரமாகத்தான் இருக்கும்.

**1028. குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்.**

(ஆனாலும், போர் முனையில் தைரியமுள்ளவனாக இருப்பவனுடைய பொறுப்பைவிடக் குடும்பத்தை உயர்வாக்கப் பாடுபடுகிறவனுக்குள்ள பொறுப்பும் உழைப்பும் அதிகம். ஏனெனில், போர்வீரனுக்குப் போர் நடக்கிறபோது மட்டுந்தான் வேலை. ஆனால்,) குடித்தனப் பொறுப்பை நடத்துகிறவர்களுக்கு வேலை செய்யும் பருவக்காலம் என்பதில்லை; எப்போதும் உழைப்புத்தான். அவர்கள் வேலைசெய்யச் சோம்பினாலும் அல்லது உழைப்புக்கு வெட்கப்பட்டாலும் குடும்ப நலம் கெட்டுப்போகும்.

**1029. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு.**

(ஓய்வே இல்லாமல் உழைக்க வேண்டியவனானதால்) தான் பிறந்த குடும்பத்துக்குத் தீங்கு வந்துவிடாதபடி பாதுகாக்கிற ஒருவனுடைய உடம்பு, துன்பங்களையே போட்டு வைக்க ஒரு பாண்டமோ என்னவோ தெரியவில்லை.

**1030. இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி.**

துன்பம் வந்துவிட்டால் தாங்கி நின்று சமாளிக்கக்கூடிய திறமைசாலிகள் இல்லாத ஒரு குடும்பம் துன்பங்களால் கால் ஒடிந்து விழுந்துவிடும்.

## 104. உழவு

*1031. சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்*
*உழந்தும் உழவே தலை.*

எப்படியெல்லாம் சுற்றிச் சுற்றி எண்ணிப் பார்த்தாலும் உலகத்திலுள்ள மனிதர்கள் உழவுத் தொழிலைப் பின் பற்றித்தான் உயிர்வாழ முடியும். அதனால் உழைப்பு மிகுந்த தொழிலானாலும் உழவுத் தொழில்தான் எல்லாத் தொழில்களிலும் மேலான தொழில்.

*1032 உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது*
*எழுவாரை எல்லாம் பொறுத்து.*

(மேலும்,) உழவுத் தொழில் செய்கிறவர்களே உலக மக்களடங்கிய தேருக்குக் கடையாணி போன்ற காப்பாளர். ஏனெனில், உணவு உற்பத்தி செய்யாமல் சமுதாயத்தின் மேற்பகுதியிலுள்ள மற்ற எல்லாருக்கும் உணவளித்து அவர்களைத் தாங்கிக் கொண்டிருப்பவர்கள் சமுதாயத் தேரின் அடிப்படையில் உள்ள உழவர்கள்தாம்.

*1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்.*

(அதனால்,) உழவுத் தொழில் செய்து தாமே உற்பத்தி செய்கிற உணவுப்பொருள் கொண்டு சீவிக்கிறவர்களே சுதந்திர வாழ்க்கை நடத்துகிறவர்கள்; மற்றவர்களெல்லாம் பிறரை வணங்கி அவர்கள் தயையினால் உண்டு, அடிமை வாழ்க்கை நடத்துகிறவர்களேயாவார்கள்.

*1034. பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்*
*அலகுடை நீழ லவர்.*

(ஏனென்றால்,) தானியக் கதிரைக் குடையாகக் கொண்டு ஆட்சி புரியும் மன்னர்களான உழவாளிகள் மற்ற குடைகளின் அதிகாரத்தில் ஆட்சிபுரியும் எல்லா மன்னர்களையும் தம்முடைய தயையைத் தேடிவரச் செய்கிறவர்கள்.

*1035. இரவார் இரப்பார்க்கொன்று ஈவர் கரவாது*
*கைசெய்தூண் மாலை யவர்.*

சொந்த உழைப்பினால் சோறுண்ணும் இயல்புடைய உழவாளிகள் பிறரிடத்தில் பிச்சை கேட்க மாட்டார்கள்; ஆனால் கேட்பவர்களுக்கு இல்லையென்னாமல் சிறிதேனும் கொடுப்பார்கள்.

**1036. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கும் நிலை.**

உழவுத்தொழில் நின்றுவிட்டால் எல்லா ஆசைகளையும் விட்டு விட்டோம் என்று சொல்லுகிற துறவிகளுக்கும் வாழ வழியில்லை.

**1037. தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்.**

உழுத நிலத்திலுள்ள உடைபட்ட மண் ஒரு பங்கு காற்பங்காகச் சுண்டும்படி ஆறவிட்டு விதைத்தால் கைப்பிடி எருகூடப் போடா விட்டாலும் மிகுந்த விளைச்சல் உண்டாகும்.

**1038. ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு.**

(மேலும் கவனிக்க வேண்டியவை:) முக்கியமாக, நிலத்தை ஆழமாக உழவேண்டும். அதைவிட முக்கியமாக எருப்போட வேண்டும். அதைவிட முக்கியமாகக் களையெடுத்து நீர் பாய்ச்சுவதைவிடப் பயிருக்கு அழிவோ நோயோ வந்துவிடாதபடி பாதுகாக்க வேண்டும்.

**1039. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்.**

நிலத்துக்கு உடையவன் (நிலவளத்தைக் கவனித்துப் பயிரைப் பாதுகாக்க அடிக்கடி) நிலத்துக்குப் போகாமல் இருந்துவிட்டால் அந்த நிலம் (கணவனால் கவனிக்கப்படாத மனைவி கணவனுக்குச் சோறு போடப் பிணங்கிக் கொள்வதுபோல்) உணவளிக்கப் பிணங்கிவிடும்.

**1040. இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்.**

நிலத்தை வைத்துக்கொண்டு உணவுக்கு வழியில்லையென்னும் சோம்பேறிகளைக் காணும்போது பூமிதேவியானவள் சிரித்துப் பரிகாசம் செய்வாள்.

# 105. நல்குரவு

***1041.* இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது.**

வறுமையைப்போல் துன்பப்படுத்துவது எதுவென்றால், ஒருவனுக்கு எப்பொருளும் இல்லாதபடி துன்பப்படுத்தும் அவ்வறுமையேதான்.

***1042.* இன்மை எனஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும்.**

(வறுமை எப்படி வருகிறதென்றால்,) ஒருவன் செய்த பாவமானது வறுமை என்ற பெயரோடு அவனுக்கு இப் பிறப்பின் இன்பங்களும் மறுபிறப்புக்கான எண்ணங்களும் இல்லாமற் போகும்படி அவனிடம் வந்துசேருகிறது.

***1043.* தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக**
**நல்குரவு என்னும் நசை.**

(பாவங்களின் பலனாக வருகிற) தரித்திரம் வந்து விட்டால், ஒருவன் செல்வச் சிறப்புக்களுடைய நல்குடியிற் பிறந்தவனானாலும் அந்தக் குடும்பத்துக்குள்ள வசதி களையும் புகழையும் ஏககாலத்தில் கெடுத்துவிடும்.

***1044.* இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த**
**சொற்பிறக்கும் சோர்வு தரும்.**

(எப்படியென்றால்,) தரித்திரம் வந்துவிட்டால் ஒழுக்கத்திற் சிறந்த நல்ல குடும்பத்திற் பிறந்தவர்களிடத்திலுங்கூட அவர்களைப்பற்றி இழிவான வதந்திகள் பிறக்கக்கூடிய பலவீனங்களை (அது) உண்டாக்கிவிடும்.

***1045.* நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்**
**துன்பங்கள் சென்று படும்.**

தரித்திரம் என்ற ஒரு துன்பத்தினால், பலவிதமாகச் சொல்லப்படுகிற மற்ற எல்லாக் குற்றங்களும் வந்து சேர்ந்துவிடும்.

***1046.* நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்**
**சொற்பொருள் சோர்வு படும்.**

(வறுமை இருந்தும் குற்றம் செய்யாதவர்களும் உண்டு. ஆனாலும் அவர்களை யாரும் மதிக்க மாட்டார்கள். அவர்கள்) நல்ல அறிவை

ஆராய்ச்சியுடன் சொன்னாலும் ஏழைகள் சொல்லுகின்ற அறிவுகள் ஏற்றுக் கொள்ளப் படாமல் பயனற்றவையாகும்.

**1047. அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்**
**பிறன்போல நோக்கப் படும்.**

(புண்ணியப் பலன் சிறிதளவுகூட இல்லாதவனுக்கு நீங்காத வறுமை இருக்கும். அதோடு) புண்ணியப்பலன்கள் இல்லாததால் உண்டாகிற நீடித்த தரித்திரத்தை அடைந்து விட்டவன் பெற்றெடுத்த தாயாலுங்கூட அன்னியன்போல அசட்டை செய்யப்படுவான்.

**1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்**
**கொன்றது போலும் நிரப்பு.**

(அப்படி நீங்காத நித்திய தரித்திரம் உள்ளவனுக்கு ஒருநாள்போவது ஒரு மலையாக இருக்கும். அவன் தினந்தினம் எப்படி நடுங்குவான் என்றால்,) நேற்று வந்து என்னைக் கொன்று விடுவது போலத் துன்பப் படுத்திய தரித்திரம் இன்றைக்கும் வந்துவிடுமோ (என்று ஏங்குவான்.)

**1049. நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்**
**யாதொன்றும் கண்பாடு அரிது.**

(அவனுக்கு நிம்மதியே இருக்காது.) நெருப்பின் மத்தியில் இருந்து கொண்டு கூடத் தூங்கிவிடலாம்; ஆனால் தரித்திரத்தில் இருந்து கொண்டு துளிகூடத் தூங்க முடியாது.

**1050. துப்புரவு இல்லார் துவரத் துறவாமை**
**உப்பிற்கும் காடிக்கும் கூற்று.**

உணவுக்கும் வழியில்லாத நித்திய தரித்திரர்கள் எல்லா ஆசைகளையும் விட்டொழித்துத் துறவறம் மேற்கொள்வது நல்லது. இல்லாவிட்டால், பிறர் வீட்டு உப்புக்கும் புளித்த கஞ்சிக்கும் கேடாகப் பிச்சையெடுத்து மானங்கெட வேண்டியதுதான்.

# 106. இரவு

**1051. இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்**
**அவர்பழி தம்பழி யன்று.**

பிச்சை கேட்கிறவர்கள் பிச்சை கொடுக்க வசதிகள் உள்ள செல்வமுடையவர்களைக் கண்டு கேட்கலாம். அந்தச் செல்வமுள்ளவர்கள் வைத்துக்கொண்டே இல்லையென்று சொல்லிவிட்டால் அது அவர்களுக்குப் பாவமேயன்றிப் பிச்சை கேட்பவர்களுடைய குற்றமல்ல.

**1052. இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின்.**

பிச்சை கேட்ட பொருள் கொடுப்பவருக்கோ வாங்குகிறவருக்கோ வருத்தமுண்டாகாமல் கிடைக்குமானால், பிச்சை கேட்பதும் ஒருவனுக்கு இன்பமான காரியந்தான்.

**1053. கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று**
**இரப்புமோ ரேஎர் உடைத்து.**

கபடமற்ற மனமுள்ளவர்களாக, ஏழைகளுக்கு உதவி செய்ய வேண்டியது தமது கடமையே என்பதை உணரும் அறிவாளிகளுக்கு முன்னால் நின்று பிச்சை கேட்பது ஓர் அழகான காட்சிதான். (ஏனென்றால்,)

**1054. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்**
**கனவிலும் தேற்றாதார் மாட்டு.**

வைத்துக்கொண்டே கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லுவதைக் கனவிலும் அறியாதவர்களிடத்தில், ஒருவன் சென்று தானம் கேட்பதை, (அவர்கள் அவன் தமக்குப் புண்ணியத்தை தானம்) கொடுக்க வந்ததாகவே வரவேற்பார்கள்.

**1055. கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்ணின்று**
**இரப்பவர் மேற்கொள் வது.**

இல்லையென்னாமல் கொடுப்பவர்கள் உலகத்தில் இருப்பதனால் தான் பிச்சை கேட்பவர்கள் ஆலோசனையில்லாமல் எல்லாரிடத்திலும் பிச்சை கேட்டுவிடுகிறார்கள்.

**1056. கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை**
**எல்லாம் ஒருங்கு கெடும்.**

வைத்துக்கொண்டே இல்லையென்று மறைக்கும் குற்றம் இல்லாதவர் களாக, உலகத்தில் எல்லாரும் இருந்து விட்டால் வறுமையினால் வரும் எல்லாத் துன்பங்களும், மனிதன் பிச்சை கேட்க வேண்டிய அவசியமே இல்லாததால் உடனே ஒழிந்து போகும். (அது உலகத்தில் முடியாத காரியம். எனவே,)

**1057. இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து.**

பிச்சை கேட்கிறவர்களை இழிவாக அவமதித்துப் பேசாமல் மனம் மகிழ்ந்து கொடுப்பவர்கள் உண்டானால் பிச்சையெடுப்பதன் துன்பம் குறைந்து இன்பம் உண்டாகும்.

**1058. இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று.**

ஈரம் சூழ்ந்த இடமாகிய இவ்வுலகத்தில் பிச்சை கேட்பவர் இல்லாவிட்டால், (மனிதனுக்கு மனிதன் ஈரமுள்ளவனாக இருக்க வேண்டிய காரணமில்லாமல்) மக்களுடைய வாழ்க்கை உலர்ந்துபோன மரத்தால் செய்யப்பட்ட பொம்மைகள் போவதும் வருவதும் போலத்தான் உயிரோ உணர்ச்சியோ இல்லாததாக இருக்கும்.

**1059. ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்**
**மேவார் இலாஅக் கடை.**

கேட்டு வாங்கிக் கொள்ளுகிறவர்கள் இல்லாவிட்டால் கொடுக்கக் கூடிய செல்வர்களுக்குப் பெருமை என்பது எங்கிருந்து வரும்?

**1060. இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை**
**தானேயும் சாலும் கரி.**

(அதனால் யாரும்) தம்மிடம் வந்து பிச்சை கேட்பவனைக் கோபித்து வெருட்டி விடக்கூடாது. அப்படிச் செய்தால் என்ன துன்பம் தமக்கு வந்துவிடும் என்பதை உணர்த்த அந்தப் பிச்சைக்காரன் படுகிற துன்பங்களே போதுமான சாட்சியம்.

## 107. இரவச்சம்

**1061. கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.**

இல்லையென்று சொல்லாமல் கொடுக்கும் இயல்பு உடைய கண்போன்ற மிகச் சிறந்த மனிதர்களிடத்திலேயாயினும் போய்ப் பிச்சை கேட்காமலிருப்பது (கேட்பதை விடக்) கோடி பங்கு பெருமையுள்ளது.

**1062. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.**

பிச்சை வாங்கியேதான் பிழைப்பு நடத்தவேண்டும் என்றால், அப்படிப்பட்ட நிலைமையுள்ளதாக இந்த உலகத்தை உண்டாக்கினவன் யாரோ அவன் பிச்சைக்காரர்களைப்போல் அலைந்து திரிந்து பிச்சை கிடைக்காமல் அழிந்து போகட்டும்!

**1063. இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்டது இல்.**

பாவத்தால் உண்டாகிற தரித்திரத்தின் துன்பத்தைப் பிச்சை வாங்கியே தீர்த்துக்கொள்ளலாம் என்று நம்புவதை விட முரட்டு நம்பிக்கை வேறில்லை.

**1064. இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு.**

பணத்திற்கு வழியே இல்லாத காலத்திலுங்கூடப் பிச்சை கேட்க இணங்காத பெருங்குணம் (அண்டங்களெல்லாம் அடங்கிய) ஆகாய வெளி முழுதும் சேர்ந்தாலும் போதாது என்னும்படி அவ்வளவு பெரியது.

**1065 தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல்.**

(அப்படிப்பட்டவர்களுக்கு,) தெளிந்த நீரைப்போல் உணவுப்பொருள் அதிகமில்லாமல் காய்ச்சப்பட்ட வெறும் கஞ்சியானாலும் தம்முடைய சொந்த உழைப்பினால் சம்பாதிக்கப்பட்டதை உண்பதைவிட இன்பமானது வேறில்லை.

**1066. ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்தது இல்.**

(தெய்வமாகவும் கொண்டாடப்படுகிற) பசுமாட்டிற்குத் தண்ணீர் வேண்டுமென்று தானங்கேட்டாலும், தானங் கேட்பதைவிட நாக்குக்கு இழிவான காரியம் வேறில்லை.

**1067. இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்**
**கரப்பார் இரவன்மின் என்று.**

பிச்சையெடுக்க நேர்ந்தாலும், வைத்துக்கொண்டு இல்லையென்று சொல்லுகிறவர்களிடம் பிச்சை கேட்க வேண்டாம் என்று பிச்சை கேட்க எண்ணுகிறவர்களை யெல்லாம் நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**1068. இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்**
**பார்தாக்கப் பக்கு விடும்.**

பிச்சையெடுத்தல் என்னும் நங்கூரமில்லாத மரக்கலம் (போன்ற மனம்), வைத்துக்கொண்டே இல்லையென்று சொல்லும் (கன்னெஞ்சாகிய) பாறையில் மோதினால் உடைந்துபோகும்.

**1069. இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள**
**உள்ளதூஉம் இன்றிக் கெடும்.**

பிச்சை கேட்கும் பரிதாபத்தை நினைத்தாலே மனம் உருகிவிடும். அப்படியிருக்க ஒருவன் தன்னிடத்தில் உள்ளதை இல்லையென்று சொல்லுகிறானே! அதை நினைத்தால் அவன் வைத்துக்கொண்டே இல்லையென்று சொல்லுகிற பொருள் அவனுக்கு இல்லாமலே போய் விடும் என்பதைத்தான் காட்டுகிறது.

**1070. கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்**
**சொல்லாடப் போஒ உயிர்.**

பிச்சை கேட்கிறவர்கள் தம்மிடம் வந்து குறைகளைச் சொல்லிக் கொள்ளும்போது உள்ளதை இல்லையென்று சொல்லுகிறவர்களுடைய உயிர் எங்கே ஓடி ஒளித்துக் கொள்ளுகிறதோ தெரியவில்லை! (அவர்கள் உணர்ச்சியற்ற பிணங்களா?)

# 108. கயமை

**1071. மக்களே போல்வர் கயவர் அவரன்ன**
**ஒப்பாரி யாங்கண்டது இல்.**

கயவர் என்று சொல்லத்தக்க கீழ்மக்கள் பார்ப்பதற்கு மனிதர்களாகவே இருப்பார்கள். (ஆனால் அவர்களிடத்தில் மனிதத் தன்மை இருக்காது.) அவர்களுக்கு ஒப்புச்சொல்ல நாம் அறிந்த வரையில் எவருமில்லை.

**1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்**
**நெஞ்சத்து அவலம் இலர்.**

கயவர் எனப்படும் கீழ்மக்கள் நன்மை தீமைகளை ஆராயும் அறிவாளிகளைவிடப் பாக்கியசாலிகள். ஏனென்றால், அவர்கள் மனத்தில் நன்மை தீமைகளைப் பற்றிய விசாரமே கிடையாது.

**1073. தேவர் அனையர் கயவர் அவருந்தாம்**
**மேவன செய்தொழுக லான்.**

மற்றெந்த நியாயங்களையும் கவனிக்காமல் தாம் இச்சைப்பட்டதையெல்லாம் செய்து மறைந்து திரியும் காரணத்தால் கயவர் என்ற அவர்களும் தேவர்களுக்குச் சமானம் (என்றே சொல்லலாம்).

**1074. அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.**

(சமுதாயத்தின் கட்டுத் திட்டங்களை மதிக்காமல் நடப்பதனால் கயவர் தேவர்களுக்குச் சமானம் என்று ஏளனமாகச் சொன்னதன்றி அவர்களுக்கும் தேவர்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. கயவருடைய இலக்கணம்) அகந்தை மிகுந்த போக்கிரிகளைக் கண்டால் கயவர்கள் அவர்களுடன் சேர்ந்து போக்கிரித்தனத்தில் அவர்களுக்கும் மிஞ்சினவர்களாகிக் களித்துக் கொம்மாளம் போடுவார்கள்.

**1075. அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்**
**அவாஉண்டேல் உண்டாம் சிறிது.**

அச்சமுண்டாகிறபோதுதான் அவர்கள் ஒழுங்காக நடந்து கொள்வார்கள். அது தப்பினால், ஏதேனும் ஒரு பொருளை

யாரிடத்திலாவது பெறவேண்டுமென்று ஆசைப்படுகிற சமயத்திலும் ஒழுங்காக நடிப்பது உண்டு.

**1076. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்.**

தம் காதில் விழுகிற இரகசியங்களைப் பல இடங்களுக்கும் தாமே வலியச் சென்று சொல்லுகிற குணத்தால் கயவர்கள் பறைசாற்றும் தமுக்குக்குச் சமானமானவர்கள்.

**1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்**
**கூன்கைய ரல்லா தவர்க்கு.**

(கயவர்கள் தம்முடைய) தாடையில் அடித்துப் பல்லை உடைக்கக் கூடிய கைவலிமை உடையவர்களுக்கன்றி மற்ற யாருக்கும் உணவுண்ட ஈரக் கையைக்கூட உதறித் தெறிக்க மாட்டார்கள்.

**1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்**
**கொல்லப் பயன்படும் கீழ்.**

நல்லவர்கள் வேண்டியதைச் சொன்னவுடன் கொடுப்பார்கள். கயவர்களோ கரும்பை ஆலையில் கொடுப்பது போல் நசுக்கிப் பிழிந்தால் தான் கொடுப்பார்கள்.

**1079. உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகும் கீழ்.**

யாராவது நல்ல உடைஉடுத்து நல்ல உணவுண்டு சுகமாக இருப்பதைக் கண்டால், கயவர்கள் அவர்கள்மீது குற்றம் கற்பித்துத் தூற்றுவதற்கே தம்முடைய திறமையைச் செலுத்துவார்கள்.

**1080. எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்**
**விற்றற்கு உரியர் விரைந்து.**

(கயவர்கள் எந்த நல்ல காரியத்துக்கும் உதவ மாட்டார்கள். பின்) கயவர்கள் எதற்காவார்கள்? சமயம் நேர்ந்தால் தீயகாரியங்களைச் செய்யக் கூலிக்காரர்களாகத் தம்மை உடனே விலைக்கு விற்றுவிடத்தான் உதவுவார்கள்.

# 109. தகையணங்குறுத்தல்

***1081. அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை***
***மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.***

*(தலைவன் சொல்வது: எதிரே காணப்படுகிற இந்த அழகான வடிவம்) ஒரு தேவதையோ! அல்லது சிறந்த இனமாகிய ஒரு மயிலோ! காதுகளில் கனத்த குண்டலங்கள் இருப்பதால் ஒரு மானிடப் பெண்தானோ! தீர்மானிக்க முடியாமல் என் மனம் திகைக்கிறது.*

***1082. நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு***
***தானைக்கொண் டன்னது உடைத்து.***

*(அவளை உற்றுப்பார்த்த) என் பார்வைக்கு எதிர்ப் பார்வையாக அவளும் என்னைப் பார்த்தாள். அப்பார்வையின் முன் நான் அவளைப் பார்த்தவுடனே எனக்குத் திகைப்புண்டாக்கிய அழகு இப்போது அவளுடைய கண்ணாகிய வேலாயுதங்கொண்டு என்னைக் குத்துவது போல் இருக்கிறது.*

***1083. பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்***
***பெண்டகையால் பேரமர்க் கட்டு.***

*எம வேதனை என்று சொல்லப்படுவது என்ன என்பதை இதுவரையிலும் நான் அறிந்ததில்லை. இப்போது அறிந்துகொண்டேன். எம வேதனை என்பது பெண்ணழகு என்ற வடிவத்துடன் துன்பம் உண்டாக்கக்கூடிய கண்களை உடையது.*

***1084. கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்டகைப்***
***பேதைக்கு அமர்த்தன கண்.***

*பார்க்கிறவர்களுடைய உயிரைக் கவர்ந்துவிடுகிற காரணத்தால் அழகு நிறைந்த இந்தக் களங்கமற்ற பெண்ணுக்குக் கண்கள் மட்டும் அவளுடைய நல்ல இயல்புக்கு விரோதமான சுபாவமுள்ளனவாக இருக்கின்றனவே!*

***1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்***
***நோக்கம்இம் மூன்றும் உடைத்து.***

*எமனைப்போல உயிரை வதைக்கிற தன்மையும், சாதாரணக் கண்ணின் இனிமையும், பெண்மான் மருள் வதைப் போன்ற தன்மையும் ஆகிய இந்த மூன்றும் கலந்ததாக இருக்கிறது (இவள் பார்வை).*

**1086. கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்இவள் கண்.**

(இதோ இவளுடைய) வளைந்த புருவங்கள் இன்னும் வளையும்படி கண்களைச் சுருக்கி என்னைப் பார்க்கிற இந்தப் பார்வை எனக்கு முன்போல் அச்சமும் துன்பமும் உண்டாக்கவில்லை.

**1087. கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலை மேல் துகில்.**

(அச்சம் நீங்கி விட்டால்) இந்தப் பெண்ணின் திரண்டு மதர்த்து நிமிர்ந்திருக்கிற முலைகளின்மேல் இவளுடைய மேலாடை படிந்திருப்பது மதமிகுந்த யானையின் மத்தகங்களின்மீது முகச்சீலை படிந்திருப்பது போல் கவர்ச்சி தருகிறது.

**1088. ஒண்ணுதற் கொஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு.**

(அதனால் இவள் கன்னிகையென்றே தெரிகிறது. இவளைக் கலவிக்கு அழைப்பதில் குற்றமில்லை.) போர்க்களத்தில் பகைவர்களும் அஞ்சுகின்ற என் வலிமை, இந்த அழகான பெண்ணைக் கண்டு நடுங்கிவிட்டதே.!

**1089. பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து.**

பெண்மான் போன்ற வஞ்சகமற்ற பார்வையும் நாணமுமே இப்பெண்ணுக்கு ஆபரணங்களாக இருக்க, அநாவசியமான வேறு ஆபரணங்கள் எதற்காகவோ தெரியவில்லை.

**1090. உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று.**

தீமை தருகின்ற கள், அதைக் குடித்தவர்களுக்குத்தான் களிப்புண்டாக்கும். ஆனால் பெண்ணழகால் உண்டாகும் காமக்களிப்போ பெண்ணைக் கண்டாலே வந்துவிடுகிறது. ('இவள் என்னுடன் கலவிக்கு இணங்குவாளா என்பதை அறியவேண்டும்' என்று தலைமகன் சொல்லிக்கொள்கிறான்.)

## 110. குறிப்பறிதல்

1091 இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

இவளுடைய மைதீட்டிய கண்களில் இரண்டு விதமான பார்வைகள் இருக்கின்றன. ஒருவிதப் பார்வை காமநோய் உண்டாக்குவதாக இருக்கிறது. இன்னொருவிதப் பார்வை அந்தக் காமநோயைத் தணிக்கும் மருந்தாக இருக்கிறது.

1092. கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது.

கண்கள் மறையும்படி இமைகளைச் சுருக்கிக் கொண்டு இப்பொழுது இவள் பார்க்கிற இந்தச் சிறுபார்வைதான் காமநோயைத் தணிக்கச் செம்மையான பக்குவமுள்ள மருந்து. முன்பார்த்த பெரிய பார்வை அப்படியன்று. (அது நோயுண்டாக்கியது.)

1093. நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்.

(அப்படிக் கண்களைச் சுருக்கிப் பார்த்த இவள் தனக்கும் காமஆசை உண்டாகியிருப்பதை உறுதிப்படுத்துவது போல) என்னைச் சிறு பார்வையாகப் பார்த்தாள். உடனே தலைகுனிந்து கொண்டாள். இவள் அப்படிச் செய்தது, சம்மதம் என்ற பயிருக்கு நீர் பாய்ச்சியதுபோல் இருந்தது.

1094. யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்

(அப்படித் தலைகுனிந்த இவள்) நான் இவளைப் பார்க்கிற போதெல்லாம் இவள் தலைகுனிந்துகொண்டு நிலத்தைப் பார்ப்பதும், நான் இவளைப் பார்க்காதிருக்கிற போது இவள் என்னைப் பார்த்துப் புன்சிரிப்புச் செய்வதும் ஆனாள்.

1095. குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

(சிறிதுநேரம் அப்படிச் செய்த இவள்) நேராக என்னைப் பார்க்கவில்லையே தவிர, எங்கோ பார்க்கிறவள் போலக் கடைக்கண்ணால் என்னையே பார்த்துச் சிரிப்பாள்.

**1096. உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்**
**ஒல்லை உணரப் படும்.**

விருப்பம் இல்லாதவள் போலப் பேசினாலும் வெறுப்பு இல்லாமல் பேசுகின்ற சொற்களிலிருந்து விருப்பம் இருக்கிறதென்பதை விரைவில் கண்டுகொள்ள முடிந்தது.

**1097. செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்**
**உறாஅர்போன்று உற்றார் குறிப்பு.**

(அதனால் இவள் இசைவாள் என்று அறிந்து கலவிக்கு அழைத்தேன். அப்போது இவளுடைய) கோபமில்லாத மறுப்புச் சொற்களும், கோபித்தது போன்ற பார்வையும் காம ஆசை வராதவர்கள் போல் காட்டிக் கொள்ளுகிற காம ஆசைவந்துவிட்ட பெண்களின் அடையாளம் (என்பதைக் காட்டின).

**1098. அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்**
**பசையினள் பைய நகும்.**

அதனால் நான் மேலும் துணிவடைந்து அவளைப் பார்த்தேன். அந்தச் சமயத்தில் இவளுடைய சம்மதத்திற்கு அறிகுறியாக ஓர் அழகான நிகழ்ச்சி உண்டாயிற்று; என்னவெனில் இவள் நேராக என்னைப் பார்த்துச் சிரித்தாள்.

**1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே யுள.**

(உடனே இவள் ஒன்றும் அறியாதவள்போல் சாதாரண முறையில் வெறும்பார்வை பார்த்தாள். நானும் அப்படியே பார்த்தேன்.) ஒருவரை யொருவர் அறியாதவர்கள்போல வெறும் பார்வை பார்த்துக்கொள்ளுகிற வழக்கம் உண்மையான காதலர்களாகி விட்டவர்களுக்கிடையில் உண்டு.

**1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல.**

கண்களும் கண்களும் பொருந்தி நோக்கத்தில் ஒத்துக் கொண்டு விட்டதால் பேச்சுக்கு அவசியமில்லை (அதனால் புணர்ந்தோம்).

# 111. புணர்ச்சி மகிழ்தல்

**1101. கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.**

கண், காது, நாக்கு, மூக்கு, உடல் ஐந்து புலன்களும் ஏககாலத்தில் அதனதன் இன்பத்தை அநுபவிப்பது பெண்ணைப் புணரும்போதுதான் உண்டு.

**1102. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.**

மற்ற வியாதிகளைத் தீர்க்க அந்தந்த வியாதி உண்டாக்கிய காரணத்துக்கு நேர்மாறான குணமுள்ள மருந்தை வெவ்வேறு இடங்களிலிருந்து கொண்டுவர வேண்டும். ஆனால் பெண்ணினால் உண்டாகும் காம நோயைத் தீர்க்கும் மருந்து அந்தப் பெண் ணிடத்திலேதான் கிடைக்கும்.

**1103. தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.**

தாம் காதலிக்கிற பெண்ணின் மிருதுவான தோள்களைத் தழுவிக் கொண்டு படுத்துறங்கும் இன்பத்தைப்போல் திருமால் உலகமாகிய வைகுந்தத்தில் சீவான்மா பரமான்மாவைத் தழுவுகின்ற ஆலிங்கனத் திலுங்கூட உண்டா?

**1104. நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.**

(காதலியின் அணைப்பை விட்டுப் பிரிய முடியவில்லையே!) பிரிந்து விலக விலகச் சுடுகின்றது; நெருங்க நெருங்கக் குளிர்ச்சி தருகின்றது. இப்படிப்பட்ட நெருப்பு இவளுக்கு எங்கே கிடைத்தது?

**1105. வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.**

மலரின் இதழைப்போல அருமையான மணமும் மென்மையுமுள்ள கன்னங்களையுடைய என் காதலியின் புணர்ச்சியில் நான் மனத்தில் எந்தெந்தப் பொருளை விரும்பி நினைக்கிறேனோ அந்தந்தப் பொரு ளாகவே அவளுடைய அங்கங்கள் எனக்கு இன்பமளிக்கின்றனவே!

**1106. உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு**
**அமிழ்தின் இயன்றன தோள்.**

அவளுடைய உடலைத் தீண்டும்போதெல்லாம் என் உயிருக்குப் புதுப் புதுச் சீவசக்தி உண்டாவதால் அவளுடைய உடல் அமிர்தத்தால் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

**1107. தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்**
**அம்மா அரிவை முயக்கு.**

அம்மா! என்ன ஆச்சரியம்! காதலியை இறுகத் தழுவியபடியே எவ்வளவு நேரமிருந்தாலும் அது யோகியர்கள் தம்முடைய உடம்பிலிருந்தே ஒரு பகுதிச் சத்தை உணவாக உட்கொண்டு உலகத்தை மறந்து நெடுங்காலம் நிட்டையில் இருப்பது போன்றதாக இருக்கிறது.

**1108. வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை**
**போழப் படாஅ முயக்கு.**

(அப்படி விட்டுப்பிரியாமல் கட்டித் தழுவிக்கொண்டே யிருப்பதை நான் மட்டுமல்ல, என் காதலியும் விரும்புகிறாள்.) இடையில் காற்றுக்கூடப் புகுந்து பிளவுண்டாக்க முடியாதபடி இறுகத் தழுவிக் கொண்டிருப்பது ஒருவரையொருவர் காதலிக்கின்ற இருவரும் விரும்புகின்ற இன்பம்.

**1109. ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்.**

(ஆயினும் பிரிய வேண்டியதுதான்.) புணர்ந்தபின் பிரிவதும், பிரிந்திருக்கும்போது மீண்டும் காம உணர்ச்சி பெறுவதும், மீண்டும் புணர்வதும் ஆகிய இந்த முறை காமப் புணர்ச்சியில் காதலர்களுடைய அனுபவம்.

**1110. அறிதோறு அறியாமை கண்டாற்றல் காமம்**
**செறிதோறும் சேயிழை மாட்டு.**

நல்லறிவைக் கற்கின்ற ஒவ்வொரு தரமும் அந்த அறிவும் முன் அறியாத புது அறிவாகவே புலப்படுவதுபோல, அழகான ஆபரணங்களை அணிந்த பெண்ணைப் புணருகிற ஒவ்வொரு முறையும் காம இன்பம் முன் அனுபவிக்காத இன்பம் போலவே இருக்கிறது.

# 112. நலம்புனைந்துரைத்தல்

*1111. நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்*
*மென்னீரள் யாம்வீழ் பவள்.*

(மலர்களிலெல்லாம் மிகவும் மென்மையானதாக, முகர்ந்தாலும் வாடிப்போகும் இயல்புடைய அனிச்ச மலரைப் பார்த்துக் காதலன் சொல்லுகிறான்:) அனிச்ச மலரே! நீ மிகவும் மிருதுவான நல்ல இயல்புடைய மலர்தான். ஆனாலும் நான் காதலிக்கும் பெண் உன்னைவிட மிருதுவான இயல்பினள்.

*1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்*
*பலர்காணும் பூவொக்கும் என்று.*

மனமே! ஒரு பூவைப் பார்த்தவுடனே பலபேர் காணப் பொதுவில் பூத்திருக்கும் அந்தப் பூ என் காதலியின் கண்ணுக்குச் சமானமாக இருக்கிறதென்று மயங்குகிறாயே!

*1113. முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்*
*வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.*

என் காதலியினது மேனி நிறம் மாந்தளிர் போன்றது; பற்கள் முத்துக்கள் போன்றவை! மேனியின் இயல்பான வாடை மிக்க வாசனை யுள்ளது; மை தீட்டிய கண்கள் நஞ்சூட்டிய வேல்கள் போன்றவை; தோள்கள் பளபளப்பிலும் மினுமினுப்பிலும் மூங்கிலைப் போன்றவை.

*1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்*
*மாணிழை கண்ணொவ்வேம் என்று.*

குவளைமலர் என் காதலியைப் பார்த்தால் சிறந்த ஆபரணங்களை அணிந்துள்ள அவளுடைய கண்களுக்குத் தாம் இணையாக இல்லாமைக்கு வெட்கப்பட்டுத் தலையைக் குனிந்து கொண்டு நிலத்தைப் பார்க்கும்.

*1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு*
*நல்ல படாஅ பறை.*

மிகவும் இலேசான அனிச்ச மலரேயானாலும் அதன் காம்பை நீக்காமல் தலையில் சூடிக்கொள்வாளானால் அதன் பிறகு அவளுடைய இடையைப் பற்றி நல்ல பேச்சுப் பிறக்காது. (இடை ஒடிந்து போயிற்று என்ற துன்பச் சொல்தான் பிறக்கும்.)

**1116. மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியிற் கலங்கிய மீன்**

சந்திரனுக்கும் இந்தப் பெண்ணின் முகத்துக்கும் வேற்றுமை அறிந்துகொள்ள முடியாமல் வானத்திலுள்ள நட்சத்திரங்கள் தாம் இருக்க வேண்டிய இடத்தைவிட்டு மாறிவிட்டோமோ என்று குழப்பமடைந்தன.

**1117. அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
**மறுவுண்டோ மாதர் முகத்து.**

பிரகாசத்தில் பெரும்பாலான நாட்களில் மூளியாகவே இருப்பதும், பூரணமாக இருக்கிற நாளிலும் நடுவில் களங்கமுள்ளதாக இருப்பதும் சந்திரனுக்கு உண்டு. ஆனால் பெண்ணின் முகம் அப்படிப்பட்டதன்று.

**1118. மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
**காதலை வாழி மதி.**

சந்திரனே! நீ பெண்களின் முகத்தைப்போல் பிரகாசிக்க முடியுமானால் நீயும் ஒருவனால் காதலிக்கப்படுவாய். பிறகு நானும் உன்னை வாழ்த்துவேன்.

**1119. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்**
**பலர்காணத் தோன்றல் மதி.**

(சந்திரனே!) மலர்போன்ற கண்ணுள்ள என் காதலியின் முகம்போல் பிரகாசமுள்ள பெண்ணாக நீ மாறிவிட்டால், அதன் பிறகு இப்படிப் பலபேர் உன்னைப் பார்க்கும்படி வெளியே திரியக்கூடாது.

**1120. அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம்.**

மிகவும் மிருதுவாகிய அனிச்சப்பூவும் அன்னப் பறவையின் சிறு மயிருங்கூட (என் காதலியின் பாதங்களில்) நெருஞ்சி முள்போலக் குத்திவிடக் கூடியவை என்னும்படி அவ்வளவு மிருதுவானவை என் காதலியின் பாதங்கள்.

# 113. காதற் சிறப்புரைத்தல்

**1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி**
**வாலெயிறு ஊறிய நீர்.**

(காதலன் சொல்வது:) நயமான சொற்களைப் பேசும் என் காதலியின் வெண்மையான பற்களிடையே ஊறி வந்த அவளுடைய வாயூறல் நீரை நான் உண்டது, பாலும் தேனும் கலந்துண்டதுபோல உணவும் ஊக்கமும் தந்ததே!

**1122. உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு.**

உடம்புக்கும் உயிருக்கும் எப்படிப்பட்ட உறவோ அப்படிப்பட்ட உறவே இந்தப் பெண்ணுக்கும் எனக்கும்.

**1123. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்**
**திருநுதற்கு இல்லை இடம்.**

என் கண்ணின் கருமணியில் இருக்கிற பாவையே! நீ தூரப்போ. நான் காதலிக்கிற இந்த அழகான பெண்ணை நீ இருக்கிற இடத்தில் வைக்க விரும்புகிறேன்.

**1124. வாழ்தல் உயிர்கன்னள் ஆயிழை சாதல்**
**அதற்கன்னள் நீங்கு மிடத்து.**

தேர்ந்தெடுத்த ஆபரணங்களை அணிந்துள்ள என் காதலி என்னுடன் இருக்கிற வரையிலும் எனக்கு உயிர் இருப்பது போன்றவள். அவள் பிரிந்தால், என் உயிர் பிரிந்தது போன்றவள்.

**1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்**
**ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.**

ஆசை மூட்டுகின்ற ஒளியோடு கூடிய கண்களையுடைய என் காதலியின் குணச் சிறப்பை மறந்தாற்போல் கூட மறக்க முடியவில்லை. எப்போதும் அதை எண்ணிக் கொண்டேயிருப்பேன்.

**1126. கண்ணுள்ளின் போகார் இமைப்பின் பருவரார்**
**நுண்ணியர்எங் காத லவர்.**

(இனி, காதலியானவள் காதலனை நினைத்துச் சொல்லுவது:) என் காதலர் எந்த நேரமும் என் கண்ணிலேயே இருந்து கொண்டிருக்கிறார்.

அவர் என் கண்ணுக்கு உள்ளேயும் போகாமல் விழிகளுக்கும் இமைகளுக்கும் இடையிலேயே இருந்துகொண்டு, இமைகளை மூடும்போது அதனால் அடிபட்டுத் துன்பமடையாமலும் இருக்கிறாரே! எவ்வளவு சாமர்த்தியம்!

**1127. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்**
**எழுதேம் கரப்பாக்கு அறிந்து.**

என் காதலர் என் கண்ணிலேயே இருந்து கொண்டிருப்பதால் நான் என் கண்ணுக்கு மை தீட்டுவதை விட்டுவிட்டேன். ஏனென்றால், மை தீட்டும்போது அவர் மறைந்து போவாரோ என்ற எண்ணம் வருகிறது.

**1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்**
**அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.**

என் கண்ணில் மட்டுமா அவர் இருக்கிறார்? என் காதலர் என்னுடைய நெஞ்சிலேயும் இருந்துகொணடிருப்பதால் சூடான உணவுகளை உண்ண அஞ்சுகிறேன். ஏனெனில், அது அவரைச் சுட்டுவிடுமோ என்று எண்ணுவதால்.

**1129. இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே**
**ஏதிலர் என்னும்இவ் வூர்.**

கண்களை மூடினால் என் காதலர் மறைந்து விடுவாரோ என்று கருதி நான் கண்ணை இமைப்பதுகூடச் செய்யாமல் விழித்தபடியே இருக்கிறேன். அதற்காக யாரோ எனக்குத் தீமை செய்துவிட்டதாக இந்த ஊரார் என் காதலரை நிந்திக்கிறார்கள்.

**1130. உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்**
**ஏதிலர் என்னும்இவ் வூர்.**

(ஏன் ஊரார் அவரை இப்படி நிந்திக்க வேண்டும்? அவர் என்னைத் துறந்து விட்டா போய்விட்டார்?) எப்போதும் என் மனத்தில் மகிழ்ச்சியோடு தங்கியிருக்கும் என் காதலரை அவர் என்னைப் பிரிந்து போய் விட்டார் என்றும், என்மீது அன்பில்லாதவரென்றும் இந்த ஊரார் சொல்லுகிறார்களே! என்ன அறியாமை இவர்களுக்கு!

# 114. நாணுத்துறவுரைத்தல்

***1131.* காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்**
**மடலல்லது இல்லை வலி.**

(களவாகப்புணர்ந்து பிரிந்து காதலர்கள் பகிரங்கமாக மணந்து கொள்ள விரும்பித் தம்முடைய காதலை வெளிப்படுத்தும்படி நடந்து கொள்வது. காதலன் சொல்லுகிறான்:) ஒரு பெண்ணைப் புணர்ந்து காம இன்பத்தை அனுபவித்துப் பின் அவளைப் பிரிந்து வருந்துகின்ற ஒருவனுக்கு மடல்களால் அலங்கரிக்கப்பட்ட குதிரைமீது சவாரி செய்து காதலை விளம்பரப்படுத்துவதைவிட வேறு வழியில்லை.

***1132.* நோனா உடம்பும் உயிரும் மடலேறும்**
**நாணினை நீக்கி நிறுத்து.**

காமநோயின் வேதனையைப் பொறுக்க முடியாமல் என் உடலும் உயிரும் வெட்கத்தையும் விட்டுவிட்டு மடலேறத் தூண்டுகின்றன.

***1133.* நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்**
**காமுற்றார் ஏறும் மடல்.**

இதுவரையிலும் வெட்கமுள்ளவனாகவும் நல்ல ஆண்மையுள்ளவனாகவும் இருந்த நான் இப்போது அவற்றை விட்டுவிட்டு மடலேறுவதை எண்ண வேண்டியவனாக இருக்கிறேனே!

***1134.* காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு**
**நல்லாண்மை என்னும் புணை.**

வெட்கம், நல்லாண்மை என்ற தெப்பங்களைக் கொண்டு காம ஆசை என்ற வேகமான ஆற்று வெள்ளம் கடந்து கரையேற முடியுமா!

***1135.* தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு**
**மாலை உழக்கும் துயர்.**

(அதனால்,) நாள்தோறும் மாலைக் காலத்தில் காம மிகுதியால் மடலேறுவதைப் பற்றியே நினைத்துக் கலங்கிக் கொண்டிருக்கும் துன்பத்தை மேகலாபரணமும் அழகான வளையல்களும் அணிந்த என் காதலி எனக்குத் தந்து விட்டாள்.

**1136. மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்கென் கண்.**

(மாலைப் பொழுதில் மட்டுமா?) என் காதலியை நினைத்திரங்கி என்னுடைய கண்கள் எப்போதும் உறங்குவதேயில்லை. அதனால் நடுச்சாமத்திலுங்கூட மடலூர்வதையே எண்ணுகிறேன்.

**1137. கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல்.**

கடல் போல மிகுந்த காம வேதனை அடைந்தாலும் (ஆண்களைப் போல வெட்கம்கெடும்படி) பெண்கள் மடலேறுவதில்லை என்பதனால் அந்தப் பெண்ணியல்பைப்போல் சிறந்தது வேறில்லை.

**1138. நிறையரியர் மன்அளியர் என்னாது காமம்
மறையிறந்து மன்று படும்.**

(இனி, பெண் தன்னுடைய நாணுத் துறவைத் தனக்குத்தானே சொல்லிக் கொள்ளுகிறாள்:) பெண்கள் காமத்தை அடக்கிக்கொள்ளும் தன்மை மிகுந்தவர்கள் என்பதையும் இரக்கமுடையவர்கள் என்பதையுங் கூட மதிக்காமல் இதுவரைக்கும் என் மனதுக்குள்ளேயே மறைவாக இருந்த என் காமம் இப்போது வெளிப்படையாகவும் வந்துவிட்டது.

**1139. அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு.**

(எப்படியெனில்,) வீட்டிலுள்ளவர்கள் மட்டுமன்றி ஊரிலுள்ள எல்லாரும் என் நிலைமையை அறிந்து கொள்ளும்படியாக என்னுடைய காம நோய் என்னை வீதிக்குச் சென்று (என் காதலர் வரமாட்டாரா என்று) வெறிபிடித்தது போல அங்குமிங்கும பார்த்துத் தவிக்கச் செய்துவிட்டது.

**1140. யாங்கண்ணின் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.**

நான் படும் துன்பங்களைத் தாம் படாத காரணத்தால் அறிவில்லாதவர்கள் எனக்குத் தெரியும்படி என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்கிறார்கள்.

# 115. அலர் அறிவுறுத்தல்

**1141. அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்**
**பலரறியார் பாக்கியத் தால்.**

(காதலன் சொல்லுகிறான்:) ஊரில் பேச்சு எழுந்து விட்டதால் இனி என் அருமையான உயிர் நிலைக்கும். அவள் என்னைக் காதலிக்கவில்லையென்று கருதி நான் உயிரை விட்டுவிட எண்ணியிருந்தேன். பாக்கிய வசத்தால் அது பிறருக்குத் தெரியாது!

**1142. மலரன்ன கண்ணாள் அருமை அறியாது**
**அலரெமக்கு ஈந்ததிவ் வூர்.**

மலர் போன்ற கண்களையுடைய அவளது அருங் குணத்தை அறியாத இந்த ஊரார் என்னைப் பற்றிப் பரிகாசம் செய்தார்கள்.

**1143. உறாஅதோ ஊரறிந்த கௌவை அதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து.**

எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் உள்ள தொடர்பை ஊரிலுள்ள எல்லாரும் அறியும்படி செய்துவிட்ட இந்த ஏளனப் பேச்சு நல்லதுதான். ஏனென்றால், எனக்குக் கிடைக்குமோ என்று நான் ஏங்கியிருந்த அவளுடைய இன்பம் கிடைக்கும் என்பது இதனால் நிச்சயமாகிறது.

**1144. கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்**
**தவ்வென்னும் தன்மை இழந்து.**

(எங்களுக்குள்ள) காதல் இந்தப் பரிகாசப் பேச்சால் பலப்படுகிறது. இந்தப் பரிகாசப் பேச்சும் இல்லாவிட்டால் காதல் என்பதும் அதன் இன்பத்தை இழந்து சுவையற்ற தாகிவிடும்.

**1145. களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்**
**வெளிப்படுந் தோறும் இனிது.**

(எப்படியென்றால்,) குடிகாரனுக்குப் போதை அதிகரிக்க அதிகரிக்க கள்ளின்மேல் ஆசை அதிகரிப்பது போல எங்கள் காதலைப்பற்றிய நிந்தனைப் பேச்சுக்கள் ஊரில் பரவப் பரவ எங்கள் காதலும் அதிகப்பட்டு இன்பமளிக்கும்.

**1146. கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்**
**திங்களைப் பாம்புகொண் டற்று.**

(இனி, காதலி சொல்வது:) என் காதலரோடு கலந்து நான் இன்பங் கண்டது என்னவோ ஒரேஒருநாள்தான். ஆனால் அதைப் பற்றிய பரிகாசப் பேச்சு என்னவோ சந்திரனைப்பாம்பு பிடித்துக் கிரகணம் உண்டானதைப் போல் எல்லாருக்கும் தெரிவதாகிவிட்டது.

**1147. ஊரவர் கெளவை எருவாக அன்னைசொல்**
**நீராக நீளும்இந் நோய்.**

ஊரார் பேசுகிற ஏளனப்பேச்சு எருவாகவும், என் தாய் அதற்காக என்னை இடித்துக்கூறும் சொற்கள் நீராகவும் (என் மனத்தில் முளைத்து விட்ட) காமப் பயிர் வளர்ச்சி அடைகிறது.

**1148. நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கெளவையால்**
**காமம் நுதுப்பேம் எனல்.**

பரிகாசம் செய்து காமத்தை அடக்கிவிடலாம் என்று நினைப்பது நெய்யை ஊற்றி நெருப்பை அணைத்துவிடலாம் என்று நினைப்பதற்கே சமானம்.

**1149. அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம்பு என்றார்**
**பலர்நாண நீத்தக் கடை.**

'யார் என்ன சொன்னாலும் நான் இருக்கிறேன்; நீ பயத்தை விடு' என்று சொன்ன என் காதலர் இப்போது என்னைப் பிரிந்திருக்கிறார் என்பதால் பலபேர் பரிகாசம் பண்ணுவதற்காக நான் பயந்துவிடலாமா?

**1150. தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்**
**கெளவை எடுக்கும்இவ் வூர்.**

(என் காதலர் என்னை அடையவேண்டிய முயற்சிகளைச் செய்யாமல் இருக்கமாட்டார். எப்படியும் வந்து சேருவார்.) என் காதலர் தமக்கு சமயத்தில் வந்து என் கவலையைத் தீர்ப்பார். அது வரையிலும் இந்த ஊரார் ஏளனம் செய்துகொண்டே இருக்கட்டும். அது எனக்கு விருப்பமானதுதான்.

# 116. பிரிவாற்றாமை

**1151. செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.**

(களவாகக் காதல்கொண்ட ஆணும் பெண்ணும் பிறகு மணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துகையில் கணவன் தொழில் நிமித்தம் மனைவியைப் பிரிந்து வேற்றூருக்குப் போக விடை கேட்கிறான்; மனைவி தான் பிரிந்திருக்கச் சகியாமை சொல்லுகிறாள்:) என்னைப் பிரிந்து போகாமல் இருப்பதென்றால் என்னிடம் சொல்லுங்கள். 'விரைவில் திரும்பி வருகிறேன்' என்ற பேச்சை நீங்கள் திரும்பி வரும்வரை உயிரோடு இருக்கிறவர்களிடத்தில் வந்து சொல்லிக் கொள்ளுங்கள் (நான் உங்களைப் பிரிந்து உயிர்தரியேன்).

**1152. இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.**

(காதலி தனக்குள் சொல்லிக்கொள்வது:) அவரைப் பார்த்துக் கொண்டிருப்பதே எனக்கு இன்பம். (அவர் பிரிந்துபோக விடைகொடுக்க) இணங்குவது பிரிவினால் வரக்கூடிய பயங்கரமான துன்பம் தரக்கூடியது.

**1153. அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.**

கணவனிடத்தில் உள்ள உண்மையான அன்புடைய தன்மையினால் அறிவுமிகுந்த பெண்களுக்கும் கணவனைப் பிரிந்து நிம்மதியாக இருக்க முடியாது.

**1154. அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு.**

(அதனால்) அபயம் கொடுத்து, 'நான் இருக்கிறேன்; நீ அஞ்ச வேண்டாம்' என்று சொன்ன காதலர் இப்போது 'பிரிந்து போகிறேன்' என்றால். அதற்காக அவரை மறுத்துப் பேசத் துணிந்துவிட்டதில் எனக்கென்ன குற்றம்?

**1155. ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு.**

என்னைப் பாதுகாக்கவே கடமை-பூண்டு ஒப்புக் கொண்ட என்

கணவர் என்னை விட்டுப்போகிற எண்ணத்தை விட்டுவிடவேண்டும். போவாரானால் அவர் பிரிவை நான் சகித்திருக்க முடியாது.

**1156. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்**
**நல்குவர் என்னும் நசை.**

என் காதலர் மீண்டும் மீண்டும் தாம் பிரிந்துபோக வேண்டியிருக்கிற அவசியத்தைப் பற்றியே சொல்லும் கடின சித்தமுடையவராக இருக்கிறார். அதனால் அவர் என் விருப்பத்தின்படி போகாமல் இருப்பார் என்ற ஆசையை நான் விட்டுவிட வேண்டியதுதான் (விடை கொடுக்கிறாள்).

**1157. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை**
**இறைஇறவா நின்ற வளை.**

(அவன் போனபின் தலைவி சொல்வது:) முன்னங்கை ரேகைகளையும் கடந்து கழன்றுவிடுவன போன்ற என் வளையல்களுடைய ஓசையே என் தலைவன் பிரிந்து போய்விட்டதை ஊராருக்கெல்லாம் தூற்றிவிடும்போல் இருக்கிறது.

**1158. இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்**
**இன்னாது இனியார்ப் பிரிவு.**

உற்றார் உறவினர் இல்லாத ஊரில் குடியிருப்பது மனிதருக்கு மிகவும் துன்பமான வாழ்க்கை. அதைவிடத் துன்பம் தருவது ஒரு பெண் தன் காதலனைப் பிரிந்திருப்பது.

**1159. தொடிற்சுடின் அல்லது காமநோய் போல**
**விடிற்சுடல் ஆற்றுமோ தீ.**

(ஏனெனில்,) சாதாரண நெருப்புத் தொட்டால்தான் சுடும். காமநோய் நெருப்போ (தொட்டுக்கொண்டிருக்கிற வரைக்கும் சுடாமல்) விட்டுப் பிரிந்த உடனே சுட்டு விடுகிறது.

**1160. அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பரிவாற்றிப்**
**பின்இருந்து வாழ்வார் பலர்.**

மிகவும் பிரயாசைப்பட்டு முயன்று, துன்பமுள்ள காமவேதனையை அடக்கி, காதலர் பிரிவைப் பொறுத்துக் கொண்டிருந்து அவர் திரும்பி வந்தபின் அவருடன் இருந்து இன்ப வாழ்க்கை நடத்துகிறவர்கள்தாம் உலகத்தில் பெரும்பாலும் பெண்கள்.

# 117. படர்மெலிந்திரங்கல்

*1161. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்கு*
*ஊற்றுநீர் போல மிகும்.*

(காதலி சொல்லுவது:) என் காமநோயை நான் அடக்கி அடக்கிப் பார்க்கிறேன். ஆனால்அதுவோ இறைக்க இறைக்க வற்றாத நீருற்றுப்போல அடக்க அடக்க அதிகப்படுகிறது.

*1162. கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு*
*உரைத்தலும் நாணுத் தரும்.*

(என்ன செய்வேன்?) இந்தக் காமவேதனையை அடக்கவும் முடியவில்லை. இந்த நோயை உண்டாக்கி வைத்த என் காதலருக்குச் சொல்லியனுப்பலாம் என்றாலும் வெட்கமாக இருக்கிறது!

*1163. காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்*
*நோனா உடம்பி னகத்து.*

காமத் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் தவிக்கிற என் உடம்பிலுள்ள உயிரைக் காவடித் தண்டாக்கி, ஒருபுறத்தில் காம வேதனையும் இன்னொரு புறத்தில் வெட்கமும் சமனாகத் தொங்கி இழுக்கின்றன. (அதனால் என் உயிர் வளைந்து ஒடிந்துவிடும் போல் இருக்கிறது.)

*1164. காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்*
*ஏமப் புணைமன்னும் இல்.*

காமம் கடல்போல இருக்கிறது. ஆனால் அக்கடலைக் கடக்க எனக்குப் பாதுகாப்பளிக்கும் மரக்கலமாகிய என் காதலர் இங்கில்லையே!

*1165. துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு*
*நட்பினுள் ஆற்று பவர்.*

(என் காதலர்) என்னிடத்தில் காதலுள்ளவராக இருக்கும் போதே எனக்கு இவ்வளவு துன்பம் வரச் செய்து விட்டாரே! என்னிடத்தில் ஏதேனும் வருத்தமுற்றுப் பிரியம் இல்லாதவராகிவிட்டால் இன்னும் எவ்வளவு துன்பம் உண்டாக்குவாரோ தெரியவில்லை.

**1166. இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்**
**துன்பம் அதனிற் பெரிது.**

(காதலர் என்னுடன் இருக்கும்போது) எனக்கு வரும் காம உணர்ச்சி மிகப் பெரிய இன்பக் கடலாக இருந்தது. அவர் என்னுடன் இல்லாத இப்போது எனக்கு வரும் காம உணர்ச்சி அந்தக் இன்பக் கடலைவிடப் பெரிய துன்பக் கடலாக இருக்கிறது.

**1167. காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளேன்.**

காம வேதனையாகிய பெரிய கடலில் விழுந்து நீந்தி நீந்திக் கரை காணாதவளாகிய நான் இந்த நடுச்சாமத்தில் என் துணைவரின்றித் தனியே தத்தளித்துக் கொண்டிருக்கிறேன்.

**1168. மன்னுயி ரெல்லாம் துயிற்றி அளித்திரா**
**என்னல்லது இல்லை துணை.**

உலகத்திலுள்ள எல்லா உயிர்களையும் தூங்க வைத்துச் சுகமுண்டாக்கி அன்பு செய்யும் இராத்திரியானது தான் மட்டும் தூங்குவதில்லை. அதற்கு இப்போதெல்லாம் நான் ஒருத்தி தான் துணை.

**1169. கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்**
**நெடிய கழியும் இரா.**

(என் காதலர் என்னுடன் இல்லாத) இந்த நாட்களில் இரவும் மிகவும் நீண்ட நேரம் தாமதித்து விடிகின்றது; அதனால் என்னைப் பிரிந்து என் காதலர் எனக்குச் செய்துவிட்ட கொடுமைகளைவிட இந்த இரவு அதிகம் கொடுமை செய்கிறது.

**1170. உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னோஎன் கண்.**

(என் கண்கள் அழ ஆரம்பித்துவிட்டன.) என் மனம் என் காதலரைப் பின் தொடர்ந்து போயிருக்கிற மாதிரி என்னுடைய கண்களும் அவர் இருக்கும் இடத்திற்குப் போனால் பிறகு இப்படி வெள்ளம் போலக் கண்ணீரைக் கொட்டி அழுது கொண்டிருக்க மாட்டா. (அவரைக் கண்டால்தான் என் துயரம் தீரும்.)

# 118. கண்விதுப்பழிதல்

*1171. கண்தாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்*
*தாம்காட்ட யாம்கண் டது.*

எனக்கு இந்த ஓயாத காமவேதனை உண்டானது என்னுடைய கண்கள் அவரை எனக்குக் காட்டி ஆசை கொள்ளச் செய்ததால்தான். அப்படியிருக்க, எனக்கு இந்த வேதனையை உண்டாக்கி வைத்துவிட்டு இந்தக் கண்கள் தாம் அழுகின்றனவே, என்ன விந்தை!

*1172. தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்*
*பைதல் உழப்பது எவன்.*

ஆராய்ந்து அறிந்துகொள்ளாமல் அவசரப்பட்டு, கண்டவுடனேயே அவர்மீது ஆசைகொண்டுவிட்ட இந்த அறிவில்லாத கண்கள் இப்போது பரிந்து பரிந்து அழுவது எதற்காக?

*1173. கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்*
*இதுநகத் தக்கது உடைத்து.*

திடீரென்று அவரைக் கண்டவுடனேயே ஆசை கொண்டு விட்டு, இப்போது இந்தக் கண்கள் அழுது கொண்டிருப்பது கேலிக்கூத்தாகத்தான் இருக்கிறது.

*1174. பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா*
*உய்வில்நோய் என்கண் நிறுத்து.*

சகிக்க முடியாத ஓயாத காமவேதனையை எனக்கு உண்டாக்கி வைத்துவிட்டு அழுது அழுது கண்ணீரற்று வறண்டு போய்விட்டனவே இந்தக் கண்கள்!

*1175. படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்*
*காமநோய் செய்தஎன் கண்.*

சமுத்திரத்தைவிடப் பெரிய காமவேதனையை எனக்கு உண்டாக்கி வைத்துவிட்டு என் கண்கள் இமை மூடாமல் விழித்துக் கொண்டிருந்து தாம் துன்பப்பட்டுக் கொண் டிருக்கின்றனவே.

*1176. ஒஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்*
*தாஅம் இதற்பட் டது.*

எனக்கு இவ்வளவு காம வேதனையை உண்டாக்கி வைத்த இந்தக்

கண்கள் இப்படித் துன்பத்திற் சிக்கிக்கொண்டு (தூக்கமின்றி, அழுதழுது, நீர் வறண்டு) தவிப்பது நான் மகிழத்தக்கதுதான்; படட்டும், நிரம்பப் படட்டும்.

**1177. உழந்துழந்து உள்நீர் அறுக விழைந்திழைந்து**
**வேண்டி யவர்க்கண்ட கண்.**

அவரைப்பார்த்து ஆசை மூட்டி எனக்கு இவ்வளவு துன்பமுண்டாக்கிவிட்ட இந்தக் கண்கள் அழுது அழுது உள்ள நீரெல்லாம் அற்றுப்போகட்டும், எனக்கென்ன?

**1178. பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்**
**காணாது அமைவில கண்.**

என்மீது உண்மையான காதல் இல்லாமல் என்னுடன் பொய்யுறவு காட்டினவர் (என்னைப் பிரிந்து) எங்கோ இருக்கிறாராம். அவரைக் காணாமல் (உறக்கமின்றி அழுது) தவிக்கின்றன என்னுடைய கண்கள், என்ன வஞ்சனை!

**1179. வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை**
**ஆரஞர் உற்றன கண்.**

(அவரைக் காணாமல் இப்படித் தவிக்கின்ற கண்கள்) அவர் இல்லாத காலங்களில் அவர் இன்னும் வரவில்லையே என்ற ஏக்கத்தால் தூங்குவதில்லை. அவர் வந்துவிட்டாலோ (அவரோடு இடைவிடாது இன்பமனுபவிக்க விரும்பி) தூங்குவதில்லை, அதனால் இந்தக் கண்களால் எனக்கு எப்போதும் துன்பந்தான்.

**1180. மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணா ரகத்து.**

(இப்படிப்பட்ட கண்களையுடைய நான் எப்படி என் காம நோயை மறைத்து வைக்க முடியும்?) இப்படி எப்போதும் அழுதுகொண்டு என் நிலைமையைப் பறை சாற்றுகின்ற கண்களையுடைய நான் என் மனத்திலுள்ள காம வேதனையை ஊராருக்கு எப்படி மறைக்க முடியும்?

# 119. பசப்புறு பருவரல்

1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்
பண்பியார்க்கு உரைக்கோ பிற.

(காமவேதனையால் தன் உடல் நிறம் பசந்து விட்டதைப் பார்த்துக் காதலி வருந்துகிறாள்.) என் காதலர் இல்லாததால் என் மேனி முழுதும் பசந்துவிட்டது. இதை நான் காதலிக்கிற என் நாயகனுக்குக் காட்ட அவர் இங்கில்லையே! வேறு யாரிடத்தில் காட்டி என்ன பயன்?

1182. அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு.

அவரால் உண்டானது என்ற காரணத்தால் இந்தப் பசப்பு நிறம் என் மேனியின்மீது உரிமையோடு ஏறிச் சவாரி செய்கிறது. (அது எனக்கு மகிழ்ச்சிதான்).

1183. சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து.

(ஆனாலும்,) துன்பத்தையும் பசலை நிறத்தையும் எனக்குத் தந்துவிட்டு அவற்றிற்குப் பதிலாக என் அழகையும் நாணத்தையும் அவர் கொண்டுபோய்விட்டாரே!

1184. உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.

எந்நேரமும் அவரை என் உள்ளத்திலேயே வைத்திருக்கிறேன். நான் பேசுவதெல்லாம் அவரைப் பற்றியே; (அப்படியிருக்க நான் எப்படி அவரைப் பிரிந்தவளாவேன்?) அதனால் இந்தப் பசப்பு நிறம் வேறு சூதாக இருக்குமோ!

1185. உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது.

என் காதலர் சென்றிருப்பது எங்கோ வேறிடத்தில்; என் மேனி பசந்துபோனதோ இங்கே என்னிடத்தில். இது என்ன விந்தை!

1186. விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

(ஓ! இப்போது தெரிந்துகொண்டேன் இதன் காரணத்தை.) விளக்கு

நீங்கினவுடனே உண்டாகிவிடுகிற இருட்டைப்போல் காதலருடைய தழுவல் நீங்கினவுடனே தானாக உண்டாகிவிடுவது இந்தப் பசப்பு.

**1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு.**

(இப்போது நினைவுக்கு வருகிறது.) என் காதலரைத் தழுவி அணைத்துக்கொண்டு நெடுநேரம் மயங்கி இருந்து விட்டு அந்தத் தழுவலைவிட்டு நீங்கின உடனே என் மேனி நிறத்தைப் பசலை அள்ளிக் கொண்டதுபோல் இருப்பது வழக்கம். (அதனால் இந்தப் பசப்பு அவருடைய அணைப்பு இல்லாதபோதெல்லாம் தானாகவே உண்டாவது.)

**1188. பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்**
**துறந்தார் அவர்என்பார் இல்.**

இவள் என்ன இப்படிப் பசந்துவிட்டாளே, என்று எல்லாரும் ஏளனம் செய்கிறார்களே அல்லாமல் 'அவர் இவளை இப்படிப் பசக்கவிட்டுப் பிரிந்திருக்கிறாரே' என்று பச்சாத்தாபப்படுகிறவர்கள் யாருமில்லையே!

**1189. பசக்கமன் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்**
**நன்னிலையர் ஆவர் எனின்.**

(என்மேனி எவ்வளவு வேண்டுமானாலும் பசக்கட்டும்.) என்னைப் பிரிந்திருப்பதால் என் காதலருக்கு நன்மை வருமென்றால், யார் பரிகாசம் செய்தாலும் சரி. என் மேனி இன்னும் பசக்கட்டும்.

**1190. பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்**
**நல்காமை தூற்றார் எனின்.**

என் காதலர் இங்கில்லாதிருப்பதைப் பற்றி யாரும் அவரை இகழ்ந்து பேசாமலிருந்தால் அதுபோதும். நான் பசந்து போனேன் என்பதைப் பற்றி ஊரார் ஏளனம் செய்வதில் எனக்குப் பெருமைதான். (என் காதலர் சுகமாக வரட்டும்.)

# 120. தனிப்படர் மிகுதி

*1191. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே*
*காமத்துக் காழில் கனி.*

(காதலன் தொழில் முறையாகப் போயிருப்பதால் அவன் காதலியைப் பற்றி எந்நேரமும் நினைத்துக் கொண்டிருக்கமாட்டான். ஆனால் வீட்டில் தனியே இருக்கிற காதலி எப்போதும் அவன் நினைவாக வருந்துகிறாள்.) தாம் காதலிக்கிற கணவர் அதைப் போலவே தம்மைக் காதலிக்கிற பாக்கியத்தைப் பெற்ற பெண்களே காம இன்பத்தின் குற்றமற்ற கனியை அடைந்தவர்கள். (எனக்கு அந்தப் பாக்கியம் இல்லைபோலும்.)

*1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு*
*வீழ்வார் அளிக்கும் அளி.*

காதலிக்கிற மனைவிக்குக் காதலிக்கப்படுகிற கணவன், செய்கிற அன்பு, உயிர்வாழ இன்றியமையாத மழைக்காக வானத்தையே பார்த்துக் கொண்டிருக்கிற மனிதருக்கு மழை பெய்வதைப் போன்றது.

*1193. வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே*
*வாழுநம் என்னும் செருக்கு.*

தான் காதலிக்கிற கணவனால் தானும் காதலிக்கப்படுகிற பெண்ணுக்குத்தான் 'நல்வாழ்வு பெற்றேன்' என்று சொல்லிக்கொள்ளும் பெருமை கிடைக்கும்.

*1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்*
*வீழப் படாஅர் எனின்.*

நாம் காதலிக்கிற கணவர் நம்மைக் காதலிக்கா விட்டால் அவர் அன்பில்லாதவரே.

*1195. நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ*
*தாம்காதல் கொள்ளாக் கடை.*

(அப்படியிருந்து என்ன பயன்?) நான் காதலிக்கிற என் கணவர் தாம் என்னைக் காதலிக்காவிட்டால் அவர் எனக்கு என்ன நன்மை செய்யப்போகிறார்?

***1196. ஒருதலையான் இன்னாது காமம்காப் போல***
***இருதலை யானும் இனிது.***

காம ஆசை என்பது தராசுபோலக் கணவன் மனைவி ஆகிய இருவரிடத்திலும் சமமாக இருந்தால்தான் இன்பம். அப்படியின்றி ஒரு பக்கம் அதிகமாகவும் இன்னொரு பக்கத்தில் குறைவாகவும் இருந்தால் துன்பந்தான்.

***1197. பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்***
***ஒருவர்கண் நின்றொழுகு வான்.***

இருபாலருக்கும் பொதுவாக இருக்கவேண்டிய காமக் கடவுளான மன்மதன் ஒரு பக்கத்தில் சேர்ந்துகொண்டு (என் காதலர்மீது பாணம் விடாமல் என்மீது மட்டும் பாணம் விட்டுப்) பாரபட்சம் செய்கிறானே. அவன் நான் படும் துன்பத்தையும் துயரத்தையும் அறியமாட்டானா?

***1198. வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து***
***வாழ்வாரின் வன்கணார் இல்.***

பிரிந்து போயிருக்கிற தம் காதலரிடமிருந்து ஓர் இனிய சேதிகூட வராமலிருந்தும் உலகத்தில் உயிரை வைத்துக் கொண்டிருக்கிற பெண்களை விட நெஞ்சழுத்தமுள்ளவர்கள் யாருமில்லை.

***1199. நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு***
***இசையும் இனிய செவிக்கு.***

நான் காதலிக்கிற என் கணவர் (தாமாக ஒரு சேதியனுப்பி) உதவாவிட்டாலும் அவரைப்பற்றி வேறு யாராயினும் ஒரு சேமவார்த்தை சொன்னாலும், அது எனக்கு ஆறுதல் அளிக்குமே.

***1200. உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்***
***செறாஅஅய் வாழிய நெஞ்சு.***

(மனமே! ஏன் இப்படியெல்லாம் அவரை நிந்திக்கிறாய்? அவர் வருவார்; பொறு.) மனமே! உன்னை வாழ்த்துகிறேன்; பொறுத்துக்கொள். நீ அடைந்த காம வேதனையைப்போல அவரும் அடையாததால் அவர் விரைந்து வரவில்லை. ஆனாலும் வருவார். வந்தபின் உன் காம வேதனையைச் சொல்லித் தீர்த்துக் கொள்ளலாம். இப்போது கடல்போல் உன்னுள் வளர்ந்துவிட்ட காம ஆசையை அடக்கிக் கொள்க.

# 121. நினைத்தவர் புலம்பல்

**1201. உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்**
**கள்ளினும் காமம் இனிது.**

(காதலி காதலனை நினைத்துப் புலம்புகிறாள்;) மனத்தில் நினைத்தாலும் ஓயாத நல்ல மகிழ்ச்சியை உண்டாக்குவதால் கள்ளை உண்டு வருகிற களிப்பைவிடக் காமத்தை நினைத்து வருகிற களிப்பு மேலானது.

**1202. எனைத்தொன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்**
**நினைப்ப வருவதொன்று இல்**

காமம் என் காதலரை நினைத்தவுடனே இன்பம் உண்டாக்குகிறது. மற்ற எந்தப் பொருளும் இதைப்போல நினைத்தவுடனே இன்பம் உண்டாக்குவதில்லை.

**1203. நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்**
**சினைப்பது போன்று கெடும்.**

என் காதலர் என்னை நினைப்பதுபோல் இருந்து நினைக்கவில்லை எனத் தெரிகிறது. அதனால்தான் எனக்கு வருவதுபோல் இருந்த தும்மல் வரவில்லை.

**1204. யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எந்நெஞ்சத்து**
**ஓஒ உளரே அவர்.**

(அவர் என்னை ஏன் நினைக்கப்போகிறார்? அவர் மனத்தில் நான் இருந்தால்தானே நினைப்பார்!) என் மனத்தில் என் காதலர் எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறாரே. அப்படி அவர் மனத்தில் நான் இருக்கிறேனா? (இருந்தால் நினையாமல் இருப்பாரா?)

**1205. தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்**
**எந்நெஞ்சத்து ஓவா வரல்**

தம் மனத்திலிருந்து என்னை அடியோடு நீக்கிவிட்ட அவர் என்னுடைய மனத்துக்குள் மட்டும் ஓயாது வந்துவந்து நுழைகிறாரே! அவருக்கு வெட்கமில்லையா?

**1206. மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன்.**

(இப்படித் துன்புறுவதைவிட இறப்பதே மேல்.) அவரோடு நான் அனுபவித்த இன்பத்தை நினைத்து அவ்வின்பத்தை மீண்டும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையினால் என்உயிர் போகமாட்டேனென்கிறதே!

**1207. மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.**

அவரை மறந்தால் நான் என்ன கதியடைவேனோ என்ற அச்சத்தால் நான் அவரை மறப்பதேயில்லை. மறப்பதைப் பற்றி நினைத்தாலும் என் நெஞ்சம் கொதிக்கிறது.

**1208. எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு.**

அவர் என்னைப் பிரிந்திருப்பதைப் பற்றி நான் எப்படி யெல்லாம் அவரை நொந்துகொண்டு நினைத்தாலும் என் மனத்திலுள்ள அவர் கோபிப்பதேயில்லை. அதுவல்லவா என் காதலர் எனக்குச் செய்யும் சிறப்பு!

**1209. விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து.**

(என்றாலும் அவரைப் பிரிந்திருப்பதைச் சகிக்க முடிய வில்லையே!) என்னுடன் இருக்கும்போது, 'உன்னுயிரும் என்னுயிரும் வேறன்று' என்று சொல்லும் என் காதலர், என்னருகில் இல்லாதிருப்பதை நினைத்து நினைத்து என் சீவன் குறைகின்றது.

**1210. விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி.**

(அவர் அருகிலில்லாததால் என் உயிர் தேய்கிற தென்றாலும் அவரைக் காணும் ஆசையால் என் உயிர் போகாது.) என் அறிவே! உன்னை வாழ்த்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். பொறுத்துக் கொள். அவசியத்தைக் கருதி விடாப்பிடியாகப் பிரிந்துபோய் இத்துணைத் துன்பமும் உண்டாக்கிவிட்ட காதலர் வருவார். அவரைக் கண்டவுடன் உன் துன்பமெல்லாம் நீங்கிவிடும்.

## 122. கனவுநிலை உரைத்தல்

**1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து.**

என் காதலரே என்னிடம் தூதாக வந்ததாக நான் கண்ட கனாவுக்கு என்ன பரிசளித்துச் சிறப்புச் செய்தாலும் போதாது.

**1212. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன்.**

(ஐயோ! அவரிடம் நான் சொல்ல எண்ணியிருந்ததையெல்லாம் சொல்வதற்குள் விழித்துக் கொண்டேனே!) கெண்டை மீன்கள்போலப் புரளுகிற மையுண்ட என் கண்களை நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்; அவை மீண்டும் உறங்கினால், என் காதலரை மீண்டும் கனவில் கண்டு நான் ஏன் இன்னும் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பதைப் பற்றிய உண்மையைச் சொல்லி விடுவேன்.

**1213. நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்.**

விழிப்பில் வந்து இன்பம் கொடுக்காத காதலரை நான் தூக்கத்திலாவது கனவில் கண்டு இன்பமடைந்து விட்டதனால் என் உயிருக்கு இனிப் பயமில்லை.

**1214. கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு.**

நனவில் வந்து எனக்கு இன்பம் தராத காதலரைத் தேடிப் பிடித்து என்னிடம் கொண்டுவந்து விடுவதனால் கனவினாலும் காம இன்பம் கிடைக்கிறது.

**1215. நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது.**

கனவில் அனுபவித்த கலவியின்பம் கனவு காணும் சிறிது நேரத்துக்குத்தான் என்றால், நனவில் அனுபவிக்கிற கலவியின்பமும் கலவி செய்கிற சிறிது நேரத்துக்கு மட்டுந்தானே? என்ன வித்தியாசம்?

**1216. நனவென ஒன்றில்லை யாயின் கனவினான்**
**காதலர் நீங்கலர் மன்.**

இந்த விழிப்பு என்ற ஒன்று இல்லாதிருந்தால் கனவினால் என்னிடம் கொண்டுவரப்பட்ட என் காதலர் என்னை விட்டுப் போயிருக்கவே மாட்டார்.

**1217. நனவினால் நல்காக் கொடியார் கனவினால்**
**என்எம்மைப் பீழிப் பது.**

நான் விழிப்பாக இருக்கும்போது வந்து எனக்கு இன்பம் தரமுடியாமல் கொடுமை செய்கிற இவர், என் கனவில் மட்டும் வந்து ஏன் என்னை இப்படி வருத்தப் படுத்துகிறார்?

**1218. துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்**
**நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.**

(கனவில் வந்தாலும் என் துன்பத்தைத்தான் அதிகப்படுத்துகிறார்.) நான் தூங்கிக்கொண்டிருக்கும்போது வந்து என் தோள்களைத் தழுவுகிறார். (காதலர் வந்து விட்டாரென்ற மகிழ்ச்சியோடு) நான் விழித்தவுடனே என் மனத்துக்குள் ஓடி மறைந்து விடுகிறார்.

**1219. நனவினால் நல்காரை நோவர் கனவினால்**
**காதலர்க் காணா தவர்.**

(இருந்தாலும் கனவிலாவது அடிக்கடி அவர் வருவதற்கு அவரை வாழ்த்துகிறேன்.) கனவிற்கூடத் தம்முடைய காதலரைக் கண்டு மகிழாத பெண்கள்தாம் தம்முடைய காதலர் நனவில் வராததற்கு நொந்து கொள்ள வேண்டும். நான் ஏன் அவரை நோகவேண்டும்?

**1220. நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்**
**காணார்கொல் இவ்வூ ரவர்.**

(இப்படி என் காதலரை நான் அடிக்கடி கனவில் சந்தித்து இன்படைவதை அறியாத ஊரார் என் காதலர் வரவேயில்லையென்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.) என் காதலர் என்னைவிட்டுப் பிரிந்திருப்பதை ஏளனம் செய்கிற இந்த ஊரார், நானும் அவரும் கனவில் கலந்து மகிழ்வதைத் தாங்களும் கனவில் காண்பார்களானால் இப்படி ஏளனம் செய்யமாட்டார்கள்.

# 123. பொழுதுகண்டு இரங்கல்

**1221. மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்**
**வேலைநீ வாழி பொழுது.**

(மாலைப்பொழுது காம வேதனையை அதிகப்படுத்தும் இயல்புடையது. அந்த மாலைப்பொழுதைக் கண்டு காதலி கலங்குகிறாள்:) மாலைப் பொழுதே! உன்னை மாலை வேளையென்று சொல்வது சரியில்லை. மணந்து பிரிந்திருக்கும் காதலர்களின் உயிரை வதைக்கும் மரண காலமென்று சொல்லுவதுதான் பொருந்தும். நீ வாழ்க.

**1222. புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்**
**வன்கண்ண தோநின் துணை.**

(என்ன? மணந்தார் உயிருண்ணும் நீ கூட வாடி வருந்தி அழுது வழிகிறாயே! ஏன்? மருண்டு வருகிற மாலைப் பொழுதே! கண் கலங்கியிருக்கிறாயே! ஏன்?) என் காதலரைப் போலவே உன் காதலரும் உன்னைப் பிரிந்து வராமலிருக்கிற கன்னெஞ்சரா? (அப்படியானால் உனக்கு இத்துன்பம் நீங்கி நலமுண்டாக) உன்னை வாழ்த்துகிறேன்.

**1223. பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்**
**துன்பம் வளர வரும்.**

கண்ணீர் அரும்பித் துன்பப்படுவதுபோலத் தோன்றுகிற இந்த மாலைப்பொழுது எனக்கு அச்சமும் துன்பமும் அதிகரிக்கச் செய்யத்தான் வருகிறது.

**1224. காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து**
**ஏதிலர் போல வரும்.**

காதலர் என்னுடன் இல்லாத காரணத்தால் இந்த மாலைப்பொழுது, போர்க்களத்தில் பகைவர்கள் சீறி வருவது போல் என்மீது சீறி வருகிறது.

**1225. காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்**
**மாலைக்குச் செய்த பகை.**

காலை வேளைக்கு நான் செய்த உபகாரம் என்ன, இந்த மாலை வேளைக்கு நான் செய்துவிட்ட அபகாரம் என்னவோ தெரியவில்லை!

**1226. மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத**
**காலை அறிந்தது இலேன்.**

என் காதலர் என்னைவிட்டுப் பிரியாமல் என்னுடன் இருக்கிற காலங்களில் இந்த மாலைப்பொழுது எனக்குத் துன்பம் உண்டாக்கினதில்லையே!

**1227. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி**
**மாலை மலரும்இந் நோய்.**

(ஓ! இப்போது தெரிகிறது) இந்தக் காமநோய் என்னும் மலர் காலையில் அரும்புவிட்டுப் பகல் முழுதும் சிறுகச் சிறுக முதிர்ந்து மொட்டாகி, மாலை நேரத்தில்தான் மலராக விரிகிறது. (அதனால்தான் காலை வேளையில் இந்தக் காமத் துன்பம் வருத்துவதில்லை.)

**1228. அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்**
**குழல்போலும் கொல்லும் படை.**

நெருப்பைப்போல் என் உடலைக் காம வேதனையால் கொதிக்கச் செய்கிற மாலைப்பொழுது வருகிறது என்ற சேதியை அறிவிக்கிற இடையனுடைய புல்லாங்குழலின் ஓசைகூட என்னைக் கொல்லவரும் ஆயுதம்போல் அச்சமுண்டாக்குகிறது.

**1229. பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு**
**மாலை படர்தரும் போழ்து.**

(ஆகையினால்,) மாலைப்பொழுதை நினைத்தாலுங்கூட என் அறிவு கலங்கி, இருக்கிற இடம் தடுமாறும்படி துன்பம் உண்டாகிறது.

**1230. பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை**
**மாயும்என் மாயா உயிர்.**

பொருள் சம்பாதிக்கும் முறையில் என்னைப் பிரிந்து போயிருக்கிற காதலர் வந்துவிடுவார் என்ற ஆசையால் மாயாமல் இருந்து கொண்டிருக்கிற என் உயிர், என்னை நடுங்கச் செய்கிற இந்த மாலைப் பொழுதால் மாய்ந்து விடுமோ என்று அஞ்சுகிறேன்.

## 124. உறுப்புநலன் அறிதல்

1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.

(காதலனைப் பிரிந்திருக்கும் காதலி தன் அழகு குறைவதைக் கண்டு வருந்துகிறாள்;) துன்பமெல்லாம் எனக்கு விட்டுக் கவலையில்லாமல் தூரதேசம் போயிருக்கிற என் காதலரை நினைத்து அழுதழுது என் கண்கள் இப்போது (முன் இவைகளைக் கண்டு வெட்கப்பட்ட) மலர்களைக் கண்டு தாமே வெட்கப்பட வேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டன.

1232. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.

(அது மட்டுமன்றி,) என்னுடைய கண்கள் என் காதலர் இன்னும் வரவில்லையென்பதை ஊராருக்கு அறிவிப்பன போலப் பசந்து கண்ணீர் வடித்து அழுதுகொண்டேயிருக்கின்றன.

1233. தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.

(கண்கள் அப்படி, என் உடம்போ) நானும் என் காதலரும் மணம் செய்துகொண்ட காலத்தில் பூரிப்பினால் பருத்த என் தேகம் இப்போது என் காதலர் பிரிந்திருப்பதால் உண்டான நிலைமையை முற்றிலும் விவரமாக எல்லாருக்கும் விளக்கிச் சொல்வதுபோல மிகவும் மெலிந்து விட்டது.

1234. பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

(அதனால்,) காதலரைப் பிரிந்த துயரத்தால் முன்னிருந்த அழகையும் மினுமினுப்பையும் வழுவழுப்பையும் இழந்து மெலிந்துவிட்ட என் கைகளிலுள்ள பசும்பொன் வளையல்கள் தாமாகவே கழன்றுவிடுகின்றன.

1235. கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

முன்இருந்த பண்புகளை இழந்து மெலிந்து போயிருக்கிற என் கைகள் இந்த வளையல்களோடு இருந்தால்தான் கொடியவராகிய என் காதலர் எனக்குச் செய்திருக்கிற கொடுமையை அவருக்குக் காட்டும்.

**1236. தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்**
**கொடியர் எனக்கூறல் நொந்து.**

என் காதலரை நான் கொடியவர் என்று சொல்லி விட்டதற்கு வருத்தப்படுகிற என் மனம், என்னுடைய கை வளையல்கள் கழன்று விழும்படி என் தேகம் இளைத்துப் போனதற்கு வருத்தப்படவில்லையே!

**1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்**
**வாடுதோள் பூசல் உரைத்து.**

மனமே! எனக்கு இவ்வளவு கொடுமை செய்துவிட்ட அவரிடம் நீ சென்று என் தேகம் மிகவும் மெலிந்து கையிலுள்ள வளையல்கள் தொளதொளத்து ஓசையிடுவதைச் சொல்லி அவரை வரச்செய்து பெருமை அடையலாமே. செய்வாயா?

**1238. முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது**
**பைந்தொடிப் பேதை நுதல்.**

(இந்தச் சமயத்தில் வெளியூரிலிருக்கும் காதலனும் காதலியை நினைக்கிறான்;) நான் அவளைக் கட்டித் தழுவிய என் கைகளைத் தளர்த்தினாலும் அவள் நெற்றி பசந்து விடுமே!

**1239. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற**
**பேதை பெருமழைக் கண்.**

நாங்களிருவரும் புணரும்போது தழுவியிருக்கும் எங்கள் மத்தியில் சந்துண்டாகிக் குளிர்காற்றுப் புகுந்தாலும் அவள் கண் பசந்து அழுதுவிடுவாளே!

**1240. கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே**
**ஒண்ணுதல் செய்தது கண்டு.**

என் காதலி முன் (என்னைப் பிரிந்தபோதெல்லாம்) படும் துன்பத்தை இப்போது பட்டுக்கொண்டிருப்பது போலவே எனக்கு முன்தோன்றி, எனக்குத் துன்பமுண்டாக்குகிற இது, என் கண்ணின் மயக்கமோ அல்லது உண்மைதானோ?

# 125. நெஞ்சொடு கிளத்தல்

**1241. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து.**

(காதலி தன் நெஞ்சோடு பேசுகிறாள்;) மனமே! தீராத இந்தக் காம வேதனையைத் தீர்க்கக்கூடிய மருந்து ஏதாவது ஒன்றை ஆலோசித்துப் பார்த்துச் சொல்ல மாட்டாயா?

**1242. காதல் அவரில ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு.**

என்னுடைய நலத்தைக் கருதவேண்டிய என் மனமே! அவர் என்மீது உண்மையான பிரியமுள்ளவர் அல்லர் (என்பது தீர்மானமாகத் தெரிகிறது); அதனால் நான் அவரைக் கொடியவர் என்றால், அதற்காக நீ நொந்து கொள்வது மூடத்தனம். வருந்தாதே! உன்னை வாழ்த்துகிறேன்.

**1243. இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல்.**

மனமே! நீ இங்கே இருந்துகொண்டு எனக்காக அனுதாபப்படுவதில் என்ன பயன்? எனக்கு இந்தப் பெரும் வேதனையை உண்டாக்கினவருக்கு என்மீது அனுதாப எண்ணம் இல்லையே!

**1244. கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்காண லுற்று.**

(அதனால் நீ உடனே அவரிடம் எனக்காகத் தூது செல்வாய்.) மனமே! நீ போகும்போது என் கண்களையும் கூட்டிக்கொண்டு காதலரிடம் போவாய். இல்லையானால் நீ போனபிறகு இக்கண்கள் அவரைப் பார்க்கவேண்டுமென்று என்னைத் தின்றுவிடுவன போலத் துன்பப்படுத்தும்.

**1245. செற்றா ரெனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர்.**

மனமே! நாம் விரும்பினபோது அவர் வரவில்லை என்பதற்காக நம்மை அவர் வெறுத்துவிட்டார் என்று எண்ணிக் கொண்டு நாம் அவரை விட்டுவிடலாமா?

**1246. கலந்துணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு.**

(நான் இவ்வளவு சொல்லியும் நீ அவரிடம் போகப் பிணங்குகிறாயே; ஏன்?) என் மனமே! உனை நான் அறிய மாட்டேனா? புணர்ந்து இன்பமூட்டும் காதலரைக் கண்டு விட்டால் பிணக்கமெல்லாம் விட்டுவிட்டு அவரிடம் தாவுகின்ற நீ இப்போது எதற்காக இந்தப் பொய்ப்பிணக்கம் காட்டுகிறாய்?

**1247. காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேன்இவ் விரண்டு.**

என்னுடைய நல்ல மனமே! ஒன்று, காம ஆசையை விட்டுவிட்டுச் சும்மா இருப்பாய், இல்லையானால், பிணங்குகிற நாணத்தை விட்டுவிட்டு அவரிடம் போ. நான் இந்த இரண்டு துன்பங்களையும் சேர்த்துச் சகிக்க முடியாது.

**1248. பரிந்தவர் நல்காரென்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு.**

(இதைக்கேட்ட மனம் உடனே காதலரிடம் போகப் புறப்பட்டது. அதை அவள் ஏளனம் செய்கிறாள்.) அவசரமாக ஆசைகொண்டு நம்மை நாடி வரமாட்டாரென்று ஏக்கம் அடைந்து நம்மைப் பிரிந்து இப்படி அலட்சியமாக இருக்கிற அவரை நாடி, (பெண்களுக்குச் சிறப்பான நாணத்தைவிட்டு) நீ அவரிடம் போகப் புறப்பட்டுவிட்டாயே. மனமே! உனக்கு என்ன மடத்தனம்!

**1249. உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு.**

மனமே! நம்மீது காதலுள்ளவர் நம் மனத்திலிருக்கும் காதலர். காதலுள்ள இவரை விட்டுவிட்டு நீ யாரைத் தேடிப் புறப்பட்டுவிட்டாய்?

**1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழந்தும் கவின்.**

(நம் மனத்திலிருக்கிற இவர் போதும்; நம்மைவிட்டுப் போயிருக்கிற அவரை நினைக்க வேண்டா.) நம் அருகில் இருக்காமல் நீங்கியிருக்கிற அவரை மனத்தில் வைத்துக் கொண்டே ஏங்கியிருந்தால் உறுப்பு நலமெல்லாம் கெட்ட தோடு, உடல்நலமும் இன்னும் கெட்டுப்போகும்.

# 126. நிறையழிதல்

*1251. காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்*
*நாணுத்தாழ் வீழ்த்த கதவு.*

(ஆண்களை விடப் பெண்களுக்குக் காமத்தை அடக்கியாளும் நிறை என்ற குணம் இயல்பாக உள்ளது. அது நாணத்தோடு கூடிய தன்னடக்கம். அந்தப் பெண்மைச் சிறப்பையும் பிரிவாற்றாமை கெடுத்துவிட்டதைக் காதலி சொல்லுகிறாள்;) காமம் என்கிற கோடரி நாணம் என்ற தாழ்ப்பாளிட்டு மூடப்பட்டிருக்கிற நிறை என்னும் கதவை உடைத்து விடுகிறது.

*1252. காம மெனவொன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை*
*யாமத்தும் ஆளும் தொழில்.*

இரக்கம் என்பதே இல்லாமல் நடுராத்திரியிலும் இந்தக் காமவேதனை என் மனத்தை ஆண்டு அடிமை கொள்ளுகிறதே! எனக்கு இதுதானா வேலை?

*1253. மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்*
*தும்மல்போல் தோன்றி விடும்.*

நானோ என் காமத்தை அடக்கிதான் வைக்கிறேன். ஆனால் அது எச்சரிக்கையில்லாமல் திடீரென்று தும்மல் வருவதுபோல் அடக்கவே முடியாதபடி வந்துவிடுகிறதே! என்ன செய்வேன்?

*1254. நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்*
*மறையிறந்து மன்று படும்.*

நான், 'காமத்தை அடக்கும் திறமையுடையவள்' என்று சொல்லிக் கொண்டிருக்கிற அப்போதே என் காமம் மறைவிடத்திலிருந்து வெளியே வந்து என் சொல்லைப் பொய்யாக்கி விடுகிறது!

*1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்*
*உற்றார் அறிவதொன்று அன்று.*

நமக்குத் தீமை செய்துவிட்ட ஒருவரிடமே போய் அவருடைய உதவியை நாடி வணங்கக்கூடாது என்ற மேலான குணம் காம நோய் கொண்டுவிட்டவர்களுக்கு இராதோ?

**1256. செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ**
**எற்றென்னை உற்ற துயர்.**

துன்பம் செய்தவரிடத்திலேயே போய் அடைக்கலம் புகச்சொல்லி ஆசை மூட்டுகிறதே, அம்மா! எனக்கு வந்துவிட்ட இந்தக் கவலை எப்படிப்பட்ட விசித்திரமான கவலையாக இருக்கிறது!

**1257. நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்**
**பேணியார் பெட்ப செயின்.**

என்னைப் போலவே என் காதலரும் காம ஆசையோடு என்னைப் புணர்ந்து என் ஆசையைப் பூர்த்தி செய்கிறபோது இந்த நாணத்தை மட்டுமா; மற்ற எல்லாவற்றையுமே மறந்துவிடுகிறேனே! (அது ஏன்?)

**1258. பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்**
**பெண்மை உடைக்கும் படை.**

(நான் என்ன செய்வேன்?) மிகவும் ஓரவஞ்சகனான (மறைந்து நின்று பாணம் விடுகிற) கள்ளனாகிய மன்மதனுடைய கட்டளையல்லவா என் அடக்கத்தை (இப்படி) உடைக்கிற கோடரி (ஆகிவிட்டது)?

**1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்**
**கலத்த லுறுவது கண்டு.**

(காதலர் வந்துவிட்டால் இந்த வருத்தமும் நிந்தனையும் ஒழிந்துவிடும். முன்னே இப்படி அவர் பிரிந்திருந்து வந்தபோது) அவரிடம் பிணங்கிக் கொள்ளவேண்டுமென்று அவர் முன் போனேன். ஆனால் அவரைக் கண்டவுடன் என் மனம் அவரைப் புணர விருப்பங்கொண்டுவிட்டது. அதைக் கண்டு நான் அவரைத் தழுவிக் கொண்டேன்.

**1260. நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ**
**புணர்ந்தூடி நிற்பேம் எனல்.**

(தழுவிக்கொண்ட பின் பிணங்குவதெப்படி?) பிணங்க வேண்டு மென்ற உறுதியுடன்தான் நான் போனேன். ஆனால் கொழுப்பை நெருப்பில் போட்டதுபோல், காம வெப்பத்தால் உருகிக் கொண்டிருக்கிற மனமுடையவர்க்குத் தழுவிக் கொண்ட பின் பிணங்கி நிற்பதும் முடியுமா?

# 127. அவர்வயின் விதும்பல்

***1261.*** ***வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற***
***நாளொற்றித் தேய்ந்த விரல்.***

*(நிறையழிந்த காதலி காமம் மேலிட்டுக் காதலனை வேகமாக நினைத்துச் சொல்லுகிறாள்:) அவர் என்னைப் பிரிந்துள்ள நாட்களை விரல்விட்டு எண்ணியெண்ணி என் விரல்களும் தேய்ந்துவிட்டன. என் கண்களும் அழுதழுது பிரகாசமில்லாமல் வறண்டு போய்விட்டனவே!*

***1262.*** ***இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்***
***கலங்கழியும் காரிகை நீத்து.***

*(தோழீ! அவரை மறந்திருக்கச் சொல்லுகிறாயே!) ஒளி வீசும் ஆபரணங்களை அணிந்துள்ள சகியே! நான் என் காதலரை மறப்பேனானால் தொளதொளப்பாகவேனும் என் கைகளில் இருந்து கொண்டிருக்கிற வளையல்கள் விழுந்தேவிடும்.*

***1263.*** ***உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்***
***வரல்நசைஇ இன்னும் உளேன்.***

*வாழ்க்கைக்கு உரம் தரக்கூடிய பொருள் தேடும் ஆசையுடன் போயிருக்கிற என் காதலர் வருவார் என்ற ஆசை கொண்டு, அந்த ஆசைக்கு என் மனம் துணையாக அவரை அது மறக்காமல் இருப்பதனால்தான் நான் உயிரோடிருக்கிறேன்.*

***1264.*** ***கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்***
***கோடுகொ டேறும்என் நெஞ்சு.***

*பிரிந்திருக்கும் என் காதலர் வரவை விரும்பி நினைக்கும் போதெல்லாம் உண்டாகிற காம இன்பத்தை ஆதரவாகக் கொண்டுதான் என் மனம் கவலை நீங்கித் தைரியமடைகிறது.*

***1265.*** ***காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்***
***நீங்கும்என் மென்றோள் பசப்பு.***

*காதலரை என் கண்ணின் ஆசை தீர நான் கண்டு விட்ட உடனே என் மேனியின் மெலிவும் பசப்பும் நீங்கி விடுவதை நீயே பார்க்கப் போகிறாய் (தோழீ)!*

**1266. வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்**
**பைதல்நோய் எல்லாம் கெட.**

கணவர் மட்டும் வந்துவிடட்டும், இந்த வேதனை மிகுந்த காமநோயும் அதையொட்டிய எல்லாத் துன்பங்களும் ஒரே நாளில் ஒழிந்துபோகும்படியான மருந்தைக் குடித்துப் பரிகாரம் செய்து கொள்ளுகிறேன் பார்.

**1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்**
**கண்அன்ன கேளிர் வரின்.**

கண்ணான என் காதலர் வந்துவிட்டால் தாமதித்து வந்ததற்காகப் பிணங்குவேனா? அல்லது பிணக்கமும் ஆசையும் கலந்து தடுமாறுவேனா? தெரியவில்லையே!

**1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து**
**மாலை அயர்கம் விருந்து.**

(அயலூரிலிருக்கிற காதலனும் அதேசமயம் காதலியைப் பற்றி நினைக்கிறான்; ) மேற்கொண்டு வந்த வேலையை வெற்றியுடன் முடித்து விட்டு அரசனிடம் விடைபெற்று வீட்டுக்குப் போய் மனைவியுடன் மாலை விருந்தாகிய காமக் கலவியின்பத்தைச் சலிக்கச் சலிக்க அனுபவிக்க வேண்டும்.

**1269. ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்**
**வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.**

தூரதேசம் போயிருக்கிற கணவன் திரும்பிவரும் நாளை நினைத்து ஏங்கும் மனைவிக்கு ஒருநாள் போவது ஏழுநாட்கள் போல இருக்கும். (அதனால் நான் விரைந்து போகவேண்டும்.)

**1270. பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்**
**உள்ளம் உடைந்துக்கக் கால்.**

என்னுடைய ஏக்கத்தால் என் மனைவி மனமுடைந்தவளாகி அவளுக்கு ஏதேனும் கெடுதி உண்டாகிவிட்டால், நான் வந்த காரியத்தில் வெற்றி பெற்றுத்தான் என்ன பயன்? அதற்காக மன்னனிடம் பரிசும் பணமும் பெற்று விட்டால் தான் என்ன பயன்? அந்தச் செல்வங்களுடன் மனைவியிடம் போய்த்தான் என்ன பயன்?

## 128. குறிப்பறிவுறுத்தல்

1271. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்க லுறுவதொன்று உண்டு.

(காதலன் மனைக்குத் திரும்பியதும் காதலியின் நிலைமையை உணர்கிறான்.) நீ சொல்லாமல் மறைத்தாலும் அதை மறுத்து உன்னுடைய கண்கள் உன்னை மீறி என்னிடத்தில் சொல்லுகிற சேதி ஒன்று இருக்கிறது.

1272. கண்நிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது.

கண்ணைக் கவரும் அழகும் மூங்கிலைப் போன்ற மினுமினுப்புள்ள தோள்களும் உள்ளவளாக இருந்த இவள் இவ்வளவு மங்கியிருக்கிறாளே! இவளுக்குப் பெண்களின் சிறப்பான நிறையுடைமை என்ற குணம் அதிகமாக இருக்கிறது. அதனால் மிக்க வேதனை சகித்திருக்கிறாள் என்று தெரிகிறது.

1273. மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன்று உண்டு.

கோத்த மணிவடத்தில் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் நூல் இருப்பது நிச்சயம் என்பதுபோல இவள் அணிகளால் தெளிவாகத் தெரியக்கிடக்கிற உண்மை ஒன்றுண்டு.

1274. முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன்று உண்டு.

(என்னை மகிழ்ச்சியுடன் வரவேற்காமல் கோபித்தவள் போல் நிற்கிறாளானாலும்) இதழ் விரியாவிடினும் மலரப் போகிற பூ மொட்டின் உள்ளேயிருக்கிற மணம் வெளியிலும் வீசுவது போலப் பல் தெரியாதபடி குவிந்திருக்கிற இவளுடைய உதடுகளுக்குள்ளே சிரிப்பு இருக்கிறது எனக்குத் தெரிகிறது.

1275. செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கு மருந்தொன்று உடைத்து.

ஒன்றோடொன்று மோதிக் குலுங்கும் வளையல்களையுடைய இவளது துன்பம் சகிக்கும் தன்மை, எனக்கு வரும் துயரைத் தீர்க்கக்கூடிய சமய சஞ்சீவியாக உதவும்.

**1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி**
**அன்பின்மை சூழ்வது உடைத்து.**

மிகுந்த துன்பங்களைச் சகித்துக் கொண்டிருந்த வருத்தத்தால் முன்போல் ஆசையோடு வந்து தழுவிக் கொள்ளாமல் இப்படி நிற்பது, என்னுடைய அன்பில்லாமையை இடித்துக் கூறுவது போன்றிருக்கிறது.

**1277. தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்**
**முன்னம் உணர்ந்த வளை.**

(இப்போது காதலி அவனைப் பற்றி எண்ணிக் கொள்ளுகிறாள்:) அன்புள்ள காதலர் என்னைவிட்டுப் பிரிந்துபோனார் என்பதை எனக்கும் முன்னால் அறிந்தவை என் வளையல்களே. (என் மெலிவை இவ்வளையல்களே காட்டும்.)

**1278. நெருநற்றுச் சென்றாரெம் காதலர் யாமும்**
**எழுநாளேம் மேனி பசந்து.**

என் காதலர் என்னைவிட்டுப் பிரிந்த மறுநாளே ஏழுநாள் பிரிந்திருந்தது போல என் மேனி பசந்துவிட்டது. இவர் எவ்வளவு நாள் பிரிந்திருந்துவிட்டார் என்ற கணக்கை என்மேனிப் பசப்பின் அளவே காட்டும்.

**1279. தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி •**
**அஃதாண்டு அவள்செய் தது.**

(காதலி பேசாமல்) தளர்ந்த தன் கை வளையல்களைப் பார்த்து, மெலிந்துபோன தன் கைகளையும் பார்த்ததும், தலைகுனிந்து தன் பாதங்களைப் பார்த்தாள். அவ்வளவே. (அதற்கு மேல் ஒன்றும் செய்யவுமில்லை; சொல்லவுமில்லை.)

**1280. பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப கண்ணினால்**
**காமநோய் சொல்லி இரவு.**

(அவள் குறிப்பை உணர்ந்த காதலன் அவளைப் பாராட்டுகிறான்.) வாய் பேசாமல் கண் பார்வையினாலேயே தன்னுடைய காம வேதனையைத் தெரியப்படுத்தி அவ்வேதனையைத் தீர்க்கும்படி வணங்கிக் கேட்டுக்கொள்ளுகிற குணமுள்ள பெண்ணினால்தான் பெண்ணினத்துக்கே பெருமை உண்டாகிறது என்று சொல்லப்படுவது உண்மைதான்.

# 129. புணர்ச்சி விதும்பல்

**1281. உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு.**

(காதலி தன் தோழியிடம் சொல்லிக்கொள்கிறாள்:) நினைக்கும் போதே வெறி மூட்டும் குணமும் கண்டவுடனே மகிழ்ச்சியுண்டாக்கும் தன்மையும் கள்ளுக்கு இல்லை; காமத்துக்கே உண்டு. (கள்ளைக் கண்டால் அருவருப்பே உண்டாகும்; காதலரைக் கண்டால் மகிழ்ச்சி வருகிறது.)

**1282. தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்**
**காமம் நிறைய வரின்.**

நெடுநாள் பிரிவினால் பனைபோல் வளர்ந்துவிட்ட காமமெல்லாம் இப்போது சேர்ந்து வருவதால் தினையளவேனும் தாமதிக்காமல் புணரவேண்டுமென்ற ஆசை உண்டாகிறது.

**1283. பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்**
**காணாது அமையல கண்.**

என் விருப்பத்தை மதிக்காமல் தாம் விரும்பியபடியே தாமதித்து வந்தவரானாலும் அவரைப் பார்த்துக் கொண்டேயிருக்க ஆசைப்பட்டு என் கண்கள் அமைதியாக இருக்க மறுக்கின்றன.

**1284. ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து**
**கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு.**

தோழீ! அவரிடம் என் வருத்தத்தைக் காட்டிக் கொண்டு பிணங்க வேண்டுமென்றுதான் அவர் முன் போனேன். ஆனால் அவரைக் கண்டவுடனே என் நெஞ்சம் அதை மறந்துவிட்டுப் புணர்ச்சியை விரும்பிவிட்டது.

**1285. எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட விடத்து.**

கண்ணுக்கு மையெழுதும்போது கண்ணுக்கு வெகு சமீபத்தில் இருப்பதால் அஞ்சனக்கோல் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதுபோல் காதலர் எனக்கு வெகு அருகில் வந்துவிட்டால் அவருடைய குற்றங்கள் எனக்குத் தெரிவதில்லை.

*1286. காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்*
*காணேன் தவறல் லவை.*

(அது மட்டுமல்ல,) காதலர் நான் காண என் அருகிலேயே இருக்கும்பொழுது அவரிடம் ஒரு குற்றமும் காண முடியவில்லை. ஆனால் அவர் என்னைவிட்டுப் பிரிந்துவிட்டபோது அவர் செய்வதெல்லாம் குற்றமாகவே தோன்றுகிறது.

*1287. உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்*
*பொய்த்தல் அறிந்தென் புலந்து.*

கரையேற்றிவிட ஆள் இருப்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டு 'முழுகி இறந்து போகிறேன்' என்று மருட்டுவதற்காக நீரில் குதித்து விடுகிறவர்களைப் போலப் பிணங்குவது பொய்யாகிவிடும் என்பது தெரிந்தும் பிணங்கி என்ன பயன்?

*1288. இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்*
*கள்ளற்றே கள்வநின் மார்பு.*

(பிறகு கணவனிடம் வலியப் பேசுகிறாள்:) திருடரே! நீர் இவ்வளவு நாளாகப் பிரிந்திருந்து, பிறர் என்னை ஏளனம் பண்ணும்படி பல துன்பம் எனக்கு உண்டாக்கிவிட்டாலும், துன்பமுண்டாக்கும் கள்ளின் மேலேயே குடியருக்கு ஆசை உண்டாவதுபோல உங்கள் மீது எனக்குக் காமம் அதிகரிக்கிறது!

*1289. மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்*
*செவ்வி தலைப்படு வார்.*

(கணவன் சொல்லுகிறான்:) காம இன்பம் மலரைவிட நுட்பமானது. ஆனால் அதன் பக்குவ காலமறிந்து அனுபவிக் கிறவர்கள் உலகத்தில் வெகு சிலரே. (அவசரப்பட வேண்டா; பொறு.)

*1290. கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்*
*என்னினும் தான்விதுப் புற்று.*

(அதைக் கேட்ட காதலி வருந்த, காதலன் தனக்குள் சொல்லுகிறான்:) நான் சொல்லுவதைக் கேட்டு இவள் வருந்துகிறாள். இயல்பாகப் புணர்ச்சிக்குத் துடிப்புக் காட்ட வேண்டிய ஆணாகிய நான் பொறுத்திருக்க, பொறுக்கும் இயல்புடைய பெண்ணாகிய இவள் என்னைவிட அவசரப் படுகிறாளே! அவ்வளவு காம வேதனை அடைந்திருக்கிறாள் போலும்!

# 130. நெஞ்சொடு புலத்தல்

**1291. அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது.**

(காதலன் பொறுக்கும்படி சொல்லி விட்டதில் வெட்கமடைந்து திரும்பி வந்த காதலி வருத்தத்துடன் பிணங்கிக் கொள்ள விரும்பினாள். ஆனால் அவளுடைய மனம் மீண்டும் காதலரிடமே சென்றது. அதற்காகத் தன்னுடைய மனத்தைக் கண்டிக்கிறாள்:) மனமே! அவருடைய மனம் அவருக்கு அடங்கியிருப்பதைப் பார்த்தாய். பார்த்தபின்னும் நீ அதைப்போல் எனக்கு அடங்கி நடக்க மறுப்பது ஏன்?

**1292. உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு.**

என்னுடைய மனமே! அவருக்கு நம்மிடத்தில் ஆசையில்லையென்பதைக் கண்டுவிட்ட பின்னும் அவர் நம்மை வெறுக்கமாட்டார் என்று அவரிடமே போகின்றாயே!

**1293. கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல்.**

மனமே! நீ என்னை மதிக்கால் உன் விருப்பத்தின்படி அவரிடமே அடைக்கலம் புக ஓடுவது, ஏழையாகி விட்டவர்களை உற்றார் உறவினரும் கைவிட்டு விடுவார்கள் என்ற உண்மையைச் சேர்ந்ததோ!

**1294. இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.**

(இனிமேல் உன்னை நம்பக்கூடாது.) அவர் நம்மை அவமதித்து விட்டதற்காக அவருடன் பிணங்கிக் கொள்ள வேண்டுமென்று நீதான் கோபங்கொண்டு எனக்கு யோசனை சொன்னாய். இப்போது நீ அதன்படி நடக்காமல் என்னை விட்டுவிட்டு அவரிடம் ஓடுகிறாய். இனி உன்னை நம்பக்கூடாது.

**1295. பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு.**

காதலர் இல்லாதபோது அவர் வரவில்லையே என்று கவலைப்படச் செய்கிறது. (இந்த மனம்) வந்துவிட்டால் பிரிந்துவிடுவாரோ என்று

கவலைப்படச் செய்கிறது. என்னுடைய நெஞ்சம் எனக்கு ஓயாத துன்பமுண்டாக்குவதாக இருக்கிறது.

**1296. தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்**
**தினிய இருந்ததுஎன் நெஞ்சு.**

என் மனம் காதலரை மறந்து என்னுடன் தனியே இருந்தபோது என்னைக் கொன்றுவிடும்போல் இருந்தது.

**1297. நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்**
**மாணா மடநெஞ்சிற் பட்டு.**

காதலரைச் சிறிதுகூட மறக்க முடியாததாகிவிட்ட என் புத்திகெட்ட அற்ப மனசோடு சேர்ந்து நான் மானங் கெட்டவளாகி விட்டேனே!

**1298. எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்**
**உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.**

(என்மனம் ஏன் என் காதலரை மறக்க மாட்டே னென்கிறதென்றால்,) உயிரின்மேல் மிகுந்த பற்றுள்ள என் மனம் காதலரை மறந்தால் உயிர் போய்விடுமென்று அஞ்சி எப்போதும் அவரைப் பற்றியே நினைத்துக் கொண் டிருக்கிறது.

**1299. துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய**
**நெஞ்சம் துணையல் வழி.**

ஒருவருக்குத் துன்பம் வந்துவிட்டால் சமயத்தில் அவருடைய மனமே அவருக்கு உதவாவிட்டால் மற்ற யார் உதவி செய்யப்போகிறார்கள்? (நீயே சொல்லு, என் மனமே!)

**1300. தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய**
**நெஞ்சம் தமரல் வழி.**

(சொந்த மனமே கைவிட்ட ஒருவரை நிச்சயமாக மற்றவர்கள் மதிக்க மாட்டார்கள்.) ஒருவருக்கு அவருடைய மனமே உதவியற்றதாகிவிட்டால் மற்ற யாரும் உதவி செய்ய மாட்டார்கள். ஆதலால், என் மனமே எனக்கு நீதான் உதவி செய்ய வேண்டும். நான் உன் அடைக்கலம்.

# 131. புலவி

**1301 புல்லா திராஅப் புலத்தை அவர்உறும்**
**அல்லல்நோய் காண்கம் சிறிது.**

(காதலனிடம் பிணங்கிக் கொண்டவள் போல் காதலி படுத்திருக்க, காதலன் அவளை நாடி வருகிறான். காதலி யைத் தழுவுகிறான். அப்போது அவள் தன்னுள் சொல் கிறாள்;) மனமே! இவரைத் தழுவாமல் பிணங்கியபடியே இருப்பாயாக. (நம்மை இவ்வளவு பாடுபடுத்திய) இவர் காம வேதனையால் படும்பாட்டைச் சிறிது வேடிக்கை பார்க்கலாம்.

**1302. உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது**
**மிக்கற்றால் நீள விடல்.**

(கலவியில்) பிணங்குவது உணவுக்கு உப்பு சேர்ப்பது போலச் சுவை தருவது. ஆனால் அந்தப் பிணக்கத்தை அளவு கடந்து நீளவிட்டால் அந்த உப்பு அதிகமாகிவிட்ட உணவுபோல் சுவை கெட்டுப்போகும்.

**1303. அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்**
**புலந்தாரைப் புல்லா விடல்.**

பிணங்கிய என்னை என் காதலர் பிணக்கம் தீர்த்துப் புணராமலேயே இருந்துவிடுவாரானால் மிகவும் நொந்து போயிருக்கிற என்னை இன்னும் நோகச் செய்துவிடுமே!

**1304. ஊடி யவரை உணராமை வாடிய**
**வள்ளி முதலரிந் தற்று.**

பிணங்கியிருக்கும் என் பிணக்கத்தைத் தீர்த்து என் காதலர் என்னைப் புணராமல் இருந்துவிட்டால் அது நீரில்லாமல் ஏற்கெனவே வாடிப்போயிருக்கிற ஒரு பூங்கொடியை வேரறுத்த மாதிரியாகும். (நான் இறந்தே போவேன்.)

**1305. நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை**
**பூஅன்ன கண்ணா ரகத்து.**

(ஆனால் என் காதலர் அப்படி என்னை வேரறுத்து விடமாட்டார். மலர் போன்ற கண்களையுடைய மனைவியின் பிணக்கத்தில் அவளிடம் காதலுள்ள கணவனுக்கும் இன்பமுண்டு. (என் கணவர் என்மீது காதல் உள்ளவர்.)

**1306. துனியும் புலவியும் இல்லாயின் காமம்**
**கனியும் கருக்காயும் அற்று.**

பிரிவினாலுண்டாகும் வேதனையும் புணரு முன் பிணங்குவதும் இல்லாவிட்டால், காமம் என்பது குழைந்து போன பழத்தைப்போல் சுவை கெட்டுப்போனதும் பச்சைப் பிஞ்சைப்போல் சுவை இல்லாததும் ஆகிவிடும்.

**1307. ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது**
**நீடுவ தன்றுகொல் என்று.**

(பிணங்குவது சுவை தருவதென்றாலும்) பிணங்குவதிலும் ஒரு துன்பம் இருக்கிறது. என்னவெனில், பிணங்கியிருந்தால் அவர் தாமதித்துப் புணருவாரோ அல்லது புணராமலேயே இருந்து விடுவாரோ என்று ஏங்கிக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

**1308. நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்**
**காதலர் இல்லா வழி.**

என் வேதனைகளை உணர்ந்து என் பிணக்கத்தை நீக்கிப் புணர்ந்து என் துன்பங்களைப் போக்கவேண்டுமே என்ற இரக்கம் என் காதலருக்கு இல்லாதபோது நான் பிணங்கி வெறுந்துன்பமடைவதில் என்ன பயன்?

**1309. நீரும் நிழலது இனிதே புலவியும்**
**வீழுநர் கண்ணே இனிது.**

நம்முடைய உருவத்தைத் திருப்பி எதிர் உருவாக நிழல் காட்டக்கூடிய தண்ணீர்தான் நல்ல தண்ணீர். அதைப் போல ஒருவருக்கொருவர் ஒத்த எதிர்விருப்பம் காட்டக் கூடிய காதலன் காதலியாகிய இருவருக் கிடையில்தான் நல்ல காம இன்பம் இருக்கும்.

**1310. ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்**
**கூடுவேம் என்பது அவா.**

(காதலி ஏங்குகிறாள்; ) இவ்வளவு நேரமாக என்னைப் பிணக்கத்தில் வாடவிட்டிருக்கிற காதலர் என்னைப் புணர்வார் என்ற ஆசை எனக்கு விட்டுப்போய்விட்டது. ஆனால் என் மனம் இன்னும் ஆசைப்படுகிறது.

# 132. புலவி நுணுக்கம்

***1311. பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்***
***நண்ணேன் பரத்தநின் மார்பு.***

(அப்போது காதலன் அவளைத் தழுவுகிறான். அவள் பிணங்கிச் சொல்கிறாள்;) தம்மைப் பார்க்கிற ஆண்களுக்கு ஆசை மூட்டத் தம் அழகைக் காட்டிக்கொள்ளும் வேசிகளைப் போலப் பார்க்கிற பெண்களுக்கெல்லாம் ஆசை மூட்டும் அழகுடையவரே! உம்மைத் தழுவேன்.

***1312. ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை***
***நீடுவாழ் கென்பாக்கு அறிந்து.***

(அவள் விலகிப் படுத்துக்கொள்ளும்போது காதலன் தும்ம, தனக்குள் அவள் சொல்கிறாள்:) நான் அவருடன் பேசாமல் பிணங்கியிருக்கிற சமயத்தில் அவரை 'உங்களுக்கு நூறு வயசு' என்று வாழ்த்தி அப்படியாவது பேசுவேனாக்கும் என்று தும்முகிறார். நான் பேசுவேனோ?

***1313. கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்***
***காட்டிய சூடினீர் என்று.***

(காதலன் சொல்கிறான்:) நான் ஒரு பூமாலையைச் சூடிக் கொண்டாலும் அதை யாரோ வேறொருத்திக்குக் காட்ட சூடிக் கொண்டதாகப் போகித்துப் பிணங்குகிறாளே!

***1314. யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்***
***யாரினும் யாரினும் என்று.***

(அதைக் கண்டு நான்) அது வேறு யாருக்கும் காட்டச் சூடினதன்று. நான் மற்ற யாரயையும் நேசிப்பதைவிட உன்னைத்தான் அதிகமாக நேசிக்கிறேன். அதற்கு உடனே அவள், "யாரையும்விட யாரையும்விட என்னை நேசிக்கிறீர்கள்!" என்று பதறிவிட்டாள்.

***1315. இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றெனாக்***
***கண்ணிறை நீர்கொண் டனள்.***

(அதைக் கண்ட நான்) "நான் வேறு பெண்களைக் காதலிப்பவனல்லன். இந்தப் பிறப்பில் உன்னைவிட்டுப் பிரிந்து வேறெங்கும் போய்விட மாட்டேன்" என்றேன். அதற்கு அவள் (இந்தப் பிறப்பில்

பிரியமாட்டேனென்றால் இனி வரும் பிறப்புக்களில் நான் அவளை விட்டுப் பிரிந்து விடுவேனோ என்று வருந்தி) நிறையக் கண்ணீர்விட்டு அழுதுவிட்டாள்.

**1316. உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்**
**புல்லாள் புலத்தக் கனள்.**

"நான் வெளியூர்களில் இருந்தபோது உன்னை நினைத்துக் கொண்டேன்" என்றேன். அதற்கு அவள் "இவ்வளவு சொல்கிறீர்களே! ஏன் இடையில் மறந்தீர்கள்?" என்று சொல்லி என்னைத் தழுவ வந்தவள் பிணங்கி விட்டாள்.

**1317. வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்**
**யாருள்ளித் தும்மினீர் என்று.**

அவள், "ஏன் மறந்தீர்?" என்று சொல்லும்போது நான் தும்மினேன். அதற்குள் அவள், "யாரோ ஒருத்தி உம்மை நினைக்கிறாள். அதனால்தான் தும்மினீர். அப்படி உம்மை நினைப்பது யார்?" என்று பிணங்கினாள்.

**1318. தும்மச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று.**

(இன்னொரு தும்மல் வரவே, அதை அடக்கினேன். அப்போது) "உமக்குப் பிரியமான யாரோ உம்மை நினைக்கிறதை ஒளிக்கவே தும்மலை அடக்குகிறீரோ?" என்று அழுதாள்.

**1319. தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்**
**இந்நீரர் ஆகுதிர் என்று.**

("அப்படியில்லை" என்று சமாதானம் சொல்லி) அவளையே புகழ்ந்து பேசினாலும், "மற்றவர்களிடத்திலும் நீர் இப்படித்தானே பேசுவீர்" என்று கோபித்து, மேலும் பிணங்குகிறாள்.

**1320 நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்**
**யாருள்ளி நோக்கினீர் என்று.**

அவளைப் பற்றியே நினைத்துக்கொண்டு சும்மா இருந்து விட்டு அவளைப் பார்த்தேன். அதற்கும் அவள், "இவ்வளவு நேரமாக யாரை நினைத்துக் கொண்டிருந்து விட்டு இப்போது என்னைப் பார்க்கிறீர்?" என்று கோபிக்கிறாள்.

# 133. ஊடலுவகை

*1321. இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்*
*வல்லது அவர்அளிக்கு மாறு.*

(பிறகு புணர்ச்சிக்கு இசைகிற காதலி தனக்குள் நினைக்கிறாள்:) காதலரிடத்தில் ஒரு குற்றமும் இல்லை. ஆனாலும் நான் குற்றங்களைக் கற்பித்துப் பிணங்கினது புணர்ச்சிக்கு அவருக்கிருந்த ஆசைக்கு நிகராக எதிராசையினால் செய்ததுதானே; அதிலென்ன தவறு?

*1322. ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி*
*வாடினும் பாடு பெறும்.*

பிணங்குவதால் அன்பு வாட்டமுற்றதுபோல் இருந்தாலும் அந்தப் பிணக்கத்தின் பயனாகப் பின்னால் அனுபவிக்கும் புணர்ச்சி மிகவும் இன்பமுள்ளதாக இருக்கிறது.

*1323. புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு*
*நீரியைந் தன்னா ரகத்து.*

நிலவளமும் நீர்வளமும் ஒன்றுக்கொன்று குறையாமல் சேர்ந்ததுபோல் மனமொத்த காதலனும் காதலியும் சேர்ந்து அனுபவிக்கும் இன்பத்தைப் போன்ற இன்பம் தேவலோகத்திலுங்கூடக் கிடைக்காது.

*1324. புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்*
*உள்ளம் உடைக்கும் படை.*

புணர்ந்து காமநோயைத் தீர்த்துவிடாமல் வெறும் பிணக்கத்திலிருந்த போது என் மனத்தைக் கோடரி கொண்டு பிளப்பதைப் போன்ற வேதனை இருந்தது. (இப்போது இல்லை).

*1325. தவறில ராயினும் தாம்வீழ்வார் மென்றோள்*
*அகறலி னாங்கொன்று உடைத்து.*

(புணர்ச்சி முடிந்ததும் காதலியின் மீது மயங்கிப் படுத்திருந்த காதலன் அவளை விட்டுப் பிரிந்து தனியே படுக்கிறான். தனக்குள் சொல்கிறான்:) காதலி விரும்பா விட்டாலும் புணர்ச்சி முடிந்தபின் தான் விரும்புகின்ற அவளுடைய மிருதுவான தோள்களைத் தழுவிக் கொண்டிருப்பதை விட்டுத் தானாகவே காதலன் விலகிவிடுவதில் ஒரு நன்மை உண்டு.

**1326. உணலினும் உண்டது அறல்இனிது காமம்**
**புணர்தலின் ஊடல் இனிது.**

அடுத்தடுத்து உண்ணாமல் முன்னே உண்ட உணவு சீரணிக்கும்வரை மறுபடியும் உண்ணாமலிருப்பதே ஆரோக்கியத்துக்கு அவசியமானதுபோல, அடுத்தடுத்துப் புணராமல் முன் புணர்ந்த அலுப்புத் தீரும்வரை மீண்டும் புணராமல் பிரிந்திருப்பதே காம இன்பத்துக்கு அவசியமானது.

**1327. ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்**
**கூடலில் காணப் படும்.**

புணர்ந்து பிரிந்திருக்கும் இருவருக்குள் யார் மறு புணர்ச்சிக்கு அவசரப்படுகிறாரோ அவர் தோற்றவர். அவர் மறு புணர்ச்சியில் நீடித்த இன்பம் அனுபவிக்க முடியாது. அதை அந்த மறுபுணர்ச்சியில் கண்டுகொள்ளலாம். (வெகு நேரம் பிரிந்திருப்பது நல்லது.)

**1328. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலில் தோன்றிய உப்பு.**

முன் புணர்ந்ததனால் உடல் வேர்க்கும்படி உண்டான அலுப்புத் தீருவதும் வெளியாகிக் குறைந்துவிட்ட சீவ சத்தான இந்திரியம் ஊறுவதும் பிரிந்திருப்பதனால்தான் பெற முடியும்.

**1329. ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப**
**நீடுக மன்னோ இரா.**

(எவ்வளவு காலம் பிரிந்திருந்தாலும் அவ்வளவும் நல்லதுதான்.) காதலி இனிமேல் பிணங்கியே இருக்கட்டும். அந்தப்பிணக்கம் இரவு முழுதும் நீடிக்க வேண்டுமென்று நான் வேண்டிக் கொள்கிறேன்.

**1330. ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்.**

காமத்துக்கு இன்பம் தருவதே பிரிந்திருப்பதுதான். அப்படிப் பிரிந்திருந்தவர்கள் இன்பமடைவது இருவருக்கும் சமமான காம ஆசை ஊறியபின் புணரும்போதுதான். ஒருவர் அலுத்திருக்கும்போது மற்றவர் தொந்தரவு செய்யக்கூடாது.

